# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

## FIRST SESSION OF THE THIRD LEGISLATIVE ASSEMBLY UNDER THE CONSTITUTION OF INDIA.

---

**Tuesday, the 24th April 1962.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. SRI S. CHELLAPANDIAN) in the Chair.

### I.—OBITUARY REFERENCE.

MR. SPEAKER : இச் சபையின் முன்னாள் உறுப்பினர்களாக இருந்த திரு. ஜி. அண்ணாமலை முத்துராஜா, டாக்டர் பி. எஸ். ஸ்ரீநிவாசன், திரு. எ. காளேஸ்வர ராவ் ஆகியோரின் மறைவு குறித்த செய்தியை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

திரு. ஜி. அண்ணாமலை முத்துராஜா அவர்கள், 1902-ம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 15-ம் நாள் பிறந்தார். திருச்சிராப்பள்ளி அருசன் நடுநிலைப் பள்ளியில் கல்வி பயின்றார். மாவட்டக் காங்கிரஸ் குழுவின் உறுப்பினராகவும், திருச்சிராப்பள்ளி நகராட்சியின் முன்னாள் தலைவராகவும், திருச்சிராப்பள்ளி மாவட்ட வணிகர்கள் சங்கத்தின் தலைவராகவும், திருச்சிராப்பள்ளி நகராட்சிக் கவுன்சிலராகவும், சமாதான அமைப்புத் தலைவராகவும், 1957-62 வரை இச் சபையின் உறுப்பினராகவும் இருந்து நல்ல முறையில் பணியாற்றி உள்ளார்கள். இவர், 1962 ஜனவரி 27-ம் தேதி மறைந்தார்.

டாக்டர் பி. எஸ். ஸ்ரீநிவாசன் அவர்கள், 1893-ம் ஆண்டில் பிறந்தார். மருத்துவப் படிப்பை முடித்தபின், அரசாங்கப் பணியில் இரண்டாண்டுக்காலம் இருந்தார். காஞ்சிபுரத்தில் சொந்தத்தில் மருத்துவத் தொழிலைத் துவக்கி, அங்கேயே தங்கினார். கடந்த 25 ஆண்டு காலமாக காங்கிரஸ் நடவடிக்கைகளில் தீவிரப் பங்கு ஏற்றிருந்தார். 1937-ல் தமிழ்நாடு சட்டசபையின் உறுப்பினராயிருந்தார். 1949-ல் செங்கற்பட்டு பொதுத் தொகுதியிலிருந்து தமிழ்நாடு சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். காஞ்சிபுரம் நகராட்சிக் கழகத்தின் தலைவராகச் சில ஆண்டுகள் இருந்து, நல்ல முறையில் பணியாற்றியுள்ளார். 1962-ம் ஆண்டு ஜனவரி 27-ம் தேதி மறைந்தார்.

திரு. எ. காளேஸ்வர ராவ் அவர்கள், கிருஷ்ணா மாவட்டத்தில் நந்திகாமா என்னுமிடத்தில் 1881-ல் பிறந்தார். மசூலிப்பட்டணம் நோபுள் கல்லூரியில் உயர்கல்வி பயின்று, அங்கு பி.எ. பட்டம் பெற்றார். 1937-39, 1946-51 ஆகிய ஆண்டுகளில் சென்னை சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினராயிருந்து பணியாற்றினார். மாநில சுயாட்சியின்கீழ் திரு. சி. ராஜகோபாலாச்சாரி அவர்கள் முதலில் அமைத்த அரசாங்கத்தில் அவர் தலைமைக் கொறடாவாகவும் தலைமை பார்லிமெண்டரி செயலாளராகவும் பணியாற்றியுள்ளார். 1955-ல் விஜயவாடா நகரத்திலிருந்து ஆந்திரச் சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆந்திரப் பிரதேசம் அமைக்கப்பட்டபிறகு, 1956-ல் அச் சட்டசபையின்

[Mr. Speaker] [24th April 1962

தலைவராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1960ல் அவருக்குப் "பத்மபூஷன்" என்னும் விருது அளிக்கப்பட்டது. 1962 பிப்ரவரி 26-ம் தேதி மறைந்தார்.

இவர்களின் மறைவுக்கு இச் சபை அனுதாபத்தைத் தெரிவிக்கும் முறையில் யாவரும் இரண்டு நிமிடங்கள் மௌனமாக எழுந்து நிற்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

*(கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் இரண்டு நிமிடங்கள் மௌனமாக எழுந்து நின்றார்கள்.)*

## II.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Old age pension*

*1 *Q.*—Sri M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the details of the scheme for granting old age pension to aged destitutes;

(*b*) the number of persons so far benefited by this scheme; and

(*c*) the expenditure anticipated to be incurred during 1962–63 in respect of this scheme?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: (*a*) A statement [a] is placed on the table of the House.

(*b*) The scheme takes effect only from 1st April 1962. The number of persons benefited by the scheme will be available only after the working of the scheme for some time.

(*c*) A provision of Rs. 2 lakhs has been made in the Interim Budget for 1962–63.

Sri M. KALYANASUNDARAM: இந்தத் திட்டம் வரவேற்கத் கூடிய ஒரு திட்டம். தேர்தலுக்கு முன்பு இந்தத் திட்டத்தைப் பற்றி பிரசாரம் செய்யும்போது இருந்த வேகத்தை இப்போது அமுல் நடத்துவதற்கும் காட்டப்படுமா என்று அறிய விரும்புகிறேன். தவிர இதற்கு ஒதுக்கி இருக்கக்கூடிய நிதி போதுமானதா என்று அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri M. BHAKTAVATSALAM: முதல் வருஷத்தில் அதிகமாக செலவு ஆகாதென்று எதிர்பார்க்கப்படுகிறது. இப்போது 2 லட்சம் செலவாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்தத் திட்டத்தைப்பற்றி அரசாங்கம் எடுத்துக்கொண்டிருக்கிற அக்கறையைப்பற்றி கனம் அங்கத்தினருக்கு ஐயம் வேண்டாம்.

Sri M. KALYANASUNDARAM: இப்பொழுது ஒதுக்கப்பட்டிருக்கிற ரூபாய் தொடர்ந்து வருஷா வருஷம் ரிகரிங் செலவாக இருக்கக்கூடியது. அப்படி இருக்க பிரதி வருஷம் எவ்வளவு செலவாகும் என்று சர்க்கார் எதிர்பார்க்கிறது?

---

[a] Printed as Appendix I on pages 145–146.

24th April 1962]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது இந்த விவரமெல்லாம் சேகரிக்கப்பட்டுவருகிறது. மனுக்கள் வந்துக் கொண்டிருக்கின்றன. இந்த ஆண்டிலே எவ்வளவு செலவாகும் என்பதைப் பார்த்த பிறகு மற்ற ஆண்டுகளில் எவ்வளவு செலவாகும் என்பது மதிப்பிடப்படும். இப்போது இன்டெரிம் பட்ஜெட்டில் 2 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நாம் சரியான பட்ஜெட் வெளியிடும்போது இன்னும் எல்லா விவரங்களும் பரிசீலனைக்கு வந்து அதன் பேரில் ஒதுக்கப்பட்ட தொகையை அதிகரிக்கலாம்.

SRI V. SANKARAN : பிச்சை எடுக்கும் பிச்சைக்காரர்கள் இந்தத் திட்டத்தின்கீழ் வரமாட்டார்கள் என்று கூறப்பட்டுள்ளது. சர்க்கார் அவர்களுக்கு பாதுகாப்பு அளிக்காமல் இருப்பதனால் தான் பிச்சை எடுக்கும் தொழிலில் ஈடுபடுகின்ற ஒரு நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அவர்கள் கஷ்டத்தைப் போக்க, இந்தத் திட்டத்தை அவர்களுக்கு விஸ்தரிக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தத் திட்டத்தைப்பற்றிய விவரமெல்லாம் மேஜையின் மேல் வைக்கப்பட்டிருக்கிறது. இதில் என்னென்ன குறிப்பிடப்பட்டிருக்கிறதோ அதைத் தவிர வேறுவிதமாக செய்வதற்கு அரசாங்கத்திற்கு உத்தேசம் கிடையாது.

SRI M. KALYANASUNDARAM : இப்பொழுது இதற்காக வெளியிடப்பட்டிருக்கின்ற விதிகள் சட்டசபையில் வைக்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தனிக்கேள்வி போட வேண்டும்.

SRI J. MATHA GOWDER : இப்பொழுது மேஜையின் மேல் வைக்கப்பட்டிருக்கிற குறிப்பிலே மனைவிக்கு 55 வயது பூர்த்தி ஆனபிறகுதான் அவர்களுக்கு இந்தத் திட்டத்தின்கீழ் உதவி அளிக்கப்படும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. சாதாரணமாக 55 வயது அடைவதற்கு முன்பே அவர்கள் சக்தியை இழந்துவிடுகிறார்கள். ஆகவே அவர்களுக்கு குறிப்பிட்டிருக்கிற வயதைக் குறைப்பதற்கு அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மாற்றுவதாக இப்பொழுது அரசாங்கத்திற்கு உத்தேசம் இல்லை.

SRI M. S. MANI : முதியோர்களின் வயதை நிர்ணயிப்பதற்கு அரசாங்கம் எந்த முறையை கடைப்பிடிக்கிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இவர்களும் வாக்காளர்கள். அவர்களுடைய வயது வாக்காளர்கள் பட்டியலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. வேறு குறிப்புகள் இருந்தால் அவைகளும் பரிசீலிக்கப்படும். அதுவும் இல்லையென்றால் டாக்டர்கள் வயதை நிர்ணயிப்பார்கள்.

SRI A. K. SUBBIAH : அங்கஹீனம் உள்ளவர்களுக்கு இப்போது குறிப்பிடப்பட்டிருக்கும் வயதை கொஞ்சம் குறைப்பதற்கு அரசாங்கம் ஆலோசிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போதுதான் இந்தத் திட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இந்த ஆண்டு எவ்வாறு நிறைவேற்றப்படுகிறது என்பதைப் பார்த்து, அதற்குமேல் என்ன செய்வது என்பது யோசிக்கப்படும்.

SRI K. PONNIAH : மலைப்பிரதேசத்தில் அடர்ந்த காடுகளில் வாழும் ஆதிவாசிகளின் வயதைக் கண்டுபிடிப்பதற்கு அரசாங்கம் எந்த வழியைக் கடைப்பிடித்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வேறு ஒரு ரிகார்ட்டும் இல்லையென்றால் டாக்டர்கள் அளிக்கும் ரிப்போர்ட்டை வைத்து நிர்ணயிக்கலாம். இதைத்தவிர வேறு என்னசெய்யலாம் என்பதை பின்னால் யோசிக்கலாம்.

SRI V. SANKARAN : மனைவிக்கு 55 வயது ஆன பிறகுதான் புருஷர்களுக்கு இந்தத் திட்டத்தின்கீழ் உதவி அளிக்கப்படும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதேபோல் பெண்கள் விஷயத்திலும் ஆண்களுக்கு 55 வயது ஆகிவிட்டால் அவர்களுக்கும் இந்தத் திட்டத்தின்கீழ் உதவிசெய்ய அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் முன்பு குறிப்பிட்டதுபோல் இப்போது சர்க்கார் விதியை மாற்றுவதாக உத்தேசம் இல்லை.

SRI V. KRISHNAMOORTHY : கனம் சபாநாயகர் அவர்களே, முதியோர்களுக்கு நிதி வழங்கும் திட்டம் முதல் முதல் இந்த மாகாணத்தில் ஆரம்பிக்கப்பட்டதா? இது ஏற்கெனவே பல மாகாணங்களில் நிறைவேற்றப்பட்டிருக்கிறதென்று சர்க்காருக்குத் தெரியுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வேறு சில மாகாணங்களிலே இந்த திட்டம் அமுலாக்கப்பட்டிருக்கிறதென்று சர்க்காருக்கு நன்றாகத் தெரியும்.

SRI M. KALYANASUNDARAM : ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் எத்தனை மனுக்கள் வந்திருக்கின்றன என்பதைப் பற்றிய தகவல் இருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மனுக்கள் வந்து கொண்டிருக்கின்றன. ஆனால் அதைப்பற்றிய தகவல் என்னிடம் இப்பொழுது இல்லை.

SRIMATHI T. N. ANANDANAYAKI : Will the Government think of constituting a medical board to examine and determine the age of those people who are not able to produce documentary evidence regarding their age?

24th April 1962]

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இப்பொழுது மனுக்கள் வந்து கொண்டிருக்கின்றன. மனுக்களைப்பற்றி என்ன செய்ய வேண்டுமென்பதை யோசித்து நிர்ணயிக்க வேண்டியதாக இருக்கிறது. முதலில் இவைகளை பரிசீலனை செய்து பின்னால் விதிகளை எவ்வாறு மாற்றவேண்டுமென்பது யோசிக்கப்படும்.

***2 *Q.*—SRIMATHI T. N. ANANDANAYAKI (on behalf of SRIMATHI RAJATHI KUNJITHAPATHAM) :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வயோதிக ஆண்கள், பெண்களுக்கு பென்ஷன் கொடுக்கும் திட்டம் எப்போதிலிருந்து அமுலுக்கு வருகிறது?

(இ) பென்ஷனை கொடுக்கும் தொகை எவ்வளவு?

(உ) பென்ஷன் பெறுபவருக்கு வரையறுக்கப்பட்ட வயது என்ன?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** (அ) 1st April 1962.

(இ) Rs. 20 per mensem for each destitute.

(உ) Sixty-five years and over. For destitutes who are incapacitated to earn a living due to blindness, leprosy, insanity, paralysis or loss of limb, the age limit is 60.

**SRI M. KARUNANITHI :** முதியோர்களுக்கு உதவி அளிக்கும் விஷயமாக விண்ணப்பங்கள் வந்து கொண்டிருக்கின்றன என்று சொல்லப்படுகிறது. அந்த விண்ணப்பங்களை சிபாரிசு செய்ய வேண்டுமென்றால் அவற்றில் யார் யார் கையெழுத்து வேண்டும் என்பதைப்பற்றிய விளக்கம் அறிவிக்க முடியுமா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அதைப்பற்றி தனிக் கேள்வி வேண்டும்.

**SRI M. S. MANI :** பெற்ற பிள்ளைகளால் வீட்டை விட்டு விரட்டப்பட்ட முதியோர்களுக்கு இந்த திட்டத்தை விஸ்தரித்துக் கொடுக்கப்படுமா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** முதலில் மனுக்கள் வரட்டும், அதன் பிறகு அதைப்பற்றி எப்படி விதிகளை மாற்ற வேண்டும் என்பதைப்பற்றியெல்லாம் யோசிக்கலாம்.

**SRI K. A. MATHIALAGAN :** Will the Government kindly consider reducing the age limit to 55 as it is the time when people retire from public services and become unable to do normal work?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** நான் முன்பே குறிப்பிட்டேன். இப்பொழுது சில விதிகள் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன. இவைகள் எப்படி நிறைவேற்றப்படுகிறது என்பதைப் பார்த்த பிறகுதான் விதிகளை எப்படி மாற்றி அமைக்க வேண்டுமோ அப்படியெல்லாம் மாற்றி அமைக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.

[24th April 1962

*Bus Transport (Nationalization)*

*3 *Q.*—**Sri M. KARUNANITHI** : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

பஸ் போக்குவரத்து தொழிலை தேசியமயமாக்க திட்டம் உண்டா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : There is no change in the Government's policy of progressive nationalization of road transport. Specific decisions will be taken by Government from time to time.

**Sri M. KARUNANITHI** : பஸ்களை தேசியமயமாக்குவதற்கு தமிழக அரசாங்கம் தீவிரம் காட்டாததற்குக் காரணம் என்ன ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : அந்தக் கொள்கையில் தீவிரம் காட்டி வருகிறது என்பதுதான் எங்களுடைய கருத்து.

**Sri M. KALYANASUNDARAM** : படிப்படியாக பஸ்களை தேசியமயமாக்குவது என்பது அரசாங்கத்தினுடைய கொள்கை என்று கனம் அமைச்சர் அவர்கள் அறிவித்தார். அந்தக் கொள்கையின் விவரம் என்ன ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : இப்பொழுது 120 மைல்களுக்கு அதிகமாக ஓடுகின்ற எல்லா ரூட்டுகளையும் சர்க்காரே எடுத்துக்கொள்வது என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அந்த முடிவுப்படி 120 மைல்களுக்கு அதிகமாக இருக்கக்கூடிய ரூட்டுகளை யெல்லாம் சர்க்கார் எடுத்துக்கொள்வது என்று முடிவு எடுக்கப் பட்டு விட்டது. இனிமேல் அந்த முடிவுப்படி 120 மைலுக்கு அதிகமாக இருக்கக்கூடிய ரூட்டுகளையெல்லாம் தனியார் துறைக்குக் கொடுக்கப்பட மாட்டாது. அந்த அடிப்படையில் ஏழு ரூட்டுகள் எடுத்துக்கொள்ளப்பட்டு நடந்து கொண்டிருக்கின்றன. இந்த ஆண்டு மேற்கொண்டு ஐந்து ரூட்டுகள் விஸ்தரிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இன்னும் நான்கு ரூட்டுகளுக்கு முடிவு எடுக்க வேண்டும் என்று பரிசிலனை நடந்து கொண்டிருக்கின்றன.

**Sri M. KALYANASUNDARAM** : 120 மைலுக்கு அதிகமாக இருக்கக்கூடிய ரூட்டுகளை அரசாங்கமே எடுத்துக்கொண்டு நடத்துவது என்பது ஏற்கெனவே இருக்கக்கூடிய ரூட்டுகளா அல்லது புதியதாக ஆரம்பிக்கப்போகும் ரூட்டுகளா ? இனிமேல் ஆரம்பிக்கப்போகும் ரூட்டுகள் தனியார் துறைக்குக் கொடுக்கப் படுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : தனியார் துறையில் இனிமேல் யாருக்கும் 120 மைலுக்கு மேல் ரூட்டுகள் இல்லை.

**Sri M. KALYANASUNDARAM** : இப்பொழுது கனம் அமைச்சர் அவர்கள் சொன்ன பதிலிலிருந்து அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருக்கிற தேசியமயமாக்கும் கொள்கைப்படிக்கும் எடுத்துக் கொண்டிருக்கிற நடவடிக்கையின்படிக்கும் எந்த விதத்திலும் தனியார் பாதிக்கப்பட மாட்டார்கள் என்பது உண்மையா ?

24th April 1962]

THE HON. SRI R. VENKATARAMAN : இதன் மூலம் தனியார் துறை பாதிக்கப்படும் என்று நினைத்தால் அது உயர்ந்த லட்சியம் அல்ல. அது நல்ல லட்சியம் என்று சொல்ல முடியாது. ஆனால் இனி 120 மைலுக்கு மேல் இருக்கக்கூடிய ரூட்டுகளைக் கொடுக்கப் போவது இல்லை. அந்த முடிவு ஒரு சிறந்த முடிவுதான். இதுவே ஒரு சிறந்த முடிவுதான்.

SRI V. S. S. MANI : ஜீப் பஸ்கள் ஓடக்கூடிய ரூட்டுகளும் எடுத்துக்கொள்ளப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஜீப் பஸ்கள் ஓடக் கூடிய ரூட்டுகளை எடுத்துக்கொள்ளும் உத்தேசம் இல்லை. இப்பொழுதுள்ள திட்டப்படி 120 மைலுக்கு மேல் உள்ள ரூட்டுகளை எடுத்துக்கொள்வதாக உத்தேசம். அதுவே இன்னும் முடிவு அடையவில்லை. அதனால் கனம் அங்கத்தினர் சொன்னதைப்பற்றி இப்பொழுது யோசனை பண்ணுவதற்கு இல்லை. இதன் பிறகுதான் அவர் சொன்னதைப்பற்றி யோசிக்கலாம்.

SRI V. KRISHNAMOORTHY : கனம் சபாநாயகர் அவர்களே, ஆளும் கட்சிக்கு பலம் குறைந்துவிடும் என்ற காரணத்தால் பஸ்களை உடனடியாக சர்க்கார் தேசியமயமாக்கவில்லை என்பது வாஸ்தவம் தானா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஆளும் கட்சியின் பலத்தைக் குறைக்க வேண்டும் என்கிற காரணத்திற்காக எதிர்க் கட்சிக்காரர்கள் பஸ்களை தேசியமயமாக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள் என்பதில் உண்மையிருந்தால் இதிலும் உண்மை இருக்கிறது என்பதை ஏற்றுக்கொள்ளலாம் (ஆரவாரம்).

SRI A. P. DHARMALINGAM : அப்படியென்றால் அரசாங்கம் பஸ் முதலாளிகளுக்கு பலம் காட்டுகிறார்கள் என்பது உண்மை தானா ?

(பதில் இல்லை.)

MR. SPEAKER : Questions are over.

[*Note:*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## III.—ANNOUNCEMENTS.

### (1) NOMINATION TO THE PANEL OF CHAIRMEN.

MR. SPEAKER : தமிழ்நாடு சட்டசபை விதிகளின் 14-வது விதியின் 1-வது உட்பிரிவின்கீழ் பின்வரும் ஆறு சட்டசபை அங்கத்தினர்களை இச் சபையின் முதல் கூட்டத் தொடரின்

[Mr. Speaker] [24th April 1962

தாற்காலிகத் தலைவர்களாக நான் நியமனம் செய்துள்ளேன் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன் :—

(1) திருமதி ராஜாத்தி குஞ்சிதபாதம்
(2) திரு. ந. ச. சுந்தரராஜன்
(3) திரு. தோ. மு. நல்லசாமி
(4) திரு. அ. ராகவ ரெட்டி
(5) திரு. எஸ். மாதவன்
(6) திரு. ஏ. சுவாமிதாஸ்.

(2) NOMINATION TO THE BUSINESS ADVISORY COMMITTEE.

MR. SPEAKER : தமிழ்நாடு சட்டசபை விதிகளின் 193-ஆவது விதியின் 1-வது உட்பிரிவின்கீழ், கீழ்க்கண்ட சட்டசபை அங்கத்தினர்களை அலுவல் ஆலோசனைக் குழுவின் அங்கத்தினர்களாக நியமனம் செய்கிறேன் :—

(1) கனம் சபாநாயகர் (உத்யோக முறையில் தலைவர்)
(2) திரு. கே. பார்த்தசாரதி (உதவி சபாநாயகர்)
(3) கனம் திரு எம். பக்தவத்சலம் (சபை முதல்வர்)
(4) கனம் திரு. பூ. கக்கன்
(5) கனம் திரு. வி. ராமைய்யா
(6) திரு. பா. ராமச்சந்திரன்
(7) திரு. இரா. நெடுஞ்செழியன்
(8) திரு. சா. கணேசன்
(9) திரு. மீ. கலியாணசுந்தரம்.

(3) NOMINATION TO THE RULES COMMITTEE.

MR. SPEAKER : தமிழ்நாடு சட்டசபை விதிகளின் 229-வது விதியின் 1-வது உட்பிரிவின்கீழ், கீழ்க்கண்ட அங்கத்தினர்களை விதிகள் இயற்றும் குழுவின் அங்கத்தினர்களாக நியமனம் செய்கிறேன் :—

(1) கனம் திரு. எம். பக்தவத்சலம் (சபை முதல்வர்)
(2) திரு. கே. பார்த்தசாரதி (உதவி சபாநாயகர்)
(3) திரு. பா. ராமச்சந்திரன்
(4) திரு. எஸ். ராமசாமி நாயுடு
(5) திரு. கி. நாராயணசுவாமி பிள்ளை
(6) திரு. கே. டி. கோசல்ராம்
(7) டாக்டர் ப. நடராஜன்
(8) திரு. பி. பரமேஸ்வரன்
(9) திரு. என் ராமச்சந்திர ரெட்டி
(10) திரு. இரா. நெடுஞ்செழியன்
(11) திரு. சா. கணேசன்
(12) திரு. மீ. கலியாணசுந்தரம்
(13) திரு. எஸ். மாதவன்
(14) திரு. டி. எல். சசிவர்ண தேவர்.

24th April 1962] [Mr. Speaker]

சபாநாயகர், உத்தியோக முறையில் இக் குழுவின் தலைவராக இருப்பார்.

(4) NOMINATION TO THE COMMITTEE ON GVERNMENT ASSURANCES.

**MR. SPEAKER:** தமிழ்நாடு சட்டசபை விதிகளின் 214-வது விதியின் 1-வது உட்பிரிவின்கீழ் கீழ்க்கண்ட சட்டசபை அங்கத்தினர்களை அரசாங்க உறுதிமொழிகள் பற்றிய குழுவின் அங்கத்தினர்களாக நியமனம் செய்கிறேன் :—

(1) திரு. ஏ. குஞ்சன் நாடார்

(2) திருமதி பி. கே. ஆர். லெட்சுமிகாந்தம்

(3) திரு. டி. பி. ஏழுமலை

(4) திரு. கே. எஸ். நடராஜ கவுண்டர்

(5) திரு. வி. ஏ. முத்தையா

(6) திரு. ந. சின்னமுனுசாமி செட்டி

(7) திரு. இராம அரங்கண்ணல்

சட்டசபை விதிகளின் 215-வது விதியின் 1-வது உட்பிரிவின்கீழ் திரு. குஞ்சன் நாடார் அவர்களை இக் குழுவின் தலைவராக நியமனம் செய்கிறேன்.

(5) NOMINATION TO THE COMMITTEE ON SUBORDINATE LEGISLATION.

**MR. SPEAKER:** தமிழ்நாடு சட்டசபை விதிகளின் 201-வது விதியின் 1-வது உட்பிரிவின்கீழ் கீழ்க்கண்ட சட்டசபை அங்கத்தினர்களை துணைச் சட்ட ஆய்வுக் குழுவின் (Committee on Subordinate Legislation) அங்கத்தினர்களாக நியமனம் செய்கின்றேன் :—

(1) திரு. கே. பார்த்தசாரதி (உதவி சபாநாயகர்)

(2) திருமதி டி. என். அநந்தநாயகி

(3) திரு. வை. சங்கரன்

(4) திரு. ந. சண்முகசுந்தரம்

(5) திரு. செ. சீனிவாசன்

(6) திரு. கோ. வெங்கட்ராமன்

(7) திருமதி ஏ. சுவாரிஸ்.

(8) திரு. எம். ஸி. கரிவேங்கடம்

(9) திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி

(10) திரு. பி. கே. மூக்கைய தேவர்

சட்டச்பை விதிகளின் 202-வது விதியின்படி உதவி சபாநாயகர் திரு. கே. பார்த்தசாரதி அவர்களை இக் குழுவின் தலைவராக நியமனம் செய்கிறேன்.

IV.—GOVERNMENT MOTIONS.

(1) ELECTION TO THE COMMITTEE ON PUBLIC ACCOUNTS FOR 1962-63.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

"That with reference to Rule 173 of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. Speaker, to elect fourteen members to be members of the Committee on Public Accounts for the year 1962-63."

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தக் கமிட்டிகளுடைய எண்ணிக்கையையெல்லாம் நாம் நிர்ணயித்து ஐந்து வருஷங்களுக்கு மேலாகிறது. அனுபவத்தில் பார்க்கிறபோது இந்த எண்ணிக்கை போதாது. புதிதாக வந்திருக்கும் அங்கத்தினர்கள் அனுபவம் பெறுவதற்கு இன்னும் கொஞ்சம் அதிகமாக அங்கத்தினர்களைச் சேர்த்தால் சரியாக இருக்கும். இது சம்பந்தமாக விதிகள் மாற்றப்படவேண்டுமென்ற யோசனையைச் சபை முதல்வருக்கு நான் கூறிக்கொள்கின்றேன். இப்பொழுது தங்களால் நியமிக்கப்பட்டிருக்கக்கூடிய அந்தக் குழுவில் சீக்கிரம் இந்தப் பிரச்னையை வைத்து, முடிவு எடுக்கவேண்டுமென்ற யோசனையைத் தெரிவித்துக்கொள்கின்றேன். இப்பொழுது சபை முன் இருக்கும் பிரேரணையை நான் ஆட்சேபிக்கவில்லை. இந்தப் பிரேரணையை நான் ஆதரிக்கிறேன். என்றாலும், விரைவில் இந்தக் குழுக்களின் அங்கத்தினர்களுடைய எண்ணிக்கையை அதிகரிப்பதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டுமென்ற யோசனையைச் சமர்ப்பித்துக்கொள்கின்றேன்.

இத்துடன் இன்னொரு விவரமும் அறிய விரும்புகிறேன். சட்டசபை விதிகளின்படி கவுன்சில் அங்கத்தினர்களும் இக் குழுக்களில் சேர்க்கப்படவேண்டுமென்று இருக்கிறது. இந்தச் சபை அந்த எண்ணிக்கையையும் நிர்ணயித்தாகவேண்டும். அதற்குள்ள யோசனை எப்பொழுது வரும் என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 'விதிகள் இயற்றும் குழுவை' இப்பொழுது அமைத்திருக்கிறீர்கள். விதிகள் இயற்றும் குழு, விதிகளில் ஏதாவது மாற்றம் செய்ய வேண்டுமா என்பதைப் பற்றி பின்னர் ஆலோசனை செய்துகொள்ளலாம். இப்பொழுது சபை முன் உள்ள பிரேரணை, "14 உறுப்பினர்களை பொதுக் கணக்குக் குழுவிற்குத் தேர்ந்தெடுப்பது" என்பதாகும். இந்தப் பிரேரணையை கனம் உறுப்பினர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : அதை ஆலோசனை செய்து முடிவு கட்டலாம்.

The question is—

"That with reference to Rule 173 of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker, to elect fourteen members to be members of the Committee on Public Accounts for the year 1962-63."

The motion was put and carried.

24th April 1962]

**Mr. SPEAKER :** ஒற்றை மாற்று வோட் மூலம் விகிதாசாரப் பிரதிநிதித்துவக் கொள்கைப்படி தேர்தல்களை நடத்துவதற்காக நான் வகுத்துள்ள விதிமுறைகளை அனுசரித்து, பொதுக் கணக்குக் குழுவிற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்காக அபேட்சகர்கள் 1962-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26-ம் தேதி, வியாழக்கிழமை காலை 11 மணிக்குள் தங்கள் நியமனப் பத்திரங்களைச் செயலாளரிடம் சேர்ப்பிக்க வேண்டும். செயலாளருக்கு மனுச் செய்துகொண்டால் நியமனப் பத்திரங்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

நியமனப் பத்திரங்கள் 1962-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26-ம் தேதி வியாழக்கிழமை பிற்பகல் 3 மணிக்குப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும். வாபஸ் பெற விரும்பும் அபேட்சகர்கள் 1962 மே 4-ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை 3 மணிக்குள் வாபஸ் பெறலாம்.

நியமிக்கப்பெற்றுள்ள அபேட்சகர்கள் எண்ணிக்கை தேர்ந்தெடுக்கவேண்டிய உறுப்பினர்கள் எண்ணிக்கையைவிட, அதாவது 14-ஐவிட அதிகமாக இருந்தால் 1962 மே 5-ந் தேதி சனிக்கிழமை காலை 9 மணி முதல் பிற்பகல் 1 மணி வரையில் வாக்கெடுப்பு நடைபெறும்.

(2) Election to the Committee on Estimates for 1962–63.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** Sir, I move—

"That with reference to Rule 164 of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker, to elect fourteen members to be members of the Committee on Estimates for the year 1962-63."

**Mr. SPEAKER :** The question is—

"That with reference to Rule 164 of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker, to elect fourteen members to be members of the Committee on Estimates for the year 1962–63."

The motion was put and carried.

**Mr. SPEAKER :** ஒற்றை மாற்று வோட் மூலம் விகிதாசாரப் பிரதிநிதித்துவக் கொள்கைப்படி தேர்தல்களை நடத்துவதற்காக நான் வகுத்துள்ள விதிமுறைகளை அனுசரித்து, மதிப்பீட்டுக் குழுவிற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்காக அபேட்சகர்கள் 1962 ஏப்ரல் 26-ம் தேதி வியாழக்கிழமை காலை 11 மணிக்குள் தங்கள் நியமனப் பத்திரங்களைச் செயலாளரிடம் சேர்ப்பிக்க வேண்டும். செயலாளருக்கு மனுச் செய்துகொண்டால் நியமனப் பத்திரங்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

நியமனப் பத்திரங்கள் ஏப்ரல் 26-ந் தேதி வியாழக்கிழமை பிற்பகல் 3 மணிக்கு பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும். வாபஸ் பெற விரும்பும் அபேட்சகர்கள் 1962 மே 4-ந் தேதி வெள்ளிக்கிழமை மாலை 3 மணிக்குள் வாபஸ் பெறலாம்.

[Mr. Speaker] [24th April 1962

நியமிக்கப்பெற்றுள்ள அபேட்சகர்கள் எண்ணிக்கை தேர்ந் தெடுக்கப்பட வேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கையைவிட, அதாவது 14-ஐ விட அதிகமாயிருந்தால் 1962 மே 5-ந் தேதி சனிக் கிழமை காலை 9 மணி முதல் பிற்பகல் 1 மணி வரையில் வாக்கெடுப்பு நடைபெறும்.

(3) ELECTION TO THE COMMITTEE OF PRIVILEGES FOR 1962–63.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move--

" That with reference to Rule 183 of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker, to elect fifteen members to be members of the Committee of Privileges for the financial year 1962–63."

MR. SPEAKER : The question is—

" That with reference to Rule 183 of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker, to elect fifteen members to be members of the Committee of Privileges for the financial year 1962–63."

The motion was put and carried.

MR. SPEAKER : ஒற்றை மாற்று வோட் மூலம் விகிதாசாரப் பிரதிநிதித்துவக் கொள்கைப்படி தேர்தல்களை நடத்துவதற்காக நான் வகுத்துள்ள விதி முறைகளை அனுசரித்து உரிமைகள் பற்றிய குழுவிற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்காக அபேட்சகர்கள் 1962 ஏப்ரல் 26-ந் தேதி, வியாழக்கிழமை காலை 11 மணிக்குள் தங்கள் நியமனப் பத்திரங்களைச் செயலாளரிடம் சேர்ப்பிக்க வேண்டும். செயலாளருக்கு மனுச் செய்துகொண்டால் நியமனப் பத்திரங் களைப் பெற்றுக்கொள்ளலாம்.

நியமனப் பத்திரங்கள் 1962 ஏப்ரல் 26-ந் தேதி வியாழக்கிழமை பிற்பகல் 3 மணிக்குப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும். வாபஸ் பெற விரும்பும் அபேட்சகர்கள் 1962 மே 4-ந் தேதி வெள்ளிக்கிழமை மாலை 3 மணிக்குள் வாபஸ் பெறலாம்.

நியமிக்கப் பெற்றுள்ள அபேட்சகர்களின் எண்ணிக்கை தேர்ந் தெடுக்கப்படவேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கையைவிட, அதாவது 15-ஐ விட அதிகமாக இருந்தால் 1962 மே 5-ந் தேதி சனிக்கிழமை காலை 9 மணி முதல் பிற்பகல் 1 மணி வரையில் வாக்கெடுப்பு நடைபெறும்.

(4) ELECTION TO THE HOUSE COMMITTEE FOR 1962–63.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move--

" That with reference to Rule 221 (1) of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker, to elect eleven members to be members of the House Committee for the financial year 1962–63."

24th April 1962]

**Mr. SPEAKER :** The question is—

"That with reference to Rule 221 (1) of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker, to elect eleven members to be members of the House Committee for the financial year 1962-63."

The motion was put and carried.

**Mr. SPEAKER :** ஒற்றை மாற்று வோட் மூலம் விகிதாசாரப் பிரதிநிதித்துவக் கொள்கைப்படி தேர்தல்களை நடத்துவதற்காக நான் வகுத்துள்ள விதிமுறைகளை அனுசரித்து, சபைக் குழுவிற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்காக அபேட்சகர்கள் 1962-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26-ந் தேதி வியாழக்கிழமை காலை 11 மணிக்குள் தங்கள் நியமனப் பத்திரங்களைச் செயலாளரிடம் சேர்ப்பிக்க வேண்டும். செயலாளருக்கு மனுச் செய்துகொண்டால் நியமனப் பத்திரங்களைப் பெற்றுக்கொள்ளலாம்.

நியமனப் பத்திரங்கள் 1962-ம் ஆண்டு எப்ரல் மாதம் 26-ம் தேதி வியாழக்கிழமை பிற்பகல் 3 மணிக்குப் பரிசிலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும். வாபஸ் பெற விரும்பும் அபேட்சகர்கள் 1962-ம் ஆண்டு மே மாதம் 4-ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை 3 மணிக்குள் வாபஸ் பெறலாம்.

நியமிக்கப்பெற்றுள்ள அபேட்சகர்களின் எண்ணிக்கை தேர்ந்தெடுக்கப்படவேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கையைவிட, அதாவது 11-ஐ விட அதிகமாக இருந்தால், 1962-ம் ஆண்டு மே மாதம் 5-ந் தேதி சனிக்கிழமை காலை 9 மணி முதல் பிற்பகல் 1 மணி வரையில் வாக்கெடுப்பு நடைபெறும்.

## (5) ELECTION TO THE STATE LIBRARY COMMITTEE.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** Sir, I move—

"That in pursuance of Rule 2 (1) (v) of the Madras Public Library Rules, 1950, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. Speaker, to elect one person to the State Library Committee constituted under section (3) of the Madras Public Libraries Act, 1948 (Madras Act XXIV of 1948)."

**Mr. SPEAKER :** The question is—

"That in pursuance of Rule 2 (1) (v) of the Madras Public Library Rules, 1950, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. Speaker, to elect one person to the State Library Committee constituted under section (3) of the Madras Public Libraries Act, 1948 (Madras Act XXIV of 1948)."

The motion was put and carried.

**Mr. SPEAKER :** கனம் நிதி அமைச்சர் மானில நூலகக் குழுவிற்கு ஓர் உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கவேண்டுமெனப் பிரேரேபித்தார். இது குறித்து, நியமனப் பத்திரங்களைத் தாக்கல் செய்ய விரும்பும் அபேட்சகர்கள் 1962-ம் ஆண்டு ஏப்ரல்

மாதம் 26-ம் தேதி வியாழக்கிழமை காலை 11 மணிக்குள் அவற்றைச் செயலாளரிடம் சேர்ப்பிக்க வேண்டும். மனுச் செய்துகொள்வதின் மேல் நியமனப் பத்திரங்களைச் செயலாளரிடமிருந்து பெறலாம்.

நியமனப் பத்திரங்கள் 1962-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26-ம் தேதி வியாழக்கிழமை, பிற்பகல் 1 மணிக்குப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும். வாபஸ் பெற விரும்பும் அபேட்சகர்கள் 1962-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26-ம் தேதி வியாழக்கிழமை 3 மணிக்குள் வாபஸ் பெற்றுக்கொள்ளலாம்.

நியமிக்கப்பெற்றுள்ள அபேட்சகர்களின் எண்ணிக்கை நிரப்பப்பட வேண்டிய இடத்தின் எண்ணிக்கைக்கு, அதாவது 1-க்கு மேற்பட்டால் 1962-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 27-ம் தேதி வெள்ளிக்கிழமை காலை 9 மணி முதல் பிற்பகல் 1 மணி வரை வாக்கெடுப்பு நடைபெறும்.

## V.—GOVERNMENT RESOLUTION.

### ASSOCIATION OF COUNCIL MEMBERS WITH THE COMMITTEE ON SUBORDINATE LEGISLATION.

9-0 a.m. THE HON. SRI M. BHAKTAVATSALAM: Sir, I move—

"That this House recommends to the Legislative Council that they do nominate three members from the Council to associate with the Committee on Subordinate Legislation of this House for the financial year 1962–63 and communicate to this House the names of the members so nominated."

MR. SPEAKER: The question is—

"That this House recommends to the Legislative Council that they do nominate three members from the Council to associate with the Committee on Subordinate Legislation of this House for the financial year 1962–63 and communicate to this House the names of the members so nominated."

The resolution was put and carried.

MR. SPEAKER: The next item in the agenda is the discussion on the Governor's Address. Now Srimathi T. N. Anandanayaki will move the Motion of Thanks

## VI.—POINT OF ORDER REGARDING GOVERNOR'S ADDRESS.

SRI M. KALYANASUNDARAM: On a point of order, Sir. You will remember that last time, I wanted to raise a point of order and I did not pursue it on your advice. The first session of House commenced on the 29th March 1962 according to G.O. No. 14 issued by the Department. Under Article 176 of the Constitution it is obligatory that the Governor should have addressed the House at the commencement of the first session. Of course, it can be argued that the House did not sit between 31st March and 23rd April 1962 and that it should be deemed that the session commenced only on the date of Governor's address to both the Houses. What I want to stress is that the letter and spirit of the Constitution must be carried out. There has been a delay

**24th April 1962]** [Sri M. Kalyanasundaram]

of more than twenty-three days to give this new House an opportunity to ventilate the feelings and grievances of the people. There are so many problems facing the people to which the new members would have liked to draw the attention of this House and the Government immediately after the elections were over.

In our State there were no problems in the formation of the new ministry. The ministry was formed promptly and I congratulate the Hon. Chief Minister on that. But in spite of it, I do not know why he failed to advise the Governor to address the House immediately at the commencement of the session. It is not for mere academic interest that I am raising this point. We are laying down healthy conventions to strengthen the institution of parliamentary democracy not only in the interests of the present generation but also in the interests of the future generations. There should be healthy conventions. Constitutional obligations should not be violated. The disorder which has been committed already cannot be rectified. But still I want to go on record that such a disorder should not be permitted to go without protest.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் அவர்கள் ஒழுங்குப் பிரச்னையாக இதைக் கிளப்பியிருக்கிறார்களா அல்லது அரசாங்கத்தின் மீது குற்றம் சாட்டும் வகையில் கிளப்பியிருக்கிறார்களா என்பது எனக்கு புரிய வில்லை. எதுவாயினும் இரண்டுக்கும் இடம் இல்லையென்று நான் தெரிவித்துக் கொள்வேன். கவர்னருடைய பிரசங்கம் செஷனில் தொடக்கத்தில் இருக்கவேண்டுமென்பது பற்றித்தான் குறிப்பிடப்பட்டிருக்கிறது. செஷன் எப்போது தொடங்கியது என்பது ஒரு பிரச்னை. சபாநாயகர் தேர்தல் ஆகும்வரையில் சட்டசபையே இல்லை. ஆகவே சபாநாயகர் தேர்தலுக்கு முன்னமேயே செஷன் தொடங்கிவிட்டதா என்பது பரிசீலனை செய்யவேண்டிய பிரச்னை. சபாநாயகர் தேர்தலுக்கு முன் சபை எப்படிக் கூடும்? எப்போது தொடங்கும்? இதையெல்லாம் கூட அப்போது பரிசீலனை செய்யவேண்டும். சபாநாயகர் தேர்தல் முடிந்தவுடனேயே அன்றைக்கே கவர்னர் உரை நிகழ்த்தவேண்டும் என்றும்கூட விவாதிக்கலாம். ஆனால் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சபாநாயகர் தேர்தலுக்கு, உறுப்பினர்கள் விஸ்வாசப் பிரமாணம் எடுத்துக் கொள்வதற்கு கவர்னர் தேதி வைத்து அறிவித்திருக்கிறார். அதை அடுத்து கவர்னர் அட்ரசுக்கும் உறுப்பினர்கள் வரவேண்டும் என்பதற்கு ஒரு வேண்டுகோள் அனுப்பி விடுகிறார். முன்னதையொட்டி மறுநாளே கவர்னர் அட்ரஸ் இருந்தாலும் இரண்டு அறிவிப்புகளும் கவர்னரிடமிருந்து தனித்தனியே தான் வருகின்றன. இரண்டையும் கவர்னரே தான் அனுப்பி வைக்கிறார். கவர்னர் உரைக்கு சபாநாயகர் அறிவிப்பு அனுப்புவது இல்லை. அதோடு நாம் பொதுவாக ஹவுஸ் ஆப் காமன்சினுடைய விதிமுறைகளையே அனுசரித்து வருகிறோம். அங்கே சபாநாயகர் தேர்தலுக்குப் பின் ஒரு வாரம் கழித்தே சபைக்கு ராணி வந்து அட்ரஸ் செய்வாள்.

[Sri M. Bhaktavatsalam] [24th April 1962

செவ்வாய்க்கிழமை சபாநாயகர் தேர்தல் என்றால் ஒரு வாரத்திற்கு பிறகு தான் ராணி வந்து பேசுவாள். அதனால் அதிகக் காலதாமத மாகிறதா இல்லையா என்பது எல்லாம் யோசிக்க வேண்டியிருக் கிறது. இவையெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டே கவர்னருடைய பிரசங்கத்திற்கு நாள் இங்கே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதில் ஒழுங்குப் பிரச்னை ஒன்றும் எழவில்லை.

MR. SPEAKER : Article 176 of the Constitution states that at the commencement of the first session after each general election to the Legislative Assembly, the Governor shall inform the Legislative Assembly of the causes of its summons. 'At the commencement' means within a reasonable time. Even in the United Kingdom where the Queen addresses the Parliament at the commencement, the Address takes place only a week after the election of the Speaker. The interpretation of the expression 'at the commencement' should mean within a reasonable time. Further, the Assembly has not met and transacted any other business. I, therefore, do not see any violation of the constitutional provisions. I rule out the point of order.

SRI A. KUNJAN NADAR : Sir, we independent members, have been allotted seats along with the Congress members. We have no objection to sit with anybody. But I would like to suggest that the independent members be seated together in a block. I, therefore, request that the seats be arranged accordingly.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் சொல்வது ஒன்றுக்கொன்று முரணாக இருக்கிறது. சுயேச்சை என்று சொல்லிவிட்டு நாங்கள் ஒன்றாகச் சேர்ந்து உட்கார வசதி இருக்கவேண்டும் என்பது ஒழுங்குப் பிரச்னையாகாது. சுயேச்சை க்ரூப் ( Independent Group ) என்று அமைத்துக்கொண்டிருந் தால் அது வேறு விஷயம். ஆகவே இதில் ஒழுங்குப் பிரச்னை ஒன்றும் இல்லையென்று தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : I call upon Srimathi T. N. Anandanayaki to move. . . . .

SRI V. SANKARAN : On a point of order, Sir, one hon. Member is sitting in the House with his upper body partly uncovered. Is it in keeping with the dignity of the House?

MR. SPEAKER : There is no dress regulation.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : This is not a point of order. If the hon. Member is so much interested, he may himself advise that hon. Member.

* SRI R. V. SWAMINATHAN : Sir, I think that in this House all hon. Members are subject to certain regulations in dress. I think, that in the past also, there were some hon. Members, who were not in the habit of wearing shirts. But when they were in the House, they used to cover their upper body fully with shawls

24th April 1962]• [Sri R. V. Swaminathan]

and never appeared in bare body. It looks uncouth and indecent, to come to the House half-naked. Further I submit, Sir, that this should be viewed seriously.

MR. SPEAKER : There is no rule prescribing dress regulation. But anyway, the House may consider subsequently, if it is necessary.

### VII.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS.

* SRIMATHI T. N. ANANDANAYAKI : Sir, I move—

"That an Address be presented to the Governor in the following terms :—

'That the Members of the Madras Legislative Assembly assembled in this session are deeply grateful to the Governor for the Address [a] which he has been pleased to deliver to both the Houses of the Legislature assembled together on the 23rd April 1962 '.

—

கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் மாபெரும் பொதுத் தேர்தலுக்குப் பிறகு புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்தச் சபைக்கும் மேல் சபைக்குமாகச் சேர்ந்து நேற்று ஆற்றிய நல்லுரைக்கு நன்றி தெரிவிக்கும் பொறுப்பை எனக்கு அளித்ததற்காக என்னுடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI M. KARUNANITHI : On a point or order, நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை முன் மொழிந்து வழி மொழிந்த பிறகு தான் கனம் மெம்பர் அவர்கள் பேசவேண்டும். . . .

SRIMATHI T. N. ANANDANAYAKI : Sir, I am sorry to inform the hon. Member that I am only moving the motion now and afterwards only somebody has to second it.

கவர்னர் பெருமான் அவர்கள் அரசாங்கத்தினுடைய கொள்கை என்ன, அரசாங்கத்தினுடைய திட்டம் என்ன என்பதைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்திருக்கிறார்கள், என்பதை அரசியல் விருப்பு வெறுப்புக்கு அப்பாற்பட்ட நிலையிலே நாம் ஒப்புக் கொள்ள வேண்டுமென்று நினைக்கிறேன். குறிப்பாக, கவர்னர் பெருமான் உரைக்கு எப்போதுமே வராதவர்கள் நேற்றும் வராமல் இருந்தார்கள். ஆனால் இந்தத் தேர்தலிலே ஒரு புது மாறுதல் ஏற்பட்டிருக்கும் நிலையில், வடக்கோடு தொடர்பு கொண்டு பாராளுமன்ற அங்கத்தினர்கள் அதிகமாயிருக்கும் நிலையில், கவர்னர் வடநாட்டார் என்ற காரணத்திற்காக எதிர்ப்பது சரியா தவறா என்று ஆராய்ந்து பார்த்து அவர்கள் முடிவு கட்டுவது வரவேற்கத்தக்கது என்று கூற விரும்புகிறேன்.

கவர்னர் பெருமான் அவர்கள் உரையிலே பொதுத் தேர்தலைப் பற்றிக் கூறியிருக்கிறார்கள். அரசாங்க உத்தியோகஸ்தர்கள் இந்தத் தேர்தலை மிக நேர்மையாகவும், திறமையாகவும்,

[a] Printed as Appendix II on pages 146–149

ஆர்வத்துடனும் நடத்தித் தந்தார்கள் என்பதைக் கவர்னர் பெருமான் குறிப்பிட்டிருப்பது பாராட்டத்தக்கது. ஒரு பெரும் பொதுத் தேர்தலை, நாட்டை ஆள யாருக்கு அருகதை இருக்கிறது என்பதை மக்கள் ஓட்டுச் சாவடி சென்று தெரிவிக்கும் ஒரு பொதுத் தேர்தலை மிக அமைதியாக நடத்திக் கொடுத்த அரசாங் கத்திற்கும் அவர்களுடைய உத்தியோகஸ்தர்களுக்கும் உண்மை யிலேயே நான் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். அதே சமயத்தில், சர்வகட்சிகளும் சேர்ந்து ஒரு கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு பொல்லாததைச் சொல்லமாட்டோம், பொல்லாத விஷயம் பரங்களைச் செய்யமாட்டோம் என்ற முடிவுக்கு வந்தும்கூட, சில எதிர்க்கட்சியினர் நல்லததைத் தவிர பொல்லாததையே பிரசாரம் செய்தும், மக்களைப் பயமுறுத்தியும், ஆபத்தான ஆபாசமான சுவரொட்டிகளை ஒட்டியும் பிரசாரம் செய்தனர் என்பதை வருத்தத் தோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். வருங்காலத்திலா வது இத்தகைய நிகழ்ச்சிகள் நடைபெறுதிருக்க அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று விருப்பப்படு கிறேன். அரசாங்க உத்தியோகஸ்தர்கள் பாரபட்சம் இன்றி எல்லாக் கட்சியினருக்கும் பொதுவாக நேர்மையான முறையிலே தேர்தலை நடத்தித் தந்தார்கள் என்று சொல்லும்போது, அந்தப் பெருமை அரசாங்கத்துக்கும் அரசாங்கத்தைச் சார்ந்த நமக்கும் என்று சொல்லிக் கொள்வதில் மகிழ்ச்சி அடையும் அதே சமயத் தில், எந்த உத்தியோகஸ்தரும் ஆளும் கட்சியின் சார்பில் பார பட்சம் காட்டவில்லையே தவிர ஆளும் கட்சிக்கு எதிராக எதிர்க் கட்சிக்கு உதவி செய்தார்கள், என்பதை என்னுடைய அனுபவத் தில் இருந்து சொல்ல முடியும் என்பதை இந்தச் சபைக்குச் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, நம்முடைய அரசாங்கமானது இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களைச் செவ்வனே நடத்தி மூன்றுவது திட்டத் தைச் செவ்வனே நிறைவேற்றும் வகையில் முன்னேறிக் கொண் டிருக்கிறது என்பது நமக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. ஐந் தாண்டுத் திட்டங்கள் ஆற்றலோடும், திறமையாகவும் நிறை வேற்றப்பட்டால்தான், நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்திலே இன்றைக்கு இல்லா விட்டாலும் ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகா வது வளமையைப்பார்க்க முடியும் என்ற காரணத்தால்தான் ஐந்தாண்டுத் திட்டங்களைத் தீவிரமாக அரசாங்கம் நிறைவேற்றி வருகிறது. அந்த வகையில் தமிழக அரசாங்கம், மத்திய அரசாங் கம் பாராட்டக் கூடிய வகையில் குறித்த அளவுக்கு மேல் செல வழித்து குறித்த காலத்திற்குள் பல திட்டங்களை நிறைவேற்றி இருப்பது பாராட்டுக்குரியது.

மூன்றுவது திட்டத்தின் முதல் ஆண்டில் 48 கோடி ரூபாய்க் குத் திட்டமிட்டு 50 கோடி ரூபாய் செலவு செய்திருக்கிறோம். அடுத்த ஆண்டில் 55 கோடி ரூபாய் அளவில் திட்டமிட்டிருப்பதா னது 60 கோடி ரூபாய் அளவுக்குப் போகலாம் என்று கவர்னர் பெருமான் அவர்கள் குறிப்பிட்டிருப்பதைப் பார்க்கும்போது

24th April 1962] [Srimathi T. N. Anandanayaki]

திட்டத்தை வெற்றிகரமாக குறுகிய காலத்தில் அதிக அளவு நடத்திக் கொடுக்கும் உத்தியோகஸ்தர்களைப் பாராட்டாமல் இருக்க முடியாது. திட்டங்களைத் தீட்டுவதைவிட அவற்றை அமுல் நடத்துவதில்தான் சிரமம் அதிகம். ஆகவே அந்த உத்தி யோகஸ்தர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதே சமயத்தில் கவர்னர் பெருமான் அவர்கள் கூறியபடி இந்தத் திட்டங்களையெல்லாம் நல்லபடி நிறை வேற்ற 'அடிஷனல் ஸோர்ஸஸ்' தேவை என்பதையும் யாரும் மறுக்க முடியாது. அதற்காகப் புதிதாக வரி போட்டால் மக்கள் தாங்கக் கூடிய அளவிலே வரி போட வேண்டும். வரிச் சுமையை தற்போது மக்கள் ஏற்பது என்பது அவ்வளவு எளிதல்ல. நிதிக் குழுவின் முடிவுப்படி புதிதாக 2½ கோடி ரூபாய் சென்னைக்குக் கிடைக்கிறது. இது வரை கிடைக்காத தொகையை, கொடுக் காத தொகையை தற்போது கொடுக்க முன் வந்திருக்கிறார்கள். ஆந்திரா போன்ற மாகாணங்களுக்கு மத்திய அரசாங்கம் 9 கோடி ரூபாய் அளவுக்குக் கொடுத்திருக்கும் போது, நம்முடைய மாகா ணத்திற்கும் அந்த அளவுக்குப் பெறுவதற்கான முயற்சியை நிதி இலாகாவிலே இருக்கிற உத்தியோகஸ்தர்களும், நம்முடைய திறமை மிக்க நிதியமைச்சர் அவர்களும் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நம்முடைய மாகாண அரசாங்கத்திற்கு மத்திய அரசாங்கம் வசூலிக்கும் வரியில் இருந்து பங்கு, வருமான வரி, சுங்க வரி போன்ற இனங்களில் இருந்துதான் கிடைக்கிறது. அவர்கள் சுங்கவரி வசூலிக்கும் எல்லாப் பொருள்களிலும் நமக்கு ஒரு பங்கு உண்டு. அதற்காகப் போராடி அதிகத் தொகையைப் பெற்றால்தான் ஐந்தாண்டுத் திட்டங்களைப் பண நெருக்கடி இல்லா மல் இன்னும் திறமையுடன் நிறைவேற்ற முடியும். அதற்கு, அனுபவமும் திறமையும் மிக்க நம்முடைய நிதியமைச்சர் அவர்கள் வேண்டிய நடவடிக்கைகளை எடுத்து அதிகத் தொகையைப் பெற்றுத் தர வேண்டுமென்று கேட்டுக் கொள்ளு கிறேன்.

அடுத்து, பிள்ளைகளின் படிப்பு வசதி பற்றியும், வயதானவர் களுக்குப் பென்ஷன் கொடுப்பது பற்றியும், மதிய உணவுத் திட்டம் பற்றியும் கவர்னர் பெருமான் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்த மூன்று திட்டங்களும் மிகச் சிறந்த திட்டங்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. ஒருவருக்குப் படிக்க வசதி செய்து கொடுத்தால் அந்த ஒரு நபர் பயன் பெறுவது மாத்திரமல்லாமல் அந்தக் குடும்பமே முன்னேற வழி பிறக்கிறது. இதை நினை விலே கொண்டுதான் அரசாங்கமானது படிப்பு வசதியை எவ்வ ளவு பெருக்க முடியுமோ அந்த அளவுக்கு அந்த வசதியினை விரி வாக்கிக் கொண்டிருக்கிறது. இது மிகவும் வரவேற்கத்தக்கது என்பதை நான் மகிழ்ச்சியுடன் கூற விரும்புகிறேன். படிப்பு வசதி பெருகப் பெருகப் சமுதாயம் முன்னேற்றமடைகிறது.

முதியோர்களுக்கு வசதி செய்து தரும் அரசாங்கம், பென்ஷன் தரும் அரசாங்கம், இளம் விதவைகளுக்கும் அந்த வசதியினை விஸ் தரித்தால் நல்லது என்று கூற விரும்புகிறேன். முதியோர்

களுக்கு கொடுக்கும் உதவி 25 ரூபாயாகத்தான் இருக்கிறது. இருந்தபோதிலும்கூட, வாழ வழி இல்லாமல் அவதிப்படும் இளம் விதவைகளுக்கும் இந்த வசதியினை விஸ்தரிக்க வேண்டுமென்று பெண்களின் சார்பாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கவர்னர் பெருமான் அவர்கள் விவசாயத்தைப் பற்றியும், தொழில் முன்னேற்றத்தைப் பற்றியும், மின்சாரத்தைப் பற்றியும் மிக அழகாகவும், விரிவாகவும் குறிப்பிட்டிருக்கிறார்கள். விவசாயத்தைப் பற்றிக் கூறும்போது தமிழகம் மிகப் பாராட்டுக்குரிய முன்னேற்றத்தைப் பெற்றிருக்கிறது என்பதை அகில இந்திய ரீதியில் அமைக்கப்பட்ட குழுவே கூறியிருக்கிறது. இருந்த போதிலும் அது போதாது. இன்னும் முன்னேற என்ன வழிகள் என்பதை ஆராய்ந்து உணவுப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்க வேண்டும். விஷம் போல் ஏறிக் கொண்டிருக்கும் விலைவாசியையும் அதனால் ஓரளவு கட்டுப்படுத்த முடியும். இன்றைக்குத் தஞ்சையில் தீவிர சாகுபடித் திட்டமானது நிறைவேறும் வகை ஓரளவிற்கு நிம்மதியைத் தருகிறது. பிற மாவட்டங்களிலும் இந்தத் திட்டத்தை விஸ்தரிப்பதற்கான முயற்சிகளை அவசரமாகவும், தீவிரமாகவும் எடுக்கவேண்டுமென்று கூற ஆசைப்படுகிறேன்.

இந்த ஆண்டு 9 லட்சம் டன் உணவை அதிகரித்திருக்கிறோம் என்பதைப் பார்க்கும்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இன்னும் 16 லட்சம் டன் உணவை அதிகரிக்கவேண்டுமென்ற திட்டத்தைப் பார்க்கும்போது இன்னும் ஆழ உழுவதில் அக்கறை செலுத்தவேண்டும். காரணம், தமிழ்நாட்டில் சராசரி ஏக்கருக்கு 1,250 பவுண்டு விளைகிறது. இத்தாலியில் ஏக்கருக்கு 4,000 பவுண்டு விளைகிறதாம். ஆகவே முடிந்தால் விவசாயிகளை அங்கே அனுப்பி வைத்து என்ன முறைகளை அங்கு கையாள்கிறார்கள் என்பதைப் பார்த்து அதனால் உணவு உற்பத்தியை அதிகரிக்க வழியிருக்கிறதா என்பதை தீவிரமாக சிந்தித்துப் பார்த்தால் விலைவாசிகளை கட்டுப்படுத்த முடியும். குறிப்பாக சென்னை நகரத்தின் பிரதிநிதி என்ற காரணத்தினால், நகரமக்கள் சாதாரண அடிப்படை தேவையான பொருள்களின் விலை ஏற்றத்தைப் பார்த்து அஞ்சி நடுங்குகிறார்கள். வாயளவில் பேசி, அதைச் செய்கிறோம் இதைச் செய்கிறோம் என்பதினால் இதைத் தீர்த்து வைத்து விட முடியாது. இதை ஒரு தேசியப் பிரச்னையாக யோசித்து பல துறைகளில் உள்ளவர்கள் உட்கார்ந்து ஆர அமர ஆலோசித்துப் பார்த்து எந்த வகையில் எப்படி விலைவாசியைக் கட்டுப்படுத்துவது என்று பார்க்க வேண்டும். ஒருவருக்கு விலையாகயிருப்பது மற்றொருவருக்கு வருமானமாகயிருக்கிறது. நகரப் புறங்களில் வாழ்கிறவர்களுக்கு அது விலையாகயிருக்கலாம், ஆனால் அதை உற்பத்தி செய்கிற விவசாயிகளுக்கு அது வருமானமாகயிருக்கிறது. ஒரு பக்கத்தை தாக்கி மறுபக்கத்தை வாழ வைப்பது சரியல்ல என்பதினால் இதை நன்கு சிந்தித்துப் பார்த்து—விவசாயிகள் வருமானத்தைப் பார்த்து, நகரமக்கள் படும் அவதியை

யும் பார்த்து இரண்டிற்கும் இடையே ஒரு நிலையை கடைப் பிடிக்க, சர்வ கட்சிகளும் ஆலோசித்து இது ஆளும் கட்சியின் பொறுப்பு மட்டுமல்ல எதிர்க்கட்சிகளுக்கும் இதில் பொறுப்பு இருக்கிறது என்ற பொறுப்புணர்ச்சியோடு தக்க வழிகளைக் கடை பிடிக்க தக்க ஆலோசனைகள் தர முடியுமா என்று ஆலோசித்துப் பார்த்தால்தான் அத்தகைய எதிர்கட்சிகள் பொறுப்புள்ள எதிர் கட்சிகள் என்று நாட்டுமக்கள் ஒப்புக்கொள்வர். ஆக, நகர மக்களின் உணவுப் பொருள்களுக்காவது அரசாங்கம் ஏதாவது உதவி செய்து விலைவாசியை கட்டுப்படுத்த முடியுமா என்று சிந்தித்துப் பார்த்தால்தான் குறுகிய காலத்திலாவது நல்லதொரு பலன் கிடைக்குமென்று நாங்கள் எதிர்பார்க்கிறோம்.

அடுத்தபடியாக, மின்சார உற்பத்திப்பற்றி கவர்னர் பெருமான் அவர்கள் தமது உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். மின்சாரத் தைப் பொறுத்தமட்டில் தமிழகம் மின் வேகத்தில் செல்கிறது என்பதை யாரும் மறுக்கமுடியாது. இதில் இந்தியாவிலேயே தமிழக அரசாங்கம்தான் மிகச் சிறந்த முறையில் முன்னேறி யிருக்கிறது என்பதைப் பார்க்கும்போது மின் இலாகாவில் வேலை பார்க்கும் எல்லோருக்கும் நமது பாராட்டுதல்களை தெரிவிக்க கடமைப்பட்டிருக்கிறோம். அதேசமயத்தில் வளருகிற சமுதாயத் தின் தேவைக்கேற்ப மின்சாரத்தை வருங்காலத்தில் நாம் உற்பத்தி செய்யமுடியுமா என்பதை ஆராய்ந்து பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இருக்கிற திட்டங்களையெல்லாம் ஏறக் குறைய முடித்து விட்டோம். இனிமேல் இருந்தால் ஹொகனக்கல் திட்டம் ஒன்றைத்தான் அமுல் நடத்த முடியும். அதற்குமேல் அணுசக்தி உற்பத்திசாலை வைத்தால்தான், அதாவது அணு சக்தி மூலம் மின்சாரம் வெறும் உற்பத்தி கூடத்தை அமைத்தால்தான் வளரும் சமுதாயத்தின் அளவிற்குத் தக்கபடி மின்சாரத்தை உற்பத்தி செய்ய முடியுமே தவிர அதில்லாமல் ஒன்றும் முடியாது என்பதை உணர்ந்து இந்த இரண்டிற்கும் கவர்னர் பெருமான் அவர்கள் உரையில் முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கிறது. இன்று தமிழகத்தில் ஒரு "கிரிட்" வைத்திருக்கிறார்கள். முடிந்தால் "ஸோனல் கிரிட்" என்று ஆந்திரா, கர்நாடகம், தமிழகம், கேரளம் என்று இங்கு தெற்கிலுள்ள மாகாணங்களில் உற்பத்தி யாகிற மின்சாரத்தை ஒன்று கூட்டி இதன் மூலம் லாபம் வருமா என்று பார்த்து அந்த அமுல் நடத்தினால் அது வரவேற்கத் தக்கதாகயிருக்கும். அடுத்தபடியாக தொழில் வளம்பற்றி குறிப் பிட்டிருக்கிறார்கள். தொழில் வளம் மிக மிக இன்றியமையா தது. அதைப் பெருக்கினால்தான் வருங்காலத்தில் வளமை மிக்க சமுதாயத்தை அமைக்கமுடியும். அந்த வகையில் தொழில் துறை அமைச்சர் அவர்கள் எவ்வளவு முயற்சிகள் எடுக்க முடியுமோ அவ்வளவு முயற்சிகளையும் எடுத்து ஓரளவு தமிழகத் தில் தொழில் துறையை முன்னேற்றியிருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்கமாட்டார்கள். மேலும் மேலும் தொழில் துறை முன்னேற வேண்டுமென்றுதான் நாங்கள் விரும்புகிறோம். அலு மினியம் தொழிற்சாலை, அறுவை சிகிச்சைக்கு வேண்டிய கருவிகள்

[Srimathi T. N. Anandanayaki] [24th April 1962

உற்பத்தி செய்யும் தொழிற்சாலை, டாங்க் உற்பத்தி செய்யும் தொழிற்சாலை இவைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இதில் "எம்ப்ளாய்மென்ட் பொட்டன்ஷியல்", எவ்வளவு பேர்களுக்கு இதில் வேலை வாய்ப்பு இருக்கிறது என்பதைப் பார்க்கும்போது வேலையில்லாத் திண்டாட்டம் இன்னும் குறைவதற்கு ஏதாவது வழிவகை செய்யமுடியுமா என்று பார்க்க வேண்டும். தொழில் வளத்தோடு இதையும் ஆலோசித்துப்பார்த்து வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் துரிதமாக எடுக்கப்படுமானால் உண்மையிலேயே மக்கள் அதைப் போற்றிப் பாராட்டுவார்கள். சென்னை நகரப் பிரதிநிதி என்ற முறையில் ஒன்று சொல்ல விரும்புகிறேன். குறிப்பாக சென்னை நகரத்தில் பலவிடங்களில் பல தொழிற்சாலைகள் ஆரம்பிக்க பலர் முன் வருகிறார்கள். இந்தியாவிலேயே எல்லா மாநிலங்களையும்விட சென்னையில்தான் ஆரம்பிக்க அந்நியர்கள்கூட ஆசைப்படுகிறார்கள் என்பதை ஆதாரபூர்வமாக அறிய வந்தேன். சென்னையைப் பற்றி அவ்வளவு நல்லெண்ணம் இருந்தும், இங்கு தொழிற்சாலைகள் ஆரம்பிக்க ஆசையிருந்தாலும் ஒரு சில வசதிகள் தர முடியவில்லை என்ற காரணத்தினால் பல தொழிற்சாலைகள் ஆரம்பிக்கும் வாய்ப்பை இழந்து வருகிறோம். ஆவடி, அம்பத்தூர் போன்ற இடங்களில் தொழிற்சாலைகள் ஆரம்பிக்க தனியார் துறையினர், மற்றதுறையில் உள்ளவர்கள் முன் வந்தாலும் தண்ணீர் இல்லை என்பதைப் பார்த்து அவர்கள் எப்படி ஆரம்பிப்பது என்று அஞ்சி நடுங்குகிறார்கள். ஆகவே சென்னை நகர தண்ணீர் பிரச்னையை அரசாங்கம் ஒரு அவசரப் பிரச்னையாக எடுத்துக் கொள்ள வேண்டும். மக்களுக்கு குடி தண்ணீர் வசதிக் குறைவு இருக்கிறது, தொழிற்சாலைகள் ஏற்படும் வாய்ப்பும் குறைகிறது. ஆகவே, காவேரித் தண்ணீர், அல்லது கோதாவரி தண்ணீர் அல்லது எந்தத் தண்ணீரையாவது அவசரமாகக் கொண்டு வருவதற்கு நாம் வேலை செய்தால்தான் சென்னை நகரத்தில் பல தொழிற்சாலைகள் ஏற்படமுடியும், அதோடு சென்னை நகர மக்களின் குடிதண்ணீர் வசதியையும் பெருக்க முடியும். வெய்யில் ஏற ஏற தண்ணீர் பிரச்னை பெரும் பிரச்னையாகி விடுகிறது. புழலேரி தண்ணீர் போதாது என்று கண்டு விட்டோம். வருடத்திற்கு ஒன்று, இரண்டு லட்சம் என்று மக்கள் தொகை பெருகி வருகிறது. இதில் நகராண்மைக் கழகம் அக்கரை காட்டவேண்டும். அப்படி அவர்கள் செய்யாதிருக்கும்போது அந்தத்துறையில் அவர்கள் கவனத்தைச் செலுத்தவில்லை என்று கண்டு வருத்தப்படுகிறோம். ஆகவே அரசாங்கம் இதை ஒரு அவசரப் பிரச்னையாக எடுத்துக் கொண்டு—வேண்டுமானால் சென்னை நகர மக்கள் தண்ணீர் சப்ளைக்காக செய்கிற திட்டத்திற்கு பணம் கொடுக்கக்கூட தயாராயிருக்கிறார்கள். வரி போட்டால் அத்திட்டத்திற்காக வரி கொடுக்கவும் தயார். ஆக, தண்ணீர் மிக மிக அவசியம் என்பதை உணர்ந்து தண்ணீர் பிரச்னையை எவ்வளவு விரைவாக தீர்க்க முன் வருகிறார்களோ அந்தளவு சென்னையில் தொழில்களும் வளரும் என்பதை சிந்தித்துப் பார்க்கவேண்டும். கடைசியாக, தூத்துக்குடி துறைமுகம் பற்றி எடுத்துக் கூறியிருக்கிறார்கள் கவர்னர்

24th April 1962] [Srimathi T. N. Anandanayaki]

பெருமான் அவர்கள். தூத்துக்குடி துறைமுகம் வளர்ச்சி அடையாது, அதைப்பற்றி கவலைப்பட மாட்டார்கள், தென்னகத்தைப் பற்றி அக்கரையில்லை என்றெல்லாம் அவசரப்பட்டு, ஆத்திரப்பட்டு பேசி வந்த எதிர்கட்சியினருக்கு இது ஒரு நல்ல பதிலை அளிக்கிறது. தூத்துக்குடி துறைமுகத்திட்டத்தில் அக்கரையுண்டு, அங்கு முன்னேற்ற வேலைகள் ஆரம்பத்திருப்பது போற்றத்தக்கது. பின்னர், சேலம்-பங்களூர், விருதுநகர்-மானுமதுரை ரெயில்வே பாதைத் திட்டம் போற்றத்தக்கது. இன்னும் ரயில்பாதை இல்லாத பல யிடங்கள் இருக்கின்றன. இவற்றையும் தீர்த்து வைப்பது மிக மிக நல்லது. அடுத்தபடியாக, இந்தக்கூட்டத்தில் "மெட்ருஸ் கல்டிவேட்டிங் டெனன்ட்ஸ் ப்ரொட்டக்ஷன் ஆக்ட்", பண்ணையாள் சட்டத்தை திருத்தணிக்கு விஸ்தரிப்பதுபற்றி இக்கூட்டத்தில் ஆராயப்படுமென்று கூறியுள்ளார். அதை விட முக்கியமானதொரு பிரச்னை சென்னை நகரத்தை தாக்கியிருக்கிறது. அதுதான் "வீட்டு வாடகை கட்டுப்பாடுச் சட்டம்". அதை மாற்றுவதா வேண்டாமா என்று பொறுக்கு கமிட்டியில் ஆராய்ந்து பார்த்து ஒரு மாறுதலை ஏற்றுக் கொண்டோம். இதனால் பல கேஸ்கள் கோர்ட்டுகளில் தாக்கல் செய்யப்பட்டு அவைகள் முடிவு செய்யப்படாமல் தொங்கிக் கொண்டிருக்கிறது. ஆகவே ரென்ட் கண்ட்ரோல் அமென்ட்மென்ட் பில்லை இந்தக் கூட்டத்திலேயே கொண்டு வந்து ஆராய்ந்துபார்த்து முடிவு செய்யவேண்டும். இது அன்றாடப் பிரச்னை. இருக்கிற வீட்டிற்கு ஆபத்து, வியாபாரஸ்தலத்திற்கு ஆபத்து. இரண்டும் போய்விட்டால் வாழ்விற்கே ஆபத்து. ஆகவே நகர்புற மக்களின் பிரச்னையாகிய இந்தப் பிரச்னையை அம்மையார் அவர்கள் அவசரமாக கவனித்து இந்தக் கூட்டத்திலேயே முடிந்தால் கொண்டு வந்து இந்தச் சட்டத்தை அமுல் நடத்த முன்வருவார்கள் என்று நினைக்கிறேன்.

குறிப்பாக நம்முடைய நகரத்தை எடுத்துக்கொள்ளும் பொழுது, நகரத்தின் சுற்றுப்புறங்களில் எல்லாம் பல தொழிற் சாலைகள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. அதே நேரத்தில் அதிகமான குடிசைகளும் புதிதாக தோன்றிக்கொண்டிருக்கின்றன. சேரிகள் தோன்றிக்கொண்டிருக்கின்றன. ஆகவே இவைகளுக்கான வசதிகளை எல்லாம் செய்து கொடுப்பதற்காக அரசாங்கம் முக்கிய கவனம் செலுத்தவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதே நேரத்தில் Master Plan for the City என்று ஒரு திட்டம் நம்முடைய நகரத்திற்கு மிகவும் தேவையாக இருக்கிறது. ஆகவே இந்தத் திட்டத்தை அரசாங்கம் அவசரமாகவும், அவசியமாகவும் கொண்டு வர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இம்மாதிரியான ஒரு திட்டத்தை கல்கத்தா நகரத்திற்கு கொண்டு வந்திருக்கிறார்கள். சென்னை நகரத்தைப் பொறுத்த வரையில் நாம் எப்போதுமே பிற நகரங்களுக்கு பின் தங்கியதே இல்லை. கல்கத்தாவில் இதை நிறைவேற்றியிருக்கிறார்கள். அதே போன்று நம்முடைய நகரத்திற்கும் ஒரு மாஸ்டர் பிளானை கொண்டு வந்து நகரத்தைச் சீர்படுத்தவேண்டியது மிகவும் அவசியம் என்பதை சொல்ல ஆசைப்படுகிறேன். 9-30 a.m.

[Srimathi T. N. Anandanayaki] [24th April 1962

அதேபோன்று நகரத்தில் இருக்கின்ற பல மேம்பாலங்கள் எல்லாம் கட்டி பல காலங்கள் ஆகின்றன. அவைகளை எல்லாம் செப்பனிட வேண்டியது மிகவும் அவசியம் என்பதையும் தெரிவித்துக்கொள் கின்றேன். அதே போன்று ரஸ்தாக்களை எல்லாம் அகலப்படுத்து வதும் அவசியமாக இருக்கின்றது. இப்போது ஒரே ரஸ்தாவில் மூன்று வரிசைகள் நான்கு வரிசைகளில் கார்கள் போய்க்கொண் டிருக்கின்றன. குறுகிய இடங்களில் இம்மாதிரியான நெருக்கடி கள் ஏற்படுவதால் பலவிதமான கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இம் மாதிரியான அவஸ்தைகளை போக்குவதற்கு, ரஸ்தாவை விஸ்தரிக்க வேண்டியது மிகவும் அவசியம். ஆகவே ரஸ்தாவை விஸ்தரிப்ப தில் அரசாங்கம் உடனடியாக கவனம் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று தாழ்மையோடு கேட்டுக்கொள்கிறேன்.

எனக்கு இச் சந்தர்ப்பத்தில் கவர்னர் பெருமான் அவர்களது உரைக்கு நன்றி செலுத்தக்கூடிய தீர்மானத்தை கொண்டு வர சந்தர்ப்பம் கிடைத்தது எனக்கு கிடைத்த பெரும்பேறு என்று நான் கருதுகிறேன். இதில் பல விஷயங்கள் சொல்லப்படவில்லை என்று குற்றம்சாட்டுவது சரியல்ல. காரணம் கவர்னர் பெரு மான் அவர்கள் பொதுவாக இருக்கின்ற கொள்கைகளைத்தான் பரந்த அளவில் அவர்களது உரையில் எடுத்துக்கூற முடியுமே ஒழிய ஒவ்வொரு பிரச்னையிலும் விரிவான கொள்கைகளை எடுத் துக்கூற முடியாது. பொதுவாக இருக்கின்ற நிலைமைகளை சொல்லி, வருங்காலத்தில் இந்த சபையிலுள்ளவர்கள் எதைப் பற்றியெல்லாம் சிந்திக்கவேண்டும் என்பதைப்பற்றியும், இந்த சபையில் இதுவரை இருந்து வருகிற, கண்ணியம், கட்டுப்பாடு இவைகளுக்கு எந்தவிதமான பங்கமும் வரக்கூடாது, இதுவரை இருந்து வந்திருக்கிற இந்த அவையின் மதிப்பு, கண்ணியம் இவைகள் காப்பாற்றப்பட வேண்டும் என்பதைப்பற்றி எடுத்துக் கூறியிருக்கிறார்கள். இந்தப் பொறுப்பு நம்மைச் சேர்ந்தது. அந்த அளவில் இந்த அவையினுடைய பெருமையை காப்பாற்றக் கூடிய அளவில், அங்கத்தினர்கள், வருங்காலத்தில், நல்ல முறையில் தங்கள் வேலைகளை செய்து வரவேண்டும் என்பது மட்டுமல்ல, தமிழகத்திற்கே பெருமையை தேடித் தர வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, எனக்கு இச்சந்தர்ப்பத்தை அளித்த கனம் சபாநாயகர் அவர்களுக்கு என் நன்றியை தெரிவித்துக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

**MR. SPEAKER :** இனிமேல் கனம் அங்கத்தினர்கள் ஒவ்வொரு வரும் பேசுவதற்கு 15 நிமிடங்கள் எடுத்துக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன். பின்னல் இதைக் கூட்டவோ குறைக்கவோ செய்யலாம் என்றும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**SRI J. MATHA GOWDER :** கனம் சபாநாயகர் அவர்களே, நேற்றைய தினம் இந்த மன்றத்திலே கவர்னர் பெருமான் அவர் கள் நிகழ்த்திய உரைக்கு மதிப்பிற்குரிய அங்கத்தினர் திருமதி அனந்தநாயகி அம்மையார் அவர்கள் நன்றி தெரிவித்ததை

24th April 1962] [Sri J. Matha Gowder]

ஆதரித்து ஒரு சில கருத்துக்களை சொல்ல விரும்புகிறேன். குறிப்பாக கவர்னர் பெருமான் அவர்கள் அண்மையில் நடந்த பொது தேர்தலைப்பற்றி தேர்தலில் அரசியல் கட்சிகளிடையே காரசாரமான வாக்குவாதங்கள் ஏற்பட்டிருந்த போதிலும் அந்தக் கட்டத்தைத்தாண்டி இப்போது இந்த மன்றத்தின் அங்கத்தினர்களாக வந்திருக்கிறோம் என்பதை நமக்கு எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். அந்தக் கட்டத்தைத் தாண்டிய பிறகு தேர்தலில் நமக்குள் அரசியல் வேறுபாடுகள் காரணமாகவும், வேறு பல விரோதங்கள் காரணமாகவும் பல கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டிருக்கலாம். மக்களிடத்திலே பல வாக்குறுதிகளை கூறி வாக்குகளைப் பெற்றிருக்கலாம். ஆனால் அந்தக்கட்டத்தை எல்லாம் தாண்டி இப்போது சபையில் அங்கத்தினர்களாக இருக்கக்கூடிய பொறுப்பு நமக்கு வந்திருக்கிறது என்பதை நாம் உணர வேண்டும் என்பதற்காகத்தான் கவர்னர் பெருமான் அவர்கள் இதைக்குறிப்பிட்டிருக்கிறார்கள் என்று நம்புகிறேன். இந்த மன்றத்திற்கு வந்த பிறகு, நாம் மக்களுக்கு என்ன செய்யவேண்டும், அடுத்துவரும் ஐந்தாண்டு காலத்தில் மக்களுக்கு என்ன செய்யவேண்டும், நாட்டின் முன்னேற்றத்திற்காக என்னென்ன செய்யவேண்டும், என்பதைப் பற்றியெல்லாம் தீர ஆலோசித்துப் பார்த்து அதற்கான காரியங்களை செய்யவேண்டும். அதல்லாமல் அரசியல் கண்ணோட்டத்தோடு நாம் இங்கு சபையின் அங்கத்தினர்களாக வந்த பிறகும் செயல்படுவது பொருத்தமாக இருக்காது என்பதை முதன்முதலில் குறிப்பிட விரும்புகிறேன். குறிப்பாக தேர்தல் காலத்தில் மக்களுடைய வாக்குகளை பெறுவதற்காக, உங்களுக்கு ரூபாய்க்கு ஐந்து படி அரிசி தருகிறோம், அல்லது மூன்று படி அரிசி தருகிறோம் என்றெல்லாம் சொல்லிவிடலாம். ஆனால் அந்தக்கட்டத்தை எல்லாம் தாண்டி இங்கு வந்த பிறகு, ஐந்து படி அரிசி கொடுக்க முடியுமா, மூன்று படி அரிசி கொடுக்க முடியுமா என்பதைப்பற்றி சிந்தித்துப்பார்த்து, நாம் மக்களிடத்தில் இவ்வாறு கூறினது சரியா, முறையா என்பதைப்பற்றி சிந்திக்கக் கூடிய நிலையில் இருக்கிறோம். நம்முடைய மாகாணத்தைப் பொறுத்தவரையில், நாம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில், நாம் உற்பத்தியை பெருக்கியிருக்கிறோமா இல்லையா என்பதைப்பற்றி சிந்திக்கவேண்டும். நாம் ஒன்பது லட்சம் டன் அரிசியை அதிகரித்திருந்தும் விலைவாசி உயர்ந்து கொண்டு தான் இருக்கிறது. அதே நேரத்தில் நம்முடைய உற்பத்திப் பெருகாமல் இருந்திருந்தால் சர்க்கார் இதில் அக்கறை காட்டவில்லை என்று அரசாங்கத்தை குறை கூற முடியும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் அடிப்படையில், திட்டமிட்டு நாம் ஒன்பது லட்சம் டன் அளவுக்கு உற்பத்தியை பெருக்கியிருக்கிறோம். ஆனால் அதே நேரத்தில் விலைவாசியும் உயர்ந்திருக்கிறது என்பதையும் நாம் மறுப்பதற்கில்லை. இதை நாம் ஒரேயடியாக கட்டுப்படுத்திவிட முடியுமா என்பதைப்பற்றியும் சிந்தித்துப்பார்க்கவேண்டும். சாதாரணமாக நகரப்புறங்களிலுள்ள மக்களுக்கு, மூன்று படி அல்லது பத்து படி கொடுத்தாலும் ஆனந்தமாக சாப்பிட்டுக் கொண்டு இருக்கலாம். ஆனால் கிராமபுறங்களிலுள்ள மக்கள் தான் நான்ய

[Sri J. Matha Gowder] [24th April 1962]

உற்பத்திக்கு மிகவும் முக்கியமானவர்கள் என்பதையும், அவர்கள் தான் உற்பத்தி செய்வதற்காக கஷ்டப்பட்டு உழைக்கிறவர்கள் என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. கிராமப்புறத்தில் போய் ஐந்து படி அரிசி கொடுங்கள் என்று கேட்டால், அவ்வாறு கொடுப்பதற்கு அவர்கள் தயாராக இல்லை. நகரப்புறத்தில் தான் இவ்வாறு சொல்ல முடியும். விவசாயத்தைப்பற்றி கிராமபுறங்களில் உள்ள மக்கள் தான் நன்றாக அறிந்து கொண்டிருக்கிறார்கள். ஐந்து படி அரிசி கொடுத்தால் கிராம மக்களுக்குக் கட்டுப்படியாகுமா என்பதை நாம் ஆலோசித்துப்பார்க்கவேண்டும். தேர்தல் கழிந்த பின்னும் இதைப்பற்றி கவர்னர் உரையில் ஒன்றும் சொல்லப்படவில்லை, விலைவாசிக் குறைப்பைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை என்றுள்ள குறைகளை இதன்மீது சொல்லிக்கொண்டிருப்பது உசிதமாக இருக்காது என்பதை தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, தேர்தலை எடுத்துக்கொண்டால், நமது பாரத நாட்டில் காங்கிரஸ் கட்சி அரசாங்கத்திற்கு வந்ததின் பின்னால் மூன்று பொது தேர்தல்கள் நடந்திருக்கிறது. இந்த மூன்று தேர்தல்களும் மிகவும் கண்ணியமாகவும் கட்டுப்பாடாகவும் நடந்து முடிந்திருக்கின்றன. இந்தப் பெருமை பாரத காங்கிரஸ் மகா சபைக்கு ஏற்பட்ட பெருமையாகும் என்பதை யாரும் மறைக்க முடியாது. குறிப்பாக தமிழ்நாட்டு அரசாங்கம் மூன்று தேர்தல்களையும் எவ்வளவோ பொறுப்பாகவும், எவ்வளவோ சகிப்புத் தன்மையுடனும் நடத்தியிருக்கிறது என்பதை இந்த நாட்டு மக்கள் அறிவார்கள். இதில் எந்தவிதமான அசம்பாவிதங்களும் நிகழாமல் தேர்தல்கள் நடந்திருக்கின்றன என்பதைப் பார்த்து நாம் பெருமைப்பட்டுக்கொள்ள வேண்டும். இத்தேர்தல்களை எல்லாம் நல்ல முறையில் நடத்திய நம் அரசாங்கத்திற்கு மக்கள் சார்பாக உங்கள் மூலமாக பாராட்டுகளை தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, உணவு உற்பத்தியைப் பொறுத்தவரையில், விலைவாசியை கட்டுப்படுத்திவிட்டால் மட்டும் திருப்தி ஏற்பட்டுவிடுமா என்பதைப் பற்றி நாம் ஆலோசித்துப்பார்க்க வேண்டும். உணவு விலையை குறைத்துவிட்டால் அதன் காரணமாக உணவு உற்பத்தியில் கிராம மக்கள் அக்கறை காட்டாமல் இருந்துவிட்டால் நாட்டில் உணவு பற்றாக்குறை ஏற்படும் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. விலைக்குறைப்பின் காரணமாக பற்றாக்குறை ஏற்பட்டால், அப்போதும் நாம் அரசாங்கத்தின் மீது தான் குற்றஞ்சாட்டக்கூடிய நிலைமை ஏற்படும். பற்றாக்குறை ஏற்பட்ட நாட்களில் எல்லாம் என்னென்ன நடந்தன என்பதை நாம் நன்கு அறிவோம். யுத்த காலத்தில் இந்நிலைமை ஏற்பட்ட போது, நாம் "ரேஷன்" என்ற பங்கீட்டு முறையை வைத்திருந்தோம். பங்கீடு முறையில் மக்களுக்கு எவ்வளவு கஷ்டம் ஏற்பட்டது, அதை வைத்துக் கொண்டு சர்க்காரை எவ்வளவு குறை கூறி வந்தோம் என்பதைப் பற்றி கொஞ்சம் இன்றைக்

24th April 1962] [Sri J. Matha Gowder]

குச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இன்றைக்கும் உற்பத்தி குறைந்துவிடுமானால் பங்கீடு முறை நிச்சயமாக வரும் என்பதை அறிந்திருக்கிறோம். அந்த மாதிரி பங்கீடு முறை வந்து விட்டால், காங்கிரஸ் அரசாங்கத்தில் ரேஷன் வந்து விட்டது என்று மக்களிடத்தில் குறை கூறலாம் என்று அரசியல் கண்ணோட்டத்தில் யாரும் நினைத்துப் பார்க்கக் கூடாது என்று கனம் சபாநாயகர் மூலமாக நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். எந்த ஒரு நாட்டிலும் பொருளாதாரம் உயர்ந்து போகும்போது விலைவாசி உயர்ந்துகொண்டு தான் போகும் என்பதை நாம் கண்கூடாகக் காண்கின்றோம். மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயரும்போது விலைவாசி உயர்ந்துகொண்டு தான் போகும். பொருளாதார வளர்ச்சி ஏற்படும் போது நிச்சயமாக விலைவாசி உயரும் என்பதை நாம் எல்லோரும் அறிந்திருக்கிறோம். இன்றைக்கு வாங்கும் சக்தி அதிகரித்திருக்கிறதா இல்லையா என்று பார்க்கவேண்டுமே யல்லாது வேறு விதமாகத் திரித்துக் கூறக் கூடாது என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக நமது ஐந்தாண்டுத் திட்டத்திலே இந்த ஆண்டுக்கு 55 கோடியாக ஒதுக்கியிருந்த தொகை 60 கோடியாக செலவு ஏற்படும் என்று கவர்னர் உரையிலே குறிப்பிட்டிருக்கிறார். இப்போது 5 கோடி ரூபாய் அதிகமாக சேகரம் செய்தாக வேண்டிய நிலையில் இருக்கிறோம். இந்த 5 கோடி ரூபாய்க்கு என்ன செய்வது? ஜூன் மாதத்தில் வரவிருக்கும் நிதி நிலை அறிக்கையிலே புது வரிகளை ஏதாவது ஏற்படுத்தினால் அப்போது அதைப் பற்றி சர்க்காரின் பேரில் குறை கூறத் தயாராக இருப்பார்கள். இன்றைக்கு நிதியும் அதிகமாக வேண்டியிருக்கிறது, வரியும் போடக் கூடாது என்று சொன்னால் ஒன்றுக்கொன்று எப்படி பொருத்தமாக இருக்கும் என்று எனக்குப் புரியவில்லை. இன்றைக்குக் கேள்வி நேரத்தில் கூட பல அங்கத்தினர்கள் கேள்வி மேல் கேள்வி கேட்டார்கள். வயது முதிர்ந்தவர்களுக்கு பென்ஷன் வழங்கும் திட்டத்திலே யார் யாருக்கு பென்ஷன் கொடுக்கப் போகிறீர்கள், விதவைகளுக்கும் பென்ஷன் கொடுக்கப்படுமா, இன்னும் அதிகமாகக் கொடுக்கவேண்டும் என்றெல்லாம் எடுத்துக் கூறினார்கள். வர வர எடுத்ததற்கெல்லாம் பணம் கொடுக்க சர்க்காரை எதிர்பார்க்கும்போது, நிதி வசதி பெறுவதற்காக ஏற்பாடு செய்தால், வரி போட்டு விட்டார்கள் என்று சர்க்கார் பேரில் குறை கூறுவது பொருத்தமாக ஆகாது என்று நான் தாழ்மையோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

திட்ட ஆரம்பத்தில் சாதாரணமாக எந்த நாட்டிலும், திட்டத்தைப் போடும்போது வரிச்சுமை இருக்கும் என்பதை யாரும் மறுக்க முடியாது. திட்ட ஆரம்பத்தில் வரிச்சுமை இருந்தாலும், திட்டம் முடிந்த பிறகு, அதனுடைய பலன் நாட்டு மக்களுக்குக் கிடைத்த பிறகு, எவ்வளவு வரிச் சுமையைத் தாங்கியிருந்தாலும், அந்த வரிச்சுமை அவர்களுக்குக் கிடைக்கும் பலனுக்கு ஈடு ஆகாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இப்போது

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மூன்றாவது வருஷத்திலே அடியெடுத்து வைத்திருக்கிறோம். எந்த நாடாவது 10 ஐந்தாண்டுத் திட்டங்களை முடிக்கும் முன், அல்லது 8 ஐந்தாண்டுத் திட்டங்களை முடிக்கும் முன் பொருளாதாரத்தில் உயர்ந்திருக்கிறதா என்று சற்று ஆலோசித்துப் பார்க்கவேண்டும். எந்த நாடும் 8 அல்லது 10 ஐந்தாண்டுத் திட்டங்களைப் போட்டு அதன் பிறகு தான் பொருளாதார முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்று நாம் தெளிவாகத் தெரிந்துகொண்டிருக்கிறோம். இன்றைக்கு நாம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே இரண்டு வருஷத்தை முடித்திருக்கிறோம். நம்முடைய இன்றைய நிலையைப் பற்றி சற்று யோசித்துப் பார்த்தால் நாம் நமது நாட்டிலே எவ்வளவோ முன்னேற்றம் கண்டிருக்கிறோம் என்பதைப் பற்றி யாரும் மறுத்துக் கூற முடியாது என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். குறிப்பாக நகரத்தில் முன்னேற்றம் அடையவில்லை என்று நகரத்தில் இருக்கக் கூடிய மக்கள் சொல்லிவிடலாம். இன்றைக்கு கிராமப்புறத்திற்கு வந்து பார்க்கவேண்டும். பத்து ஆண்டுகளுக்கு முன்—நாடு சுதந்திரம் அடைந்ததற்கு முன்—எந்த கிராமத்திற்காவது ரோடு வசதி இருந்ததா என்று பார்க்க வேண்டும். இன்றைக்கு எல்லா கிராமங்களுக்கும் ரோடு போடப் பட்டிருக்கிறது. எல்லா கிராமங்களிலும் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இன்னும் நடைமுறை ஆண்டிலிருந்து எல்லா மாணவர்களுக்கும் கட்டாயக் கல்வியை அமுல் நடத்தப் போகிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். இது மிகவும் போற்றத்தக்க விஷயம். பத்து ஆண்டுகளுக்கு முன் அல்லது ஏழு ஆண்டுகளுக்கு முன் அமைச்சரவையிலே இருந்தவர்கள் கல்விக்குக்கூட குலக் கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்து குட்டிச்சுவராக்கப் பார்த்தார்கள். இன்றைக்கு நாட்டு மக்கள் முன்னேற கட்டாயமாக படிப்பு சொல்லிக்கொடுக்க வேண்டும், மதிய உணவு கொடுக்கிறோம், இலவச ஆடை கொடுக்கத் தயாராக இருக்கிறோம் என்று கல்வியின் தரத்தை உயர்த்த அமைச்சரவை பாடுபடுகிறது என்றால் அந்த அமைச்சரவையைப் போற்றவேண்டுமென்று கனம் அங்கத்தினர்கள் அனைவருக்கும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்றைக்கு அரசாங்கம் அநேக திட்டங்களை நிறைவேற்றியிருக்கிறது, அதனால் நாட்டில் பொருளாதார உயர்வு ஏற்பட்டிருக்கிறது. இன்றைக்கு கிராமங்களில் ஏற்பட்டிருக்கக் கூடிய உயர்வைப் பற்றி சற்று சிந்திக்கவேண்டும். நகரத்தில் அதிக வசதி கிடைக்கவில்லையென்று நகர மக்களிடத்தில் சொல்லிக் கொள்வது சரியல்ல. கிராமப்புறங்களில் போய்ப் பார்க்கும்போது நமது காந்தி மகான் கண்ட கிராம ராஜ்யம் ஏற்பட்டுள்ளது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கிராம முன்னேற்றத்திற்கு பள்ளிக்கூடங்கள், ரோடுகள், குடி தண்ணீர் வசதி எல்லாம் மிகவும் அவசியம். இன்றைக்கு காங்கிரஸ் அரசாங்கம்—தமிழ் நாட்டு அரசாங்கம்—இந்தக் காரியங்களையெல்லாம் செய்துகொண்டு வந்திருக்கிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பொரு

24th April 1962] • [Sri J. Matha Gowder]

ளாதாரத் துறையில் உயர்வு ஏற்படவில்லையென்று சொன்னால் இன்றைக்கு நகரத்தில் பாருங்கள். காலையிலே 8 மணியிலிருந்து 10½ மணி வரை அல்லது 11 மணி வரை நகரத்திலே ஓடும் கார்களைப் பாருங்கள் எத்தனை கார்கள் ஓடுகின்றன? இந்தக் கார்களெல்லாம் பணம் இல்லாமல் வந்து விட்டதா? யாராவது இவைகளைக் கடனாகக் கொடுத்து விட்டார்களா? அல்லது வெறுமனே கிடைத்து விட்டதா? இதைக் கொஞ்சம் பார்க்கவேண்டும். இன்றைக்கு எத்தனை கார்கள் ஓடுகின்றன? இவைகளை வாங்குவதற்கு பணம் எங்கிருந்து வந்தது? பொருளாதாரத் துறையில் உயர்வு இல்லை என்றால், மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயரவில்லையென்றால் பணம் எங்கிருந்து வந்தது. பஸ்களை எடுத்துக் கொள்ளுங்கள். எத்தனை பஸ்கள் ஓடுகின்றன? எத்தனை ரூட்டுகளில் ஓடுகின்றன. புதிது புதிதாக ஆயிரக்கணக்கான பஸ்கள் இன்றைக்கு ஓடினாலும் கூட பஸ்களில் நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. இன்னும் அதிகமாக வேண்டும் என்று கேட்கிறோம். பஸ்களில் வெறுமனே ஏற்றிக்கொண்டு செல்லுகிறார்களா? அதற்கும் காசு தான் கொடுக்கவேண்டும். காசு இருக்கும் காரணத்தினால் தான் பஸ்ஸில் ஏறுகிறார்கள். காசு இல்லாமலிருந்தால் இப்படி பஸ்ஸில் போக முடியாது. முன்பெல்லாம் கிராமப் புறத்தில் உள்ள மக்களில் யாரும் பஸ்ஸில் ஏறுவது கிடையாது. 10 மைல் இருந்தாலும் கூட நடந்து தான் பட்டணம் சென்று வியாபாரம் செய்து வந்தார்கள்—தங்களுக்கு வேண்டிய பொருள்களை வாங்கிக் கொண்டு வந்தார்கள். இன்றைக்குப் பார்த்தால் கிராம மக்கள் ஒரு மைல் கூட நடப்பதில்லை. இன்றைக்கு எல்லா இடத்திற்கும் பஸ் ரூட் வேண்டுமென்று கேட்கிறார்கள். அந்த அளவுக்கு நாம் முன்னேறியிருக்கிறோம் என்பதை யாரும் மறுக்க முடியாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். முன்பெல்லாம் கிராமத்திலுள்ளவர்கள் நகரத்திற்குச் சென்று தான் ஜவுளிகள் வாங்க முடியும். நகரத்தில் தான் ஜவுளிக் கடைகள் இருக்கும். இன்றைக்குப் பார்த்தால் கிராமத்திலெல்லாம் ஜவுளிக் கடைகள் திறக்கப்பட்டுள்ளன. அவர்கள் ஒன்றும் வெறுமனே கொடுப்பதில்லை. பணம் கொடுத்துத் தான் வாங்கவேண்டும். ஒவ்வொரு துறையிலும் வாங்கும் சக்தி அதிகரித்திருக்கிறது என்பதைப் பற்றி யாரும் மறுத்துக் கூற முடியாது.

ஆகையால் இதை மனதில் வைத்துக்கொண்டு மக்களுடைய வாழ்க்கைத்தரம் மேலும் உயரவேண்டி இந்த மன்றத்தின் மூலமாகச் செயல்படவேண்டுமே யல்லாது எதையும் அரசியல் கண்ணோட்டத்தில் பார்த்து சர்க்கார் பேரில் எப்படி குறை கூறலாம் என்று மட்டுமே யோசித்துக்கொண்டு பேசிக்கொண்டு காலத்தை விணாக்காமல் வரும் ஐந்து வருஷத்தில் மக்களுக்கு என்ன செய்ய முடியும், அதில் நம்முடைய பங்கு என்ன என்பதைத் திர யோசித்துச் செயல்பட வேண்டுமென்று கனம் சபாநாயகர் மூலமாக எதிர் கட்சி அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக கிராம மக்களின் பிரதிநிதிகளிடத்தில் அபிவிருத்தித் திட்டம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. இதைப் பற்றி

[Sri J. Matha Gowder] [24th April 1962

கவர்னர் பெருமான் உரையில் குறிப்பிட்டிருப்பது ஒரு நல்ல அம்சம். சர்க்காரிலே பட்ஜெட் திட்டத்தைப் போட்டு, கிராம மக்களை நிறைவேற்றும்படி ஆணையிடும் நிலை சுதந்திரம் அடையும் முன் இருந்தது. இன்றைக்குப் புதியதாக ஒரு திட்டத்தை ஏற் படுத்தியிருக்கிறோம். கிராம பஞ்சாயத்து யூனியன்கள் ஐந் தாண்டுத் திட்டம் ஒன்றைத் தயாரித்துக்கொண்டு அந்தத் திட்டத் தின் அடிப்படையில் உணவு உற்பத்தி, கிராம அபிவிருத்தி ஆகிய வேலைகளில் ஈடுபட்டு நிறைவேற்றும் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைத்திருக்கிறோம். அதற்காக சர்க்காரை கிராம மக்கள் போற்றுவார்கள். இது தான் உண்மையிலேயே காந்தி மகான் கண்ட கிராம ராஜ்யம் ஆகும். கிராம மக்களுக்கு அதிகாரம் கொடுத்திருக்கிறோம். அந்த முறையில் கிராம மக்கள் செயல் படும் நிலையில் வந்திருக்கிறார்கள் என்று பெருமையோடு சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். வியாபார வளர்ச்சிக்கு ஐந்தாண்டுத் திட்டத்தைப் போட்டு ஐந்து ஆண்டுகளுக்கு என்ன தேவை, என்ன செய்து விட்டால் மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயரும் என்று முடிவு செய்யும் நிலையில் அவர்களிடத்தில் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருப்பது மிகவும் பெருமைக்குரிய விஷயம் என்று தெரிவித்துக் கொள்கிறேன். அடுத்தபடியாக மின் சாரம். நாட்டிலே, நம்முடைய தமிழ் நாட்டிலே ஆண்டு ஒன்றுக்கு 1,500 கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கப் பட்டிருக்கிறது என்பதை நான் இங்கு பெருமகிழ்ச்சி யோடு எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். கவர்னர் பெருமான் உரையிலேயும் இதைத்தான் குறிப்பிட்டிருக்கிறார் கள். இப்படி ஆண்டு ஒன்றுக்கு 1,500 கிராமங்களுக்கு மின்சார வசதி கொடுக்கப்படுகிறது என்பது எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்பதைச் சிந்தித்துப் பார்த்து பெருமைப் பட வேண்டும். முன்பு கிராமத்திலே உள்ளவர்கள் மின்சார விளக்கைப் பார்க்க வேண்டுமென்றால், பட்டணத்திற்கு வந்து இங் குள்ள மின்சார விளக்கைப் பார்த்து மின்சார விளக்கு என்பது எப்படி இருக்கும் என்பதைத் தெரிந்து கொண்டார்கள். ஆனால் இன்றைக்கு பல கிராமங்களில் மின்சார விளக்குகள் இருப்ப தோடு, இன்னும் மின்சாரம் வேண்டுமென்றும், பம்பு செட்டு களுக்கு இன்னும் அதிகப்படியான மின்சாரம் வழங்க வேண்டு மென்றும் கேட்பதைப் பார்க்கின்றோம். இந்த சமயத்திலே அமைச்சர் அவர்களுக்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். நகர்ப் புறத்திலே அதிகப்படியான மின்சாரம் உபயோகப்படுத்துவதை சற்றுக் கட்டுப்படுத்தி, கிராமத்திலே அதிகப்படியான பம்பு செட்டு கள் வைப்பதற்கு அங்கு அதிகப்படியான மின்சாரம் கொடுக்க வேண்டுமென்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். நகரத்திலே இருப்பவர்கள் எங்களுக்கு உணவு உற்பத்தி அதிகரிக்க வேண்டுமென்று கூக்குரல் இடுவதற்கு, தாங்கள் மின்சாரத்தை சற்று குறைத்துக்கொண்டு கிராம மக்களுக்கு மின்சார வசதி செய்து கொடுத்தால் நிச்சயமாக உணவு உற்பத்தி அதிகரிக்கும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். ஆகவே ஓரள வுக்கு நகரத்திலே இருக்கக்கூடியவர்கள் மின்சாரத்தைக் குறைத்

24th April 1962] [Sri J. Matha Gowder]

துக்கொண்டு கிராமங்களுக்கு கொடுக்க முன்வர வேண்டுமென்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். தற்போது 1,37,000 பம்பு செட்டுகள் நம்முடைய நாட்டிலே இருக்கின்றன. இன்னும் லட்சக்கணக்கான பம்பு செட்டுகளுக்கு மின்சார வசதி அளிக்கப் படுமானால், நாட்டிலே உணவு உற்பத்தியானது இரண்டு மடங்கு, மூன்று மடங்கு அதிகரிக்கும் என்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, மைசூர் அரசாங்கத்தோடு பேச்சுவார்த்தை கள் நடத்தி ஹோகனேக்கல் மின்சார நிலையத்தை ஏற்படுத்து வதற்கான முயற்சிகள் செய்யப்பட்டு வருகிறது என்று தெரிவிக் கப்பட்டிருக்கிறது. அதற்காக உடனடியாக முயற்சிகள் எடுத் துக்கொண்டு, இன்னும் துரிதப்படுத்தி அந்த மின்சார நிலையத்தை ஏற்படுத்துவதற்கான ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்து, அரசியல் கண்ணோட்டத்தோடு செயலில் ஈடுபடக் கூடாது என்று இந்த நேரத்திலே சபாநாயகர் அவர்கள் மூலமாக எதிர்க் கட்சி அங்கத்தினர்களுக்கு சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். குறிப்பாக, நான் நீலகிரி மாவட்டத்தைச் சேர்ந்த வன் என்ற முறையிலே ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அங்கு முன்பு ஒருமுறை சட்டசபையை நடத்தி இருக்கிறோம். மீண்டும் கோடை காலத்தில் அங்கு சட்டசபையை நடத்து வதற்கு எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் எல்லோரும் தங்கள் ஏகோ பித்த கருத்தைத் தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள் கிறேன். இதிலே எதையும் அரசியல் கண்ணோட்டத்தோடு பார்க் காமல், அந்த மாவட்டத்து மக்களுடைய வாழ்க்கைத்தரம் உயரு வதற்காக ஏகோபித்த மனப்பான்மையைத் தெரிவிக்க வேண்டு மென்றும், அந்த வகையிலே எல்லோரும் வரவேண்டுமென்றும் நான் நீலகிரி மாவட்ட மக்கள் சார்பிலே கேட்டுக்கொண்டு, எனக்கு பேசுவதற்கு இந்த சந்தர்ப்பத்தைக் கொடுத்த கனம் சபாநாயகர் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை இத்துடன் முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

* **Sri M. KARUNANITHI** : சட்டமன்றத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமானுடைய உரையின்மீது நடைபெறுகின்ற இந்த விவாதத்தில் நாங்கள் கலந்து கொள்கிற நேரத்தில், கவர்னர் பெரு மானுடைய உரைக்கு நன்றி தெரிவித்துப் பேச முடியாமல் இருக் கின்ற நிலைமைக்கு வருத்தம் தெரிவித்துக்கொள்கிறேன்.

கவர்னர் உரையில் குறை கூறக்கூடாது என்பதை நன்றி தெரி வித்து முன்மொழிந்த வழிமொழிந்த கனம் அங்கத்தினர்கள் எதிர்க்கட்சிக்காரர்களைப் பார்த்து கேட்டுக் கொண்டார்கள். எதிர்க் கட்சியிலே வீற்றிருக்கின்ற நாங்கள் குறைபாடுகள் கண்ட இடத்திலே ஆளும் கட்சியினருக்குச் சுட்டிக்காட்டி அந்த குறை பாடுகளை நீக்கி நிறைவு செய்யக் கடமையாகக் கொண்டிருக்கிற

[Sri M. Karunanithi] [24th April 1962

காரணத்தினால், கவர்னர் பெருமான் உரையிலே இருக்கின்ற குறைகளையும் சுட்டிக்காட்ட வேண்டிய அவசியத்திற்கு ஆளாகி இருக்கிறோம். இல்லை, குறைகளைப் பற்றியே பேசக்கூடாது; கவர்னர் பெருமானுடைய உரையிலே உள்ள நிறைகளைப் பற்றி மாத்திரம் தான் பேச வேண்டுமென்றால், குறைகளைப் பற்றியே இந்த மன்றத்தில் பேசக்கூடாது என்று ஒரு சட்டம் வகுத்து விட்டால், அப்போது நாம் அனைவரும் சேர்ந்து கவர்னர் உரைக்கு ஆராதனை செய்து ஏற்றுக்கொள்வதற்கு கட்டுப்பட்டு விடலாம். அப்படி இல்லாமல், கவர்னர் அவர்களுடைய உரை இந்த மன்றத்திலே படிக்கப்பட்டு, அதன்மீது விவாதம் என்கிற முறையும் அங்கிகரிக்கப்பட்டு, அந்த ஏற்பாட்டின் அடிப்படையிலே எதிர்க் கட்சிகளிலே இருக்கிறவர்கள் குறை கூறுவதற்கு முன்வருகிறார்கள் என்றால், அது தகாது, கூடாது, அர்த்தமற்றது என்று பேசுவது எதன்பாற்பட்டது என்றுதான் புரியவில்லை.

கவர்னர் பெருமானுடைய உரையிலே அண்மையில் நடைபெற்று முடிந்த பொதுத் தேர்தலைப் பற்றி முதல் பகுதியிலே குறிப்பிட்டிருக்கிறார்கள். "தங்களைச் சுற்றிக் கிளப்பப்பட்ட அரசியல் மாச்சரியங்களால் பரபரப்பு அடையாமல் நிதானத்தோடும் விவேகத்தோடும் பொதுமக்கள் வாக்குரிமையைச் செலுத்தினர்" என்கின்ற அளவிலே பொதுமக்கள் நிதானமாக நடந்து கொண்டார்கள் என்று குறிப்பிட்டிருக்கிற அளவுக்கு நான் உள்ளபடியே மகிழ்ச்சியடைகிறேன். ஏனென்றால் நிதானம் தவறி வாக்குகளை கள்ளச் சாராயம் குடித்து விட்டு திராவிட முன்னேற்றக் கழகத்தினருக்கு வாக்களித்து விட்டார்கள் என்ற அமைச்சர்கள் கூற்றுக்கு நல்ல பதிலாக நிதானத்தோடு தான் பொதுமக்கள் வாக்களித்து இருக்கிறார்கள் என்று கவர்னர் பெருமான் உரையிலே தெரிவித்திருப்பதற்கு பாராட்டு தெரிவித்துக் கொள்கிறோம். இப்படி நிதானத்தோடு அவர்கள் வாக்களித்து இருக்கிறார்கள் என்று குறிப்பிட்டு இருப்பதுபோல், அவர்கள் பரபரப்புக்கு ஆளாக்கப்படாமல், பரபரப்பு அடையாமல் காப்பாற்றப்பட்டிருக்கிறார்களா என்றால், உள்ளபடியே நடைபெற்று முடிந்த தேர்தலில் அனுஷ்டிக்கப்பட வேண்டிய ஜனநாயகம், அளவிலே குறைவாகவும், பணநாயகம் அளவிலே அதிகமாகவும், அதே நேரத்திலே அதிகாரங்கள் துர்விநியோகம் செய்யப்பட்டும், அதிகாரிகள் தங்களுடைய அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்தும், அமைச்சர்கள் தங்கள் அந்தஸ்தை, தங்களுக்குள்ள பதவி கவுரவத்தை தேர்தல் காலத்திலே பயன்படுத்திக் கொண்டும் தேர்தல் நடத்தப்பட்டது என்ற குற்றச்சாட்டை நான் கவர்னர் உரையின்மீது பேசுகின்ற இந்த இடத்திலே எடுத்துரைக்க விரும்புகின்றேன். 1957-ம் ஆண்டு நாங்கள் முதல் தடவையாக இந்த சட்டசபையிலே நுழைந்த நேரத்தில், கவர்னர் உரையைப் பற்றி குறிப்பிட்டு விட்டு, பொதுத் தேர்தலில் மந்திரிகள் நடந்துகொண்ட தகாத போக்கை எடுத்துரைத்த போது அப்போது நிதி அமைச்சராக இருந்த திரு. சுப்பிரமணியம் அவர்கள் விவாதத்திற்குப் பதில் அளிக்கின்ற காலத்தில் குறிப்பிட்

24th April 1962] • [Sri M. Karunanithi]

டார்கள். "ஒவ்வொரு மந்திரியும் தனித்தனியாக இன்னின்ன காரியங்கள் தவறாகச் செய்தார்கள். இன்னின்ன பேச்சுக்கள் பேசினார்கள், எந்தெந்த முறையில் மந்திரியின் அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்தார்கள் என்ற குற்றச்சாட்டுகளை சுட்டிக் காட்டினால், அதை நாங்கள் வரவேற்கிறோம். அதற்காக விசாரணை நடத்துவதற்கும் தயாராக இருக்கிறோம். எந்தெந்த காரியங்களில் மக்களிடம் தப்பு அபிப்பிராயம் ஏற்பட்டது என்று திட்டவட்டமான குற்றச்சாட்டுகளை எழுதிக் கொடுங்கள். அதை விசாரிக்கத் தயாராக இருக்கிறோம், இதற்கு கனம் முதன் மந்திரியும் ஒப்புக் கொண்டிருககிறார்கள் என தெரிவித்துக் கொள்கிறேன்" என்று தெரிவித்திருக்கிறார்கள். நான் அவர்களுடைய கருத்திற்கிணங்க இங்கு இரண்டொரு செய்திகள் குறிப்பிட விரும்புகிறேன்.

தேர்தல் காலத்தில் 11 கட்சிகளைக் கொண்ட ஒரு தேர்தல் ஒழுங்குமுறைக் குழு அமைக்கப்பட்டது. அதில் முக்கியமாக திராவிட முன்னேற்றக் கழகம், கம்யூனிஸ்டு, சுதந்திரா கட்சி, பிரஜா சோஷியலிஸ்ட் கட்சி போன்ற இன்னும் பிற கட்சிகள் எல்லாம் இதிலே இடம் பெற்றிருந்தன. இந்தக் கட்சிகள் எல்லாம் கொண்ட ஒரு குழுவும் அமைக்கப்பட்டது. இதிலே ஒழுங்குமுறைகள் அமைக்கப்பட்ட நேரத்தில், "மற்ற அரசியல் கட்சிகளைப் பற்றி பேசும்போது கட்சித் தலைவர்கள், ஊழியர்களின் தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றி குறிப்பிட்டுக் குறை கூறிப் பேசக் கூடாது" என்று ஒரு ஒழுங்கு நிர்ணயிக்கப்பட்டது. நான் கட்சியிலே உள்ள தொண்டர்களையோ அல்லது வேறு ஒரு சொற்பொழிவாளரின் பேச்சைப் பற்றிகூட குறிப்பிடவில்லை. கனம் மந்திரிகளேகூட அப்படிப்பட்ட முறையிலே பேசினார்கள் என்பதை மிகமிக வருத்தத்தோடு குறிப்பிட விரும்புகிறேன். தஞ்சைத் தொகுதியிலே பேசிய அமைச்சர் ஒருவர் தனிப்பட்ட முறையிலே "சினிமாவுக்குக் கதை எழுதுகிறவர், வசனம் எழுதுகிறவர், சட்டசபைக்குப் போய் என்ன செய்யப் போகிறார்?" என்று திலகர் கட்டத்திலே நடைபெற்ற கூட்டத்திலே பேசினார். அதேபோல் இங்கு இப்போது நிதியமைச்சராக வீற்றிருக்கும் கனம் பக்தவத்சலம் அவர்கள் விருத்தாசலம் தொகுதியிலே "மாநாடு நடத்தி கழகத் தலைவர்கள் பணத்தை பங்கு போட்டுக் கொள்கிறார்கள்" என்று பேசியிருக்கிறார்கள். அதைப் பத்திரிக்கையிலே படித்து, அந்தக் குறிப்பையும் வைத்திருக்கிறேன். இப்படிப் பேசவில்லை என்று கனம் பக்தவத்சலம் அவர்கள் தெரிவிப்பாரேயானால் அப்போதே மறுப்பு தெரிவித்திருக்க வேண்டும் என தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்த ஒழுங்கு முறையாக, கோயில்கள், மசூதிகள், மாதா கோயில்கள் அல்லது வேறு வழிபாட்டு இடங்களைத் தேர்தல் பிரசாரத்திற்காக உபயோகிக்கக் கூடாது என்று 11 கட்சிகள் கொண்ட கூட்டத்தில் ஒழுங்கு முறையாக நிர்ணயம் செய்யப்பட்டது. ஆனால், திருவாரூர் தொகுதியில் காங்கிரசுக்கு ஆதரவு

காட்டா பள்ளிவாசலில் முஸ்லீம்கள் கூட்டத்தில் கனம் கக்கன் அவர்கள் நேர்தல் பிரச்சாரம் செய்திருக்கிறார். முஸ்லிம்கள் காங்கிரசுக்கு ஆதரவு கொடுக்கும்படி கேட்டுக்கொண்டும் இருக்கிறார். இனனும் ஆளும் கட்சி தனது தேர்தல் பிரசாரத்திற்காக தனது அதிகார அந்தஸ்தை பயன்படுத்தியதாக புகார் வராதபடி பார்த்துக்கொள்ளும் என்று ஒழுங்குமுறைக் குழுவில் உறுதி அளிக்கப்பட்டது. நமமுடைய மதிப்பிற்குரிய தொழில் அமைச்சர் திரு. வெங்கட்ராமன தஞ்சை, திருவையாறு, அதிராம் பட்டணம் தொகுதிகளில் தேர்தல் நேரத்தில் இருந்தார். இப்படித் தேர்தல் நேரத்தில் அவர் பிரசாரத்தில் ஈடுபட்டதை நான் குறையாகக் கூறவில்லை. தஞ்சையில் வாக்குச் சாவடிகளுக்கு காங்கிரஸ் வேட்பாளரை அழைததுக் கொண்டு போனது, அவர்களுக்கு ஆதரவு கோரியது ஆகியவைகளை எண்ணிப் பார்க்க வேண்டும்.

0-00 a.m தஞ்சையில் உள்ள வக்கீல் சங்கத்தில், "**Hon. Industries Minister Sri R. Venkataraman desires to address the Bar,**" என்று ஒரு அறிக்கை அனுப்பப்பட்டு, வக்கீல்கள் சங்கத்தில் காங்கிரஸ் கட்சி வேட்பாளருடன் கனம் அமைச்சர் வெங்கடராமன் அவர்கள் சென்று, காங்கிரசுக்கு ஆதரவு திரட்டியிருக்கிறார்கள். இது ஆளும் கட்சியில் இருக்கிற அமைச்சர்கள் தங்கள் அந்தஸ்தையும், பதவியையும் தேர்தலுக்கு பயன்படுத்தும் குற்றத்திற்கு உட்பட்டது என்பதை நான் இந்த நேரத்திலே குறிப்பிட விரும்புகிறேன்.

முன்பு கேரளாவிலே கம்யூனிஸ்ட் கட்சி அமைச்சர் அவை அமைத்த நேரத்திலே, ஒரு இடைத்தேர்தல் நடைபெற்றது. தேவிகுளம், பீர்மேடு தொகுதியில் இடைத்தேர்தல் நடைபெற்ற அந்த நேரத்தில் கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்த அமைச்சர்கள், அந்த இடைத்தேர்தலில் ஈடுபடாமல், அவர்கள் தேர்தல் பிரசாரத்திற்குக்கூட வராமல் இருந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது என்பதை நான் இங்கே நினைவுபடுத்த விரும்புகிறேன்.

இங்கு பேசிய கனம் அங்கத்தினர்கள் இத் தேர்தல் நேரத்தில் ஆபாசமான சுவரொட்டிகளை எதிர்க்கட்சிக்காரர்கள் வெளியிட்டனர் என்பதை எடுத்துச் சொன்னார்கள். பல்வேறு கட்சிகள் கொண்ட தேர்தல் ஒழுங்கு முறைக் குழுவில் அங்கம் பெறாத காரணத்தினால், எவ்வளவு ஆபாசமான சுவரொட்டிகளையும் வெளியிடவும், எவ்வளவு ஆபாசமான தேர்தல் பிரசாரம் புரியவும் தங்களுக்கு உரிமை இருப்பதாகக் கருதிக்கொண்டு, திராவிடக் கழகத்தினர் காங்கிரசுக்கு ஆதரவாக பிரசாரம் செய்கின்ற நேரத்திலே, கேவலமான சுவரொட்டிகளை ஒட்டினார்கள். அதைப் பற்றி சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள்? ஆபாசமான சுவரொட்டிகளில் தேர்தலில் ஈடுபட்ட கழக வேட்பாளர்களின், தலைவர்களின் குடும்பத்தினர் இழுக்கப்பட்டிருக்கிறார்கள், இழிவுபடுத்தப்பட்டிருக்கிறார்கள். எங்களுடைய வீட்டுப் பெண்டிர்கள் பற்றி மிகமிகக் கேவலமாக பிரச்சாரம் செய்யப்பட்டிருக்கிறது. எங்களுடைய தாய்மார்கள், எங்களைப் பெற்றவர்

கள்—நம்முடைய தாய்மார்கள், நம்மைப் பெற்றவர்கள் என்றே கூறுகிறேன்—நம்மைப் பெற்றெடுத்தது இப்படிப்பட்ட இழி சொற்களையும் பழி சொற்களையும் அவர்கள் நம் மூலம் பெறுவதற்கு இல்லை. நம்மை இப்படிப்பட்ட பொதுப் பணியில் அவர்கள் விடுத்திருப்பது அவர்கள் செய்த மாபெரும் குற்றம் என்று கருதிக்கொண்டு காங்கிரசுக்கு ஆதாரவாக தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்ட திராவிடக் கழகத்தினர் இந்த மாமன்றத்தில் உச்சரிக்கத் தகாத வார்த்தைகளை தேர்தல் நேரத்தில் உச்சரித்திருக்கிறார்கள். மோசமான சுவரொட்டிகளை ஊர்வலத்தில் எடுத்துச் சென்றிருக்கிறார்கள். அப்படிப்பட்ட கேவலமான விளம்பரங்களையெல்லாம் பத்திரிகைகளிலும் பிரசுரித்திருக்கிறார்கள் என்பதை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

தேர்தல் காலத்தில் நடைபெற்ற கலவரங்களில், அதிகாரிகள் நடுநிலையாக நடந்துகொண்டார்களா என்றால், இல்லை என்பதற்கு பல உதாரணங்கள் காட்ட முடியும்.

25—12—1961 நாளன்று பூவிருந்தவல்லி கரையான் சாவடியில் சென்னைத் தோழர்கள் காஞ்சீபுரத்திலிருந்து சைக்கிள்களில் ஊர்வலமாகத் திரும்பியபோது, அந்த நேரத்தில் வழியில் அடிக்கப்பட்டு, மறிக்கப்பட்டு, தாக்கப்பட்டிருக்கிறார்கள். போலீசாரிடம் அதைப்பற்றி எடுத்துச் சொல்லியும், கவனிக்கப்படவில்லை.

26—12—1961 அன்று மண்ணூர் தி.மு.க. தோழர் ஏ. பழனி தாக்கப்பட்டார். அவர் நட்டிருந்த கொடிக்கம்பம் வெட்டப்பட்டது. சம்பவ நேரத்தில் திருபெரும்புதூர் போலீஸ் நிலையத்தினர் தாக்குதலுக்கு உடந்தையாக இருந்து அந்த நல்ல காரியத்தில் ஈடுபட்டார்கள் என்று சொல்லப்படுகிறது.

26—12—1961 அன்று திருநின்ற ஊரில் தி.மு.க. தோழர்கள் ஜெயராமன், ராதா ஆகிய இருவரும் பூவிருந்தவல்லி வட்டாரத் தலைவரால் பழிசொல் கூறி விரட்டி அடிக்கப்பட்டனர்.

31—12—1961 காலை வடசென்னையில் துவக்கப்பட்ட காங்கிரஸ் பிரசார ஊர்வலத்தினர், தண்டையார்பேட்டையிலிருந்து மைலாப்பூர் வரையில் செல்லும் 5083 எண் உள்ள 4-ம் நெம்பர் பஸ் டிரைவர் வரதனையும், கண்டக்டர் ராமனுஜனையும் அடித்து துன்புறுத்தியிருக்கிறார்கள். இருந்தாலும், போலீசார் அதுபற்றி நடவடிக்கை எடுக்கவில்லை.

மாதவரம் பகுதியில் திருமங்கலம் கிராமம் தி. மு. கழகத்தில் காங்கிரசார் புகுந்து கலவரம் விளைவித்தார்கள். அன்று இரவே வில்லிவாக்கம் போலீஸ் நிலையத்தில் புகார் செய்யப்பட்டும், கவனிக்கப்படவில்லை.

1—1—1962-ம் நாளன்று பெரிய காஞ்சீபுரம் ரெட்டை மண்டபத்துக்கு அருகில் தி.மு.க. தோழர் ஆர். தனபால் அவர்களின் தேநீர் கடையை மறைக்கும் அளவுக்கு காங்கிரஸ் தேர்தல் பிரசார

விளம்பர தட்டிகள் வைக்கப்பட்டன. போலீசுக்கு புகார் செய்யப் பட்டும், கேட்பார் அற்றுப் போயிற்று. தனபால் கடைக்கு தீ வைக்கப்பட்டது.

30—1—1962-ம் நாளன்று கனம் கே. ஏ. மதியழகன் அவர்களை தேர்தல் அலுவலக வாயிலில் குத்திக் கொலை செய்வதற்கு முயற்சி செய்யப்பட்டது. அதுபற்றி போலீசாருக்கு எடுத்துச் சொல்லப் பட்டும், அது அலட்சியம் செய்யப்பட்டு மிக சாதாரணமாக விடப் பட்டது.

9—2—1962 அன்று சோளிங்கர் தொகுதியில் பி. ஜி. சுந்தரம் என்ற தி.மு.க. தோழரைத் தாக்கியதோடு, க்ஷவர பிளேடால் வயிற்றையும் அறுத்தார்கள். போலீஸில் புகார் செய்யப்பட்டும் கவனிக்கப்படவில்லை.

10—2—1962 அன்று உத்திரமேரூர் தொகுதியில் கழக ஆதரவாளருக்காக வேலை செய்த மருத்துவான்பாடி ஊராட்சிமன்றத் துணைத்தலைவர் குப்புசாமி என்னும் ஐம்பது வயதுப் பெரியவர், கிணற்றில் தள்ளப்பட்டு மிதக்கவிடப்பட்டார்.

11—2—1962 என்று அரக்கோணம் தொகுதி சம்பத்ராயன் பேட்டையில் கழக ஊர்வலம் சென்றபோது வட்டக் காங்கிரஸ் தலைவர் தலைமையில் கலகம் விளைவித்தனர், தாக்கினார்கள். கழக வேட்பாளர் போலீஸ் அதிகாரியிடம் புகார் செய்தபோது அதிகாரிகள் கழகத் தோழர்களை, இழிமொழி கூறி விரட்டினார்கள்.

16—2—1962 அன்று தஞ்சைத் தொகுதியில் தி.மு. க.வுக்கு வேலை செய்த 10 பேர்கள் நல்லுச்சேரியில் இரவு 2 மணிக்கு கைது செய்யப்பட்டார்கள். காலையிலே அவர்கள் ஜாமீனில் விடப்பட வேண்டும் என்று வக்கில் டி.எஸ்.பி.யிடம் கேட்டபொழுது, தடுப்புக் காவல் சட்டப்படி அவர்கள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள் என்றும், விடுதலை செய்ய முடியாது என்றும் கூறப் பட்டது. 17-ம் தேதி தேர்தல் நேரத்தில், மாலை 4½ மணிக்கு விடுவிக்கப்பட்டார்கள்.

இப்படிப்பட்ட நிலைமையிலே தான் பொதுத் தேர்தலில் அதிகாரங்கள் துர்வினியோகிக்கப்பட்டும், அதிகாரிகளில் பலர் நடுநிலையாளர்களாக இல்லாமல் நடந்துகொண்டும், அதற்கெல் லாம் தப்பி இன்று நாங்கள் எதிர்க்கட்சியினராக இந்த மன்றத்தில் அமர்ந்துகொண்டிருக்கிறோம். அப்படி அமர்ந்திருக்கிற நாங்கள் எங்களுக்குள்ள வாய்ப்பினை பயன்படுத்திக்கொண்டு, கவர்னர் பெருமான் உரையிலே சொல்லாமல் விடப்பட்டிருக்கிற இனங்களை எடுத்துக்காட்ட கடமைப்பட்டிருக்கிறோம்.

மின்சார அபிவிருத்தி வேலைகளைப்பற்றி கவர்னர் குறிப்பிட்டிருப்பதை ஒட்டி பேசுகின்ற நேரத்தில், எனக்கு முன் பேசிய கனம் உறுப்பினர் திரு மாதா கவுடர் அவர்கள் நம் மாநிலம்தான்

24th April 1962] [Sri M. Karunanithi]

இந்திய துணைக்கண்டத்திலேயே மின்சார அபிவிருத்தியில் மிகச் சிறந்தது, தலையாயது என்றெல்லாம் பெருமையோடு கூறினார்கள். நான் அதுபற்றி மகிழ்ச்சி அடைகிறேன். நமக்கு இருக்கிற அந்த ஒரே ஒரு பெருமையாவது ஒழுங்காக இருக்கவேண்டாமா? அதை நாம் இன்னும் நல்ல முறையில் பயன்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். 1,500 கிராமங்களுக்கு ஆண்டு தோறும் மின்சாரம் விஸ்தரிக்கப்படுகிறது என்பது போதாது. இன்னும் எண்ணிறந்த கிராமங்கள் இருட்டிலே அடைபட்டு திண்டாடிக்கொண்டிருக்கின்றன. சுடலைக்குச் செல்லுகிற வழியிலே பிணத்தைக் தூக்கிக்கொண்டு அவர்கள் வயல் வரப்பிலே இருட்டிலே நடந்துசெல்லும்பொழுது, பாதையில் தடுக்கி விட்டுப் பிணத்தையும் கீழே போட்டுக்கொண்டு விழக்கூடிய பரிதாபகரமான காட்சியை இன்னமும் நம் நாட்டிலுள்ள பல கிராமங்களில் பார்க்கிறோம். மின்சார வசதி அதிகமான கிராமங்களுக்கு விஸ்தரிக்கப்படுகிறது என்று பெருமை அடைகிற அதே நேரத்தில், இருளடைந்த கிராமங்கள் இன்னும் அதிகம் இருக்கின்றன என்பதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

வேலூர், ஆரணி, திருவண்ணாமலை, வந்தவாசி, திண்டிவனம், செஞ்சி, திருப்பத்தூர், குடியாத்தம் போன்ற இடங்களில் பல ஆண்டுகள் தொடர்ந்து மின்சார போர்டில் வேலை பார்க்கும் என். எம். ஆர். தொழிலாளர்கள், தினக் கூலி தொழிலாளர்கள் வேலை குறைவு என்று காரணம் காட்டப்பட்டு ஏறத்தாழ 500-க்கு மேற்பட்டவர்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டிருக்கிறார்கள். நான் இந்த நேரத்தில் மின்சார இலாகாவை வகிக்கின்ற அமைச்சர் அவர்களை மிகப் பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன். வேலையிலிருந்து நீக்கப்பட்டிருக்கிற அந்த 500 தொழிலாளர்களுக்கும் நல்வாழ்வு அளிப்பதற்கு நீங்கள் முனைந்து முயலவேண்டும். ஏனென்றால், மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் வேலைக்குறைவு என்று காரணம் காட்டப்படுவது அவ்வளவு பொருத்தம் இல்லை. காரணம், இந்த திட்டத்தில் மின்சாரம் மேலும் மேலும் தீவிரமாகவும், வேகமாகவும், அதிகமான இடங்களுக்கு விஸ்தரிக்கவும் படுகிறது. மின்சார வசதிகள் பெருக்கப்படுகிறது என்று சொல்லப்படுகிற காரணத்தினால், நான் இங்கு இதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். வேலைக் குறைவு என்ற காரணம் காட்ட முடியாது என்ற நிலைமையினால், இந்தத் தொழிலாளர்களுக்கு நல்வாழ்வு அளிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

கவர்னர் பெருமான் உரையிலே புதிய காகித தொழிற்சாலை, பெரிய கலப்பு உருக்குத் தொழிற்சாலை, ரசாயன உரத் தொழிற்சாலை, புதிய மூன்று சர்க்கரை ஆலைகள் இவைகள் எல்லாம் தனியார் துறையில் அமைய இருக்கின்றன என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. தனியார் துறை, பொதுத் துறை இரண்டும் இருப்பது தான் நடைமுறை சமதர்மம் என்று நம்முடைய சர்க்கார் கருதிக்கொண்டிருக்கிறது. சமதர்மத்திற்கு இது முற்றிலும் முரண்பாடான கருத்தாக இருக்கிறது. தனியார் துறை, பொதுத் துறை இப்படி இரண்டும் இருப்பதானது, நாம்

[Sri M. Karunanithi] [24th April 1962

அனுஷ்டிக்கின்ற நடைமுறை சமதர்மம் என்று கூறிக்கொள்வது முரண்பாடான கருத்து. இப்படிப்பட்ட தொழில்கள் தேசியமய மாக்கப்படவேண்டும். அதைப்பற்றி கவர்னர் பெருமான் உரை யில் தெளிவு இல்லை, விளக்கம் இல்லை, கொள்கை கோடிட்டுக் காட்டப்படவில்லை.

அதேபோல, பஸ் போக்குவரத்து தொழில் தேசியமயமாக்கப் பட வேண்டும் என்கின்ற கொள்கை கவர்னர் உரையிலே இல்லை என்பதற்காக நான் வருத்தத்தை தெரிவித்துக்கொள்ளுகிறேன். '120 மைல்களுக்கு மேற்பட்ட தூரத்திலுள்ள பஸ் போக்குவரத்து களையெல்லாம் நாங்கள் தேசியமயமாக்கப்போகிறோம்' என்கின்ற ஒரு செய்தியை அமைச்சர் அவர்கள் இன்று காலையிலே கேள்வி நேரத்திலே அறிவித்திருந்தாலும், அப்படி தனிப் பிரிவு இல்லாமல் கூடுமானவரையிலே எல்லா பஸ் போக்குவரத்துகளையும் தேசிய மயமாக்குகிற முயற்சிகளிலே இந்த சர்க்கார் உடனடியாக ஈடுபட வேண்டும். உண்மையிலேயே, ஒரு பஸ் ரூட்டை ஒருவர் வாங்கினால், அடுத்த ஆண்டு, அதற்கடுத்த ஆண்டு, அவர் ஒரு பஸ் முதலாளியாகக் காட்சி தருகிறார். முதலாளி மட்டுமல்ல, அவர் ஆளும் கட்சியை மிரட்டும் அளவுக்கு வலிமை படைத்தவராக ஆகிவிடுகிறார். ஒரு பஸ் ரூட் வாங்கினால் போதும்: ஒரு நாளைக்கு ரூ. 100 லாபம் என்றால், அந்த லாபம் மாதத்தில் ரூ. 3,000 ஆகி, அதுவே வருஷத்தில் ரூ. 36,000 என்றும், இரண்டாண்டில் ரூ. 72,000 ஆகிவிடும் நிலை ஏற்பட்டு, அந்த ரூட்டை மாத்திரம் வைத்துக்கொண்டு அதையே அடமானம் வைத்து பொருள் திரட்டி பஸ் வாங்கி, தவணைகளில் கடனை அடைத்து விடும் பெரும் முதலாளியாகச் சுலபமாக ஆகிறார். இப்படி உழைக்காமல் பொருள் திரட்டும் வழியாக இருக்கிறது, தனியார் வேட்டைக்காடாக இருக்கிறது.

இது அடக்கப்பட்டு, பஸ் தொழில் தேசியமயமக்கப்பட வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். கவர்னர் உரையில் ஒன்று குறிப்பாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். தாம்பரம்-விழுப்புரம் மின்சாரப் பாதை வேலைகள் நல்ல முறை யிலே நடைபெறுவதாக கவர்னர் உரையில் குறிப்பிடப்பட்டிருக் கிறது. இருப்பினும், ஏப்ரல் 19-ம் தேதி பத்திரிகையில் வந்திருக் கும் செய்தி, தாம்பரம்-விழுப்புரம் மார்க்கத்தில் மின்சார மயமாக் கும் திட்டத்திற்கு அரசாங்கம் முன்னமேயே இணக்கம் தெரிவித் திருந்தும், அது அமுலாக்கப் படுவதற்கான எவ்விதத் திட்டமும் கிடையாது. அந்தத் திட்டம் நான்காவது திட்ட காலத்திற்குத் தள்ளப்பட்டு விட்டது, என்று, செய்தி வந்திருக்கிறது. இது பற்றிய விளக்கத்தை கனம் நிதி அமைச்சர் தமது பதிலில் தெரிவிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

ரூ. 291 கோடியளவில் வகுத்துள்ள நமது திட்டத்தில் மத்திய உதவியின் அளவு ரூ. 190 கோடி என்று வரையறுக்கப்பட்டுள்ளது. எனவே, புதிதாக நிதி வசதிகளை நாம் எந்த அளவுக்குப் பெருக்கிக்கொள்ள முடிகிறதோ அதைப் பொறுத்துத்தான் திட்ட

24th April 1962] [Sri M. Karunanithi]

வேலைகளை விரிவாக்கிக் கொள்ளமுடியும் என்று கவர்னர் குறிப்பிட்டிருக்கிறார். மிச்சம் இருக்கும் உபரித் தொகையை மாநில சர்க்கார் எந்த வகையில் ஈடு செய்யப் போகிறது ? ஏற்கனவே மத்திய அரசு வரி 72 கோடி ரூபாய் நம் தலையில் விழுந்திருக்கிறது. அதைப் பார்க்கும் போது இன்னும் நாம் நிதி திரட்ட வேண்டுமென்பதைப் பார்த்தால், மெத்த பயமாக இருக்கிறது. வரி போடாமல் அரசாங்கத்தை எப்படி நடத்த முடியும் என்கிறார்கள். வரி போடுவதைக் குறைத்துக் கூறவோ மறுப்புச் சொல்லவோ இல்லை நாங்கள். ஆனால் போடும் வரி ஏழைகளை, பாட்டாளிகளை, அன்றாடம் காய்ச்சிகளை, அரைவயிற்றுக் கஞ்சிக்கு இல்லாதவர்களை பாதிக்கும் வரிகளாக அமைந்து அவர்கள் மேலும் மேலும் அல்லல் படும், அவதிப்படும் வகையான வரிகளாக நிதியமைச்சர் வரவு-செலவுத் திட்டத்திலே இடம் பெறவேண்டாம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

விலைவாசிகள் ஏற்றத்தைத் தடுப்பது பற்றி கவர்னர் உரையில் ஒரு வரியும் இல்லை. விலைவாசிகளின் ஏற்றத்தைக் கட்டுப்படுத்தப் போகிறார்களா, எப்பொழுது, எப்படி? விலைகள் கட்டுப்படுத்தப் படவேண்டும், அவை இறங்க வேண்டும் என்று திராவிட முன்னேற்றக் கழகம் தேர்தல் நேரத்தில் பிரசாரமாகக் கொண்டது. அதை மறுக்கவில்லை. நாங்கள் வந்தால், மூன்று படி அரிசி போடுவோம் என்று சொன்னதை, முதல் அமைச்சர் மட்டுமல்லாமல், மன்றத்தில் மற்ற ஆளும் கட்சி அங்கத்தினர்களும் "ஏன் மூன்று படி அரிசி போடவில்லை" என்று கேட்பது பொறுத்தமற்றது. நாங்கள் 50 பேர்கள் இருக்கிறோம். நாங்கள் 50 பேர்கள் வந்தால் அப்படிச் செய்வோம் என்று அறிக்கை விடவில்லை ; எந்தக் கட்சியும் அப்படி அறிக்கை விடாது. எந்தக் கட்சியும் நிர்வாகத்தை ஏற்கும் நேரத்தில், நாங்கள் இதைச் செய்வோம், அதைச் செய்வோம் என்றுதான் தேர்தல் அறிக்கை விடுவார்கள். இன்றைக்கு நாங்கள் எதிர்க்கட்சியாக அமர்ந்திருக்கிறோம். ஆளும் கட்சியாக அமரவில்லை. எனவே எங்களைப் பார்த்து மூன்று படி அரிசி போடவில்லை என்று சொல்வது சரியாகாது. ஆளும் கட்சியாக உள்ளவர்கள் செய்ய வேண்டும். இல்லாவிட்டால், அமைச்சர் அம்மையார் ஒரு கூட்டத்தில் சொன்னபடி ஒன்றரைப் படி அரிசியாவது போடுங்கள் என்றுதான் ஆளும் கட்சிக்காரர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். விலைவாசிகள் குறையவேண்டும் என்றால், கட்டுப்படுத்தப்பட வேண்டு மென்றால், பாங்கிகள் தேசியமயமாக்கப்பட வேண்டும். பத்து ஏக்கருக்கு மேல் வைத்திருக்கும் எல்லா நிலச் சொந்தக்காரர்களிடமும் அவர்கள் சாப்பாட்டுக்குத் தேவையானது போக மீதி உள்ள உபரி உணவு தானியங்களை சர்க்காரே நியாயவிலைக்குக் கொள்முதல் செய்து, ஏழைகளால் வாங்க முடிந்த அளவுக்கு விலைவாசிகளைக் குறைக்க வேண்டும். இடைத்தரகர்கள் அகற்றப்பட வேண்டும், அந்த முயற்சியிலே அமைச்சர்கள் ஈடுபடவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கடைசியாக, இந்த கவர்னர் உரையிலே விலைகள் விஷம் போல் ஏறவும், பொதுமக்கள் அகவிலையால் அல்லற்படவும், வேலையில்லாத் திண்டாட்டம் பெருகவும், வேதனை, தற்கொலை அதிகமாகவும்,

இயற்கை வளங்கள் பாழ்படவும், இல்லாமை மக்களைத் தாக்கவும், தாய்மொழியின் எதிர்காலம் பாழ்படவும், இந்தி மொழியின் ஆதிக்கம் ஏற்படவும், மாநில அரசு தலையாட்டியாகவும், இந்திய அரசு ஆட்டிப்படைக்கவும், தொழில்கள் தனிப்பட்டோர் லாப வேட்டைக்காடாகவும், தொழிலாளர் உழைத்து உருக்குலைவோராகவும், நெசவாளர், விவசாயிகள் வாழ்வு நைந்து போகவும், வரிச்சுமை அதிகமாகவும், ஏழைகள் வரியால் தாக்கப்படவுமான பயங்கரங்களுக்குப் பரிகாரம் காணப்படவில்லை. ஆகவே இந்த உரை பிணி நீக்காத மருந்து என்று கூறி முடிக்கிறேன.

*SRI A. P. C. VEERABAHU : கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் ஆற்றிய உரைக்கு வணக்கம் தெரிவிக்கும் தீர்மானத்தை ஆதரித்து சில விஷயங்களைச் சபைமுன் சமர்ப்பிக்க விரும்புகிறேன். கவர்னர் பெருமான் ஆற்றும் உரைக்கு வாராமல், ஐந்து வருடங்களாக வராமல் இருந்து, திராவிட முன்னேற்றக் கழகத்தினர் இந்த வருஷமும் பகிஷ்கரித்திருக்கிறார்கள். அவர் வடவர் என்றும், கவர்னர் பதவி அனாவசியமான ஏற்பாடு என்றும், அவர் நியமிக்கப் பட்டவர் என்றும், அம்மாதிரிப் பல ஆட்சேபணைகளைக் கிளப்பியிருக்கிறார்கள். அவர்களுடைய ஆட்சேபணைக்குப் பதில் தருவதால் அவர்கள் நல்லமுறையில் திருந்தி வருவார்கள் என்ற நம்பிக்கை இருப்பதால், அந்த ஆட்சேபணைகளுக்குப் பதில் கூற விரும்புகிறேன். மூன்று தேர்தல்கள் நடந்தும் காங்கிரஸே தொடர்ந்து ஆட்சியில் இருப்பதால், அதன் பேரில் கவர்னர் அனாவசியம் என்று சொல்கிறார்கள் என்றால், அரசியல் கட்சிகள் ரீதியில் ஏற்படும் போது, ஆளும் கட்சியும், எதிர்க்கட்சியும் சமநிலை அடையும் சூழ்நிலை ஏற்படும் என்பதை அவர்களே எண்ணிப் பார்க்க வேண்டும். இப்பொழுதேபோல் எப்பொழுதுமே காங்கிரஸ் காரர்களே அரசாங்கத்தை நடத்தவேண்டும் என்ற நம்பிக் கையில் அவர்கள் சொல்வதாக இருந்தால் அவர்கள் கவர்னர் அனாவசியம் என்று சொல்வதைப் பற்றி நமக்கு ஆட்சேபணையில்லை. நியமன முறையில் குற்றம் காண்பது சரியாகாது. நியமனம் என்பது ஜனநாயகத்திற்கு விரோதம் என்று நினைக்கிறார்கள் போலும். இந்த சட்ட சபையிலே, இன்றைய நடவடிக்கையிலே கனம் சபாநாயகர் அவர்கள் எத்தனையோ கமிட்டிகளை நியமித்திருக்கிறார்கள். ஜனநாயகத்தில் இருக்கும் நியமன முறையை ஏற்றுக்கொள்ள முடியாது என்பதால், அரசியல் சட்டத்தில் நம்பிக்கை வைத்து, விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொண்டது சரியாக இருக்காது. எல்லோரும் தொடர்ந்து தமிழ்நாட்டுக்கு உழைக்க வேண்டும். அவர்கள் பேசும் கண்ணியம், கடமை என்பதற்கு இது விரோதமானது.

பொதுத் தேர்தலைப் பற்றிப் பேசும் போது, அதிகாரிகள், அதிலும் முக்கியமாக போலீஸ் அதிகாரிகள் சரிவர நடவடிக்கை எடுக்கவில்லை என்று நீண்டதொரு பட்டியலைக் கொடுத்தார்கள், எனக்கு முன்னால் பேசிய எதிர்க்கட்சி அங்கத்தினர். கலவரம்

24th April 1962] [Sri A. P. C. Veerabahu]

நடந்து, நடவடிக்கை எடுக்க வில்லை யென்றும் குறிப்பிட்டார்கள். எங்கள் பகுதியில் எந்த விதமான கலவரமும் நடக்கவில்லை. எங்கள் ஜில்லாவிலே எல்லா காங்கிரஸ்காரர்களும் வெற்றிபெற்றிருக்கிறார்கள். ஆகவே பொதுத் தேர்தல் எங்கள் ஜில்லாவில் சுமுகமாகவே நடந்திருக்கிறது. ஆகவே, கலவரங்களைப் பற்றி போலீஸ்காரர்கள் நடவடிக்கை எடுக்கவில்லை என்று சொல்வது சரியாகாது. அம்மாதிரி தவறுகள் இருந்தால் அதற்கு வேறு காரணங்கள் இருக்கவேண்டும். அது அவர்கள் குற்றம் ஆகாது.

நமது கவர்னர் பெருமான் ஆற்றிய உரையில் மூன்றாவது திட்டத்தில் நமக்கு வேண்டிய நிதி வசதி பற்றி குறிப்பிட்டிருக்கிறார்கள், ஃபிஸ்கல் கமிஷன் அறிக்கைப் படி நமக்கு 2½ கோடி ரூபாய் வருகிறது, அது வருவாய் இனம் என்று காட்டியுள்ளார்கள். பட்ஜட் அறிக்கையில் விரிவாக புதிய வரிகள் பற்றியும், மற்ற திட்டங்கள் பற்றியும் கனம் நிதி அமைச்சர் சொல்லுவார்கள் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். பினான்ஸ் கமிஷன் முன்னாள் சேர்மன் ஸ்ரீ சந்தானம் அவர்கள் ப்ரஸ்ஸில் ஒரு ஆர்ட்டிகள் எழுதியிருந்தார்கள், தமிழ்நாட்டுக்கு தொகையைப் பகிர்ந்து அளிப்பதில் ஒரு புதிய விகிதாசாரத்தில் வேண்டும் என்று. நம் பங்கு குறைவாகயிருக்கிறது. ஆகவே, பகிர்க்கும் முறையில் இன்னும் கொஞ்சம் ஆட்சேபணையைத் தெரிவித்து வற்புறுத்தினால் நமக்கு அதிகமான வருவாய் வர வாய்ப்பு இருக்கிறதா என்று கனம் புதிய நிதி அமைச்சர் பரிசீலனை செய்வார்கள் என்று நம்புகிறேன். அதோடு கூட இன்கம்டாக்ஸ், கார்ப்பரேஷன் டாக்ஸ் இருக்கின்றன. இப்பொழுது புதிய ரிவிஷனைப் பார்க்கும்போது கார்ப்பரேஷன் வரியில் அதிகப்படியான விகிதாச்சாரம் ஏற்படுத்தப்பட்டு இருக்கிறது. அதைப்போலவே இன்கம்டாக்ஸ் இருக்கிறது. இவைகளின் மூலமாக மத்திய அரசாங்கத்திற்கு அதிகமாக மாகாணத்திலிருந்து கிடைத்து வருகிறது. அது எந்த இனமாக இருந்தாலும் சரி, கார்ப்பரேஷன் வரியாயிருந்தாலும் நமக்குக் கிடைக்க வேண்டியதை நமக்குக் கொடுக்கும்படியாக இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்திடம் வற்புறுத்திக் கேட்டுக் கொள்ள வேண்டும் என்பதை இந்தச் சந்தர்பத்தில் குறிப்பிட விரும்புகிறேன்.

இப்பொழுது பஞ்சாயத்துக்களின் மூலமாக பல திட்டங்களை நிறைவேற்றுவது என்று முடிவு செய்திருக்கிறோம். பல்வேறு திட்டங்களை நிறைவேற்றுவது என்று அதன் மூலமாக ஏற்பாடு செய்திருக்கிறோம். அதற்கு வேண்டிய அதிகாரத்தையும் நாம் அவர்களுக்குக் கொடுத்திருக்கிறோம். இப்பொழுதுள்ள அனுபவத்தை பார்த்த பிறகு கிராமங்களுக்கு குடிதண்ணீர் வசதி, மின்சார வசதி எல்லாம் செய்து கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. மற்றும் போக்குவரத்து வசதிகூட செய்து கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. அதற்கு வேண்டிய ஏற்பாட்டையும் மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் செய்து கொடுப்பதாகவும் நாம் ஏற்பாடு செய்து வாக்குறுதி கொடுத்திருக்கிறோம். அந்த

[Sri A. P. C. Veerabahu] [24th April 1962

நிலைமையைப் பார்க்கும்போதும் அங்குள்ள நிதி வசதியையும் பார்க்கும்போது அவைகளை நிறைவேற்றி வைக்க முடியுமா என்ற சந்தேகமும் ஏற்படுகிறது. அவர்களுக்கு நாம் இப்பொழுது கொடுத்து வருகிற நிதி வசதியை வைத்துக்கொண்டு போக்கு வரத்து வசதி, குடி தண்ணீர் வசதி முதலிய வசதிகளைச் செய்து கொடுக்க முடியுமா என்று யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. அது தடைபடுமோ என்று கூடத் தோன்றுகிறது. இப்பொழு துள்ள நிதி வசதியை வைத்துக்கொண்டு அவர்கள் அடையக்கூடிய இலக்குகளை அவர்களால் அடைய முடியுமா என்று கூட யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. கிராமங்களிலுள்ள பண்டங்களை வெளியே கொண்டு போவதற்கு வேண்டிய போக்குவரத்து வசதி முதலிய வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. ஆகவே கிராமப் பகுதிகளில் அதிகப்படியான போக்குவரத்து வசதி, கூட்ஸ் வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டியதாக இருக் கிறது. இப்பொழுது கிராமங்களில் ரயில் வசதி கிடையாது. கிராமங்களிலுள்ள பண்டங்களை வெளியே கொண்டு போய் பரிமாறிக்கொள்ள வசதியை நாம் அவர்களுக்குச் செய்து கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. எந்த அளவுக்கு நாம் அவர்களுக்கு வசதி செய்து கொடுக்கிறோமோ அந்த அளவுக்கு அவர்களுக்கு நிதி வசதி வளரக்கூடியதாக இருக்கிறது. இப்பொழுது திட்டப் படி அவர்களுக்கு நிதி வசதி வளருவதற்கு என்று நிலத் தீர்வை யில் பாதியை அவர்களுக்குக் கொடுப்பது என்று முடிவு செய்திருக் கிறோம். இந்தப் புதிய ஏற்பாட்டின்படி அவர்களுக்கு நிலத் தீர்வையில் ஒரு பகுதியைக் கொடுத்து வருகிறோம். அதை வைத்துக்கொண்டு அவர்கள் தங்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வது என்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த நிலைமையில் கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கு ஒரு யோசனை யைத் தெரிவிக்க விரும்புகிறேன். இப்பொழுது கொடுக்கக்கூடிய 50 சத விகிதத்தை 75 சத விகிதம் என அதிகப்படுத்தலாம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற வசதிகளைச் செய்து கொள்ள வேண்டும் என்று சொல்லி விட்டு அதனால் ஏற்படக்கூடிய பளுவை அவர்களால் தாங்க முடியுமா என்பதையும் இந்தச் சந்தர்ப்பத்தில் யோசித்துப் பார்க்க வேண்டும். இத்துடன் அவர்களுக்கு நாம் குடி தண்ணீர் வசதி மின்சார வசதியெல்லாம் கூட செய்து கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. அந்த இலக்கு அவர்களுக்கு ஏற்படப்போகிற பளுவை அவர்களால் தாங்க முடியுமா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டியதாக இருக்கிறது. ஆனால் இந்த ஐந்து வருஷ அனுபவத்தை எடுத்துப் பார்த்தால் அங்கு எந்த விதமான விஸ்தரிப்பும் ஏற்படவில்லை. இப்பொழுது நாம் அதிக மாக உணவு உற்பத்தி செய்ய வேண்டும் என்று சொல்லிக்கொண்டு வருகிறோம். அந்த அளவில் வருகிற ஆண்டில் 16 லட்சம் டன் அதிகமாக உணவு தானியத்தை நாம் எதிர்பார்க்கிறோம். இதைப் பார்க்கும்போது அவர்களுக்கு நாம் அதிகப்படியான போக்கு வரத்து வசதி செய்து கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. கிராமங்களில் விளையக்கூடியவைகள் எல்லாம் நகரங்களுக்கு வர வேண்டியதாக இருக்கிறது. அதற்கு போக்குவரத்து வசதி

24th April 1962] [Sri A. P. C. Veerabahu]

அதிகம் தேவையாக இருக்கிறது. விவசாய அபிவிருத்தி மூலமாக அவர்கள் 16 லட்சம் டன் அதிகமாக உணவு உற்பத்தி செய்து கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. அந்த இலக்கு அவர்களுக்கு வைக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது ஏற்கனவே கொடுத்து வருகிற தீர்வையை விட நிலச் சொந்தக்காரர்கள் இன்னும் அதிகமாக தண்டத் தீர்வை வேறு கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. அதிலும் திருநெல்வேலி ஜில்லாவை எடுத்துக்கொண்டால் அங்குள்ள நிலைமை வேறு விதமாக இருக்கிறது. தண்டத் தீர்வையை தாற்காலிகமாக இரண்டு மடங்கு போடலாம் என்று உத்தரவிட்டிருக்கிறார்கள். இப்படி உத்தரவு போடும்போது அவர்கள் நிலத்தின் தரத்தை எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. தண்ணீர் எடுத்துக்கொண்டு விட்டால் இரண்டு மடங்கு தண்டத் தீர்வை என்று மட்டும் சொல்லி விட்டார்கள். நிலங்களில் ஒன்று மற்றொன்றைப்போல் தரத்தில் இருக்காது. அதனால் தண்ணீர் எடுத்துக்கொண்டதற்காக இரண்டு மடங்கு என்று சொல்லி விட்டால் அதனால் பலர் பாதிக்கப்படுகிறார்கள். அதனால் அவர்கள் விவசாயம் செய்வதில் ஊக்கம் குறைந்து போய் விடுகிறது. இந்த முறையில் ஏக்கர் ஒன்றுக்கு கிட்டத்தட்ட 50 அல்லது 55 ரூபாய் அளவில் தீர்வையை உயர்த்தி இருக்கிறார்கள். தண்ணீரை உபயோகப்படுத்துகிறார்கள் என்பதற்கு மாத்திரம் இப்படி தண்டத் தீர்வை போடுவது என்பது சரியல்ல. நிலத்தினுடைய தரத்தையும் கவனிக்க வேண்டியதாக இருக்கிறது. இப்படி தரத்தை கவனிக்காமல் வரி போடுவதால் விவசாயிகளுக்கு விவசாயம் செய்வதில் ஊக்கம் குன்றிவிடுகிறது. அதனால் உற்பத்தி பாதிக்கப்படலாம். ஆகவே, தண்டத் தீர்வை விதிக்கும் போது நிலத்தின் தரத்தையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே ஒரு பக்கம் அதிகப்படியாக உற்பத்தி செய்ய வேண்டும் என்று சொல்லி விட்டு மற்றொரு பக்கத்தில் அவர்களுக்கு ஊக்கம் குன்றும் அளவில் தீர்வை போடக்கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதைப் பற்றி பரிசீலனை செய்யப்படும் என்று சொன்னார்கள். இது வரையிலும் எந்த விதத்திலும் பரிசீலனை செய்ததாகத் தெரியவில்லை. பரிசீலனை செய்ய வேண்டிய ஒரு பெரிய பிரச்னை இது. விவசாயத்திற்கு அதிகப்படியாக ஊக்கம் காட்ட வேண்டும், அதிகப்படியாக உணவு உற்பத்தி செய்ய வேண்டும் என்று சொல்லும்போது இதைப்பற்றி பரிசீலனை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

தொழில்துறையில் நமது மாகாணம் எவ்வளவோ முன்னேற்றமடைந்திருக்கிறது. மற்ற மாகாணங்களைக் காட்டிலும் அதிகமாகவே முன்னேற்றமடைந்திருக்கிறது என்று கூடச் சொல்லலாம். மற்ற மாகாணங்கள் இந்த மாகாணத்தில் ஏற்பட்டிருக்கக்கூடிய தொழில் முன்னேற்றத்தைப் பார்த்து விட்டு இந்த மாகாணத்திற்குள்ள புதிய வசதிகளைக் குறைக்க வேண்டும் என்று வாதாடக் கூடிய அளவில் இங்கு முன்னேற்றம் அடைந்திருக்கிறது. மற்ற மாகாணங்கள் இந்த மாகாணத்திற்கு இன்னும் அதிகப்படியாகக் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை என்று

சொல்லக்கூடிய அளவில் இங்கு முன்னேற்றமடைந்திருக்கிறது என்று கூட சொல்லலாம். அதே சமயத்தில் முன்னேற்றமடைந்து வருகிற தொழில்களை முன்னேற்றமடையச்செய்யாதபடி பல காரியங்கள் நடைபெற்று வருகின்றன. வட நாட்டிலிருந்து நமக்குக் கிடைக்கக்கூடிய நிலக்கரி, கோக், இரும்பு சாமான்கள் முதலியவைகள் வட நாட்டிலிருந்து நமக்கு குறித்த நேரத்தில் குறித்த அளவு கிடைக்கவில்லை. அதற்கு பெருவாரியாக தடை ஏற்படுகிறது. இவைகள் வருவதற்கு உள்ள போக்குவரத்து வசதி குறைவால் பல காரியங்கள் முன்னேற்றமடையாமல் இருக்கின்றன. அதே நேரத்தில் விலைவாசிகள் வேறு அதைப் பாதிக்கிறது. நிலக்கரியை எடுத்துக்கொண்டால் அங்கு முப்பது ரூபாய்க்குக் கிடைக்கிறது என்றால் இங்கு அதே நிலக்கரிக்கு 80 ரூபாய் ஆகிறது. அதுவும் வேண்டிய அளவில் குறித்த காலத்தில் கிடைக்கவில்லை. இந்தக் காரணத்தால் நமது மாகாணத்திலுள்ள சிறு தொழில்கள் பெரிய அளவில் பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதை கனம் தொழில் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். ஆகவே இவைகளுக்கு பூல் பிரைஸ் நிர்ணயிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இப்பொழுது நாம் உரம் சப்ளை செய்வதில் பூல் ப்ரைஸ் நிர்ணயம் செய்திருக்கிறோம். அதைப்போலவே இதற்கும் பூல் பிரைஸ் நிர்ணயிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். எப்படி நாம் சீனி, உரம் முதலியவைகளுக்கு பூல் ப்ரைஸ் வைத்திருக்கிறோமோ அதைப்போலவே இதற்கும் வைக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதைப்பற்றி மத்திய சர்க்காருக்கு இந்த சர்க்கார் எழுதிக் கேட்டு நிர்ணயிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பூல் ப்ரைஸ் வைப்பதன் மூலமாகத்தான் இந்த ராஜ்யத்திலுள்ள சிறு தொழில்களை நாம் காப்பாற்ற முடியும். இத்துடன் வட நாட்டிலிருந்து நமக்கு வரக்கூடிய நிலக்கரி, கோக் முதலியவைகள் நமக்குக் குறித்த காலத்தில் குறித்த அளவில் கிடைக்கும்படியான அளவில் போக்குவரத்து வசதியும் செய்து கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதன் காரணமாக நமது நாட்டில் சிறு தொழில்கள் வளர்ச்சி அடைவதற்கு வழி இருக்கிறது என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த மாகாணத்திலுள்ள இஞ்சினியரிங் தொழில்கள் பூராவும் நிலக்கரி இல்லாததாலும், கோக் இல்லாததாலும் பெரிய அளவில் பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதை கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். அத்துடன் நமக்கு வேண்டிய இரும்பு, இரும்பு சாமான்கள் முதலியவைகள் கிடைப்பதற்கும் தக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

தூத்துக்குடி துறைமுக அபிவிருத்தி சம்பந்தமாக கவர்னர் அவர்கள் தன்னுடைய உரையில் குறிப்பிட்டிருப்பதைக் கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். தூத்துக்குடி துறைமுகம் சம்பந்தமாக சந்தேகப்பட்டுக்கொண்டிருந்தவர்களுக்கு இது கொஞ்சம்

24th April 1962] [Sri A. P. C. Veerabahu]

மகிழ்ச்சியைக் கொடுக்கும் என்று நினைக்கிறேன். இதை எடுத்து முடிப்பதற்கு எந்த எந்த விதத்தில் நடவடிக்கைகள் எடுத்து வர வேண்டுமோ அந்த வகையில் எடுத்துவரப்பட்டிருக்கிறது. இது சம்பந்தமாக அரசாங்கம் ஒரு ஹை பவர் கமிட்டிகூட போட்டிருக்கிறது. இந்த அபிவிருத்தி வேலை செய்வதற்கு பெரும் தடையாக இருப்பது அங்குள்ள குடி தண்ணீர் சப்ளை வசதி. அங்கு அது சரியாக இல்லை. இப்பொழுதுள்ள வசதியை விட இன்னும் இரண்டு மூன்று பங்கு அதிகப்படுத்தினால் வசதியாக இருக்கும். ஒவ்வொரு வருடமும் அங்கு இரண்டு வித பருவ மழை உண்டு. அதாவது வடகிழக்கு, தென்மேற்கு பருவ மழை அங்கு உண்டு. வருஷத்தில் ஆறு மாதத்தில் தண்ணீர் over-flow ஆகி ஸ்ரீவைகுண்டம் அணைக்கட்டிலிருந்து விழுகிறது. ஸ்ரீவைகுண்டத்திலிருந்து ஐந்தாறு மைல்களுக்கு அப்பால் ஆத்தூருக்கு அருகில் முக்காணிக்குப் பக்கத்தில் ஒரு பாலம் இருக்கிறது. இந்த நதியின் குறுக்கேயுள்ள பாலத்தை அணைக்கட்டாக மாற்றியமைத்தால் நிரந்தரமாகத் தண்ணீர் கிடைக்க வாய்ப்பு இருக்குமோ என்று நான் எண்ணுகிறேன். இது 'டெக்னிகல் பீபிள்' (Technical people) யோசனை செய்யவேண்டிய விஷயம் என்றாலும், எனக்குத் தோன்றுகிறதைச் சொல்கின்றேன். ஆத்தூர் பக்கத்தில் போட்டிருக்கின்ற பாலத்தை அணையாக மாற்றினால் ஸ்ரீவைகுண் டத்திலிருந்து ஆறு மைல் நீளமுள்ள ஆற்றுப் படுகையில் தண்ணீர் வருவதோடு ஸீபேஜ் வாட்டரும் (seepage water) கிடைக்கும். 10-30 a.m. 'ஸப்மெர்ஜிபிள் டாம்ஸ்'-ம் (submergible dams) நதியில் கட்டலாம். 'ரிவர் பெட்'டில் (River bed) சப்மெர்ஜிபிள் டாம்ஸ் போட்டால் அதிகத் தண்ணீர் கிடைக்க வாய்ப்பு இருக்கும். தண்ணீர்ப் பிரச்னையைத் தீர்க்க இந்த முறையில் அணுகிப் பரிசீலிக்கவேண்டுமென்ற யோசனையை இந்தச் சபை மூலமாகச் சமர்ப்பிக்கின்றேன்.

(Mr. Deputy Speaker in the Chair.)

ஆரம்பக் கல்வியைப்பற்றி மாத்திரம் கவர்னர் அவர்கள் குறிப்பிட்டார்கள். இப்பொழுது போகின்ற வேகத்தைப் பார்க்கும் போது, ஏராளமான உயர்நிலைப் பள்ளிகள் வேண்டியிருக்கின்றன. கல்வி சம்பந்தமாக வெளியிடப்பட்ட வெள்ளை அறிக்கையின்படி, செகண்டரி எஜுகேஷன் போர்டு ஒவ்வொரு ஜில்லாவிலும் நிர்மாணித்து, அதன் மூலமாக உயர்நிலைப் பள்ளிகள் ஏற்படுத்தப் போகிறோம் என்று இதற்கு முன்னால் சொல்லப்பட்டது. வருகிற ஜூன் மாதத்தில் பல இடங்களில் உயர்தரப் பள்ளிகள் ஏற்படுத்த வேண்டிய அவசியம் நாட்டில் ஏற்பட்டிருக்கிறது என்று இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கின்றேன். ஏற்கனவே இருந்த ஜில்லா போர்டுகளிடம் நிதி வசதிக் குறைவின் காரணமாக ஜில்லாக்களில் புதிய உயர்நிலைப் பள்ளிகள் ஆரம்பிப்பதில் ஊக்கம் காண்பிக்காத நிலை இருக்கிறது. நிதி வசதிக் குறைவால் புதிய உயர்நிலைப் பள்ளிகளை ஏற்படுத்த முடியாமலிருக்கிறோம் என்று ஜில்லாக் கலெக்டர் சொல்லுகிறார்கள். திருநெல்வேலி ஜில்லாவில் ஐந்தாறு இடங்களில் உயர்நிலைப் பள்ளிகள் திறக்கப்படவேண்டியிருக்கிறது. ஆகவே, இந்தப் பிரச்னையில் நல்லதொரு முடிவு

[Sri A. P. C. Veerabahu] [24th April 1962

காணவேண்டுமென்று 'பாலிஸி டெஸிஷன்' எடுத்து செகண்டரி எஜுகேஷன் கமிட்டி ஏற்படுத்துவது மூலமாக அல்லது டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன் நேரடியாகப் பள்ளிக்கூடங்களைத் திறக்கலாம் என்று அவருக்கு அதிகாரம் கொடுப்பது மூலமாக இப் பிரச்னையை உடனடியாகச் சமாளித்துவிடக்கூடிய நிலை இருக்கிறது என்பதைச் சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவந்து எனக்கு பேசுவதற்கு சந்தர்ப்பம் அளித்த கனம் சபாநாயகருக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

*** SRI V. SANKARAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்கள் ஆற்றியிருக்கும் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச முற்படு கின்றேன். கடந்த ஆண்டிலே 48 கோடி ரூபாய் என்று அளவிட் டிருந்தாலும் கூட, ஐம்பது கோடி ரூபாய் வரை செலவு செய்திருக் கிறோம். நடப்பு ஆண்டில் 55 கோடி ரூபாய் என்று நிர்ணயிக்கப் பட்டிருந்தாலும் கூட, சுமார் 60 கோடி ரூபாயாவது செலவழிக்கப் படும். குறிப்பிட்ட அளவுக்கு மேலாக காரியங்களை நாம் சாதித் துள்ளோம் என்பதைப்பற்றி கவர்னர் உரையில் விவரமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதோடு, கிராமக் கைத்தொழில்கள், சுகாதாரம், கிராம விவசாய அபிவிருத்தி, ஆரம்பக் கல்வி முதலிய வேலைகளுக்கு பெரும் தொகை ஒதுக்கப்பட்டிருப்பது பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்துக்களை அமைப்பது, சிறு பாசனத் திட்டங்கள், தீவிர சாகுபடித் திட்டங்கள் இவைகள் எல்லாம் அமுலாக்கப்பட்டு நல்ல முறையில் நடந்து கொண்டு வருவதும், சென்ற திட்டத்திலே சுமார் ஒன்பது லட்சம் டன் உணவு உற்பத்தி அதிகரித்ததும், மூன்றும் திட்டத்தில் உணவு உற்பத்தி மேற்கொண்டு 16 லட்சம் டன் அதிகரிக்கவேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டிருப்பதும் உரையிலே காணப்படுகிறது. சென்ற வருஷ உரையைப் பார்த்தால், ரசாயன உரம் சரியான அளவு கிடைக்காத காரணத்தால், விவசாய உற்பத்தி எதிர்பார்த் ததைவிட குறைந்துவிட்டது என்று தெரிகிறது. அதனுல், இப்பொழுதிருந்தே நமக்குத் தேவையான அளவு ரசாயன உரம் காலாகாலத்தில் கிடைப்பதற்கான வழிவகை செய்யப்பட வேண்டும்.

இப்பொழுது தமிழகத்தில் பல மாவட்டங்களில் கம்பளிப் பூச்சி நோய் ஏற்பட்டு ஓரளவு புஞ்சை விவசாயம் அதனுல் பாதிக்கப்பட்டிருக்கிறது. தற்சமயம் பூச்சித் தொல்லை சற்று குறைவாக இருந்தாலுங்கூட, பூமிக்குள் இருந்துகொண்டு மழை காலத்தில் அது திரும்பவும் கிளக்கும் என்று சொல்லப்படுகிறது. பூச்சித் தொல்லையை அறவே கட்டோடு மறுபடி வராது நீக்கு வதற்கு என்னென்ன நடவடிக்கை எடுக்கவேண்டுமோ அதைச் செய்யவேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள் கின்றேன்.

பொதுவாக, அறிக்கையில், கிராமப் புறங்களில் விவசாய அபிவிருத்தி, கிராமக் கைத்தொழில்கள், கிராம சுகாதாரம், ஆரம்பக் கல்வி, பஞ்சாயத்து அமைப்பு முதலியவற்றிலே அதிக

24th April 1962] [Sri V. Sankaran]

மாகக் கவனம் செலுத்தப்பட்டு, அதற்கு அதிகமான தொகை ஒதுக்கப்படுவதைப் பார்த்தால், நகரப் புறங்களுக்குச் செலுத்தப் படவேண்டிய கவனம் ஓரளவு குறைந்துவிடுமோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. பொதுவாக எடுத்துக்கொண்டால், நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், அதிகமான கிராம மக்கள் நகரங்களில் வந்து குடியேறுவதைப் பார்க்கிறோம். தொழில்கள் அதிகமாக வளர வளர, கிராம மக்களெல்லாம் பெருவாரியாக நகரங்களில் வந்தது குடியேறுவதைப் பார்க்கிறோம். அப்படிப் பட்ட நிலைமையில் நகர எல்லைகளை விஸ்தரிக்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. நகரத்தை ஒட்டியுள்ள பல பகுதிகளை நகர முனிஸிபாலிடியோடு சேர்த்து விரிவாக்க வேண்டிய நிலை இருக் கிறது. அப்பேர்ப்பட்ட நிலைமையில், சர்க்கார் அதற்கு போதிய உதவி அளிக்கவேண்டும். குறிப்பாக மதுரையில் சுமார் எட்டு பகுதிகள் முனிஸிபல் எல்லைக்குள் சேர்க்கப்பட வேண்டும் என்ற பிரச்னை 14 ஆண்டுகளாக பரிசீலனையில் இருந்து வருகிறதே யொழிய, அந்தப் பகுதிகள் நகர எல்லைக்குள் சேர்க்கப்படுவதற்கு அரசாங்கத்திலிருந்து இதுவரை உத்தரவு வரவில்லை. நகரத்தை ஒட்டியுள்ள பகுதிகளை முனிஸிபாலிடியோடு சேர்க்க வழி செய்தால்தான் அபிவிருத்தியடைய முடியும், நகர விஸ்தரிப்பு ஏற்பட முடியும். நகரத்தையொட்டியுள்ள சில வெளிப் பகுதிகளில் பெரிய தனவந்தர்கள் வீடுகளையும் பங்களாக்களையும் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். அதன் மூலமாக முனிஸிபாலிடிக்குக் கிடைக்கவேண்டிய ஆயிரக்கணக்கான ரூபாய் வரிகளைச் செலுத் தாமல், நகரத்தை ஒட்டி வாழ்ந்து, நகரத்தில் உள்ள அத்தனை அனுகூலங்களையும் அடைந்து வருவதைப் பார்க்கிறோம். நகர சபைக்கு அந்த அளவிற்கு நஷ்டம். இதுபோன்ற நகரத்தை ஒட்டியுள்ள பகுதிகளை முனிசிபல் எல்லையில் சேர்ப்பதற்கு போதிய ஊக்கமும் உதவியும் அளிக்கவேண்டும். நகர எல்லைகளை விஸ்தரிப் பதற்கு வேண்டிய வகை செய்து, அதற்கு வேண்டிய உதவி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

பொதுவாக நகரத்தில் குடி தண்ணீர் திட்ட, பாதாள சாக்கடைத் திட்டம் இவை அத்தியாவசியமானவை. மதுரை நகரம் சம்பந்தமாக இத் திட்டங்களுக்கு நான்கு கோடி ரூபாய் வரை கடனாக அரசாங்கத்திலிருந்து நகரசபை கேட்டிருக்கிறார்கள். திருப்பிக் கொடுக்க போதிய 'கபாஸிடி' இருக்கிறதா என்ற சந்தேகத்தை வைத்துக்கொண்டு, அந்த விஷயம் அரசாங்கத்தில் 'பெண்டிங்' ஆக இருக்கிறதாகத் தெரிகிறது. அந்தக் கடனை அரசாங்கம் சீக்கிரமே அளிக்கவேண்டும் அல்லது லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்பரேஷனிலிருந்து கடன் கொடுக்கவாவது வழி வகை செய்யவேண்டும். நகரக் குடி தண்ணீர் வசதி, சாக்கடை வசதி, வீட்டு வசதி, நகரத்தை விஸ்தரிப்பது மற்றும் பல சுகாதார வசதிகளைச் செய்தால்தான் உண்மையிலேயே நகரப் பகுதிகள் நல்ல முறையில் அபிவிருத்தி அடைய ஏதுவாக இருக்கும்.

வீடு கட்டும் திட்டம் சம்பந்தமாக, முக்கிய நகரங்களில், 'ஹௌசிங் யூனிட்' ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அது வரவேற்க வேண்டிய விஷயம். ஆனால் ஒரே ஒரு யோசனை கூற விரும்பு

[Sri V. Sankaran] [24th April 1962

கிறேன். நகரத்தில் கட்டும் வீடுகள் சுமார் பத்து முதல் பதினைந்தாயிரம் ரூபாய்க்குமேல் இல்லாத வீடுகளாக அமைக்கப் பட வேண்டும். நடுத்தர வசதியுள்ளவர்களுக்குத் தான் அதிகமாக வீட்டு வசதி செய்து கொடுக்க வேண்டும். உண்மையிலேயே குறைந்த வருமானம் உள்ளவர்களுக்கு வீட்டு வசதி இருக்க வேண்டுமே தவிர, சர்க்கார் பணத்தைக் கொண்டு முப்பது ஆயிரம், நாற்பது ஆயிரம் ரூபாய் அளவில் ஏற்கனவே வீட்டு வசதி உள்ளவர்களுக்கு உதவி செய்யும் வகையில் திட்டம் அமையக் கூடாது. ஆகையால், நடுத்தர வசதியுள்ள உத்தி யோகஸ்தர்கள், மாதம் 150 ரூபாய்க்குமேல் சம்பளம் இல்லாத உத்தியோகஸ்தர்கள், பொதுவாக மாதா மாதம் ஒரு குறிப்பிட்ட சம்பளம் வாங்கும் உத்தியோகஸ்தர்கள் நகரப் புறங்களில் வசிக் கிறார்கள். அவர்களுக்கும், ஏற்கனவே வீட்டு வசதி இல்லாதவர் களுக்கும் தான் கண்டிப்பாக வீட்டு வசதி செய்து கொடுக்க வேண்டும். ஏற்கனவே, முதல் அமைச்சர் அவர்களுடைய அறிக்கையில், எல்லா சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கும் சீக்கிரமாக வீடு கட்டிக்கொடுக்க எல்லா வழிவகைகளும் செய்யப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த முறையில் செய்தால் ஓரளவு அனுகூலமாக இருக்கும். விலைவாசி அதிகரிப்பினால் ஓரளவு கிளர்ச்சி இருக்கிறதென்றால், அது நடுத்தர வர்க்கத்தினரிடமிருந்து தான் வருகிறது. குறிப்பாக குறிப்பிட்ட மாத வருவாய் (fixed monthly salary) உள்ளவர் களிடமிருந்துதான் அதிருப்திக் குரல் ஏற்படுகிறது. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், ஆசிரியர்கள், போலீசிலே வேலை பார்க்கிற வர்கள் ஆகியவர்களுக்கு ரயில்வேயில் 'க்ரெயின் ஷாப்' வைத் திருந்ததுபோல் வைத்து, ஓரளவு 'ஸப்ஸிடைஸ்டு' ரேட்டில் தானியங்கள் கொடுக்க வகை செய்ய வேண்டும். இப்பொழுது கல்வி, வைத்திய வசதி சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு இருந்து வருகிறது. வைத்திய வசதிகள் ஆசிரியர்களுக்கு இன்னும் விஸ்தரிக்கப்படவில்லை. அவர்களுக்கும் இவ் வசதிகள் சீக்கிரமே விஸ்தரிக்கப்படவேண்டும். இப்படிப் பல சலுகைகளைச் செய்தால், விலைவாசி உயர்வினால் ஏற்படும் கஷ்டத்திலிருந்து நடுத்தர வர்க்கத் தினருக்கு ஓரளவு நிவாரணம் கிடைக்கும் என்று சொல்லிக் கொள்கின்றேன்.

அடுத்தபடியாக நகரப்புறங்களில் பார்த்தால் சிறு தொழில்கள், நுட்பத் தொழில்கள், கைத்தொழில்கள், குடிசைத் தொழில்கள் பல பாகங்களில் நடைபெற்று வருவது தெரியும். அவற்றை நன்றாகக் கண்காணித்து டேட்டா எடுக்க வேண்டும். நகரங்களில் அநேக இடங்களில் நுட்பமான சித்திர வேலைகள், மரவேலைகள் யாவும் நடக்கின்றன. அதிகாரிகள் யாரும் அவர்களை அணுகி போதுமான உதவி அளிப்பது இல்லை. அவர்களாக வந்து கடனோ, சப்சிடியோ கேட்டால் உதவலாம் என்று இருப்பது சரியல்ல. அநேகம் பேர்களுக்கு அரசாங்கம் உதவியைப் பெறுவது எப்படி என்றே தெரியாமல் இருக்கிறது. ஆகவே அங்கங்கே உள்ள தொழில்களை எல்லாம் கவனித்து விவரங்கள் எடுத்து அவர்

களுக்கு வேண்டிய கடனோ, சப்ஸிடியோ கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும். அவர்கள் உதவி பெற கூட்டுறவு சங்கங்களை அவர்களுக்கு அமைத்துக் கொடுக்கலாம்.

அடுத்தபடியாக மருத்துவ வசதியை எடுத்துக்கொண்டால் மதுரையில் இருந்த சில சர்ஜிகல் யூனிட்டுகளைக் கூட தஞ்சைக்கு மாற்றப்போவதாக அறிகிறேன். ப்ரெயின் சர்ஜிகல் சம்பந்தமாக இப்போது சென்னையில் ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஏற்கனவே ஒரு டிபார்ட்மென்ட் இருக்கிறது. இன்னொன்றையும் சென்னையில் ஏற்படுத்த உத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது. அப்படியில்லாமல் அதை மதுரையில் ஏற்படுத்தினால் தென்பகுதியில் உள்ள மக்களுக்கு எல்லாம் மிக உதவியாக இருக்கும். எனக்குத் தெரிந்த ஒரு கேஸ் சம்பந்தமாக, விமானத்தில் சென்னையில் இருந்து டாக்டரை வரவழைக்கும்படியான நிலைமை ஏற்பட்டது. அல்லது நோயாளிகள் சென்னைக்கு வரவேண்டியதாக இருக்கிறது. சாதாரண மக்களுக்கு அவ்வாறு இயலாது. ஆகவே தென் பகுதியில் உள்ள மக்களுக்கு வசதியாக அதை மதுரையில் ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

சர்க்கரை, சிமிண்டு போன்ற பொருள்களை எடுத்துக்கொண்டால் வெளியில் தட்டுப்பாடு மிக அதிகமாக இருக்கிறது. அதனால் மக்களிடையே அதிருப்தி ஏற்படுகிறது. சிமிண்ட், தாசில்தார் மூலமாக பர்மிட் பெற்று வாங்குவது என்றாலும் போதுமான அளவுக்குக் கிடைக்காததனால் பல சங்கடங்கள் இருக்கின்றன. சிமிண்டு சம்பந்தமாகவும், சர்க்கரை சம்பந்தமாகவும் புதிதாக ஒரு சில ஆலைகள் ஏற்படுத்தும் திட்டம் இருந்தாலும் அவை ஏற்படுத்தப்பட்டு உற்பத்தி தொடங்குவதற்கு ஒரு சில ஆண்டு களாவது ஆகும். அதுவரை போதுமான அளவு மத்திய சர்க் காரிடம் இருந்து அலாட்மென்டு பெறுவதற்கு முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சென்னை மாநிலத்தைப் பொறுத்த வரையில் இன்னொரு யுனிவர்ஸிடி ஏற்பாடாகவேண்டும். அது மிகவும் தேவையாக இருக்கிறது. அதை மதுரையில் ஏற்படுத்தவேண்டுமென்று நானும், அந்த மாவட்டத்தைச் சேர்ந்த ஒரு சில அங்கத்தினர் களும் பல தடவைகள் வற்புறுத்தி கூறியிருக்கிறோம். சீக்கிரத்தில் அதை மதுரையில் ஆரம்பிக்கவேண்டும். அதைப் பூர்த்தி செய்ய விவசாயக் கல்லூரி ஒன்றும், கால்நடை மருத்துவக் கல்லூரி ஒன்றும் அங்கே தேவையாக இருப்பதனால் அவற்றையும் ஆரம்பிக்க உடனடி நடவடிக்கை எடுக்கவேண்டும். இதைப் பற்றி பல மந்திரிகள் பல இடங்களில் சொற்பொழிவு செய்திருக் கிறார்கள். ஆகவே இவற்றை ஆரம்பித்து, அங்கே ஒரு யுனிவர்-ஸிடியை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக பாவர்டி சர்டிபிகேட் சம்பந்தமாக ரூ. 1,200 என்று இருக்கிறது. இதைக் குறைந்தது ரூ. 2,000 வரை என்றாவது உயர்த்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்றைக்குள்ள விலைவாசி நிலைமையை எடுத்துக்கொண்டால் மில் தொழிலாளர்கள்

[Sri V. Sankaran] [24th April 1962

மாதச் சம்பளம் குறைந்தது ரூ. 120 ஆக இருக்கிறது. ஆதலால் ஆயிரக்கணக்கான மில் தொழிலாளிகளுக்கு இந்தச் சலுகை மறுக்கப்படுகிறது. ஆதலால் இந்த அளவை ரூ. 2,000-க்கு உயர்த்த வேண்டும். உயர்தரக் கல்விக்காக ஆசிரியர்கள், என்.ஜி.ஓ. க்கள் இவர்களுடைய குழந்தைகளுக்கு மேல் படிப்பிற்கு கடன் வசதி அளிக்கும் திட்டத்தை அரசாங்கம் அறிவித்திருக்கிறது. குறைந்த வருமானமுள்ள எல்லோருக்கும் இந்த வசதி அளிக்கப்பட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மத்திய சர்க்காருடைய வருமான வரி சம்பந்தமான காரியாலயங்களை எல்லாம் சொந்தமாகக் கட்டிடம் கட்டி ஓரிடத்தில் வைத்திருக்கிறார்கள். அதுபோலவே நமது மாநில சர்க்காரில் வருமானம் சம்பந்தமான இலாகாக்களை எல்லாம் ஒருங்கிணைத்து ஓரிடத்தில் நல்ல முறையில் வைக்க வசதி செய்யவேண்டும். அங்கங்கே சர்கிள் சர்கிளாகச் சிதறிக் கிடக்கிறது. மேலும் இந்த அலுவலகங்களுக்கு வருகிற கஸ்டமர்களுக்கும், வியாபாரிகளுக்கும் வேண்டிய வசதிகள் எல்லாம் இங்கே செய்யப்படவேண்டும். கோர்ட்டுகள் சம்பந்தமாகவும் இப்படியே. இங்கெல்லாம் போதுமான வசதி இல்லாத காரணத்தினால் அதிருப்தி நிலவுகிறது. நகரங்களில் எல்லாக் கோர்ட்டுகளையும் ஒரே இடத்தில் கட்டப்பட வேண்டும். நெசவாளர்களுடைய பிரச்சனை கவனிக்கப்பட வேண்டும். நூல் விலை உயர்ந்துவிட இடமளிக்கக் கூடாது. திடீர் திடீர் என்று அதன் விலைகள் உயர்வதனால் நெசவாளர்கள் மிகவும் பாதிக்கப்படுகிறார்கள். கூடுமானவரை நூல் விலை எக்காலத்திலும் அதிகரிக்காத வகையில் போதுமான ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மத்திய சர்க்கார் சிப்பந்திகளுடைய அலவன்சு கூடுகிறது. ராஜ்ய சர்க்கார் பே கமிஷன் சிபார்சுப்படி அந்த அளவு நமது சிப்பந்திகள் அலவன்சையும் கூட்ட வேண்டும். சர்க்கார் உத்தியோகஸ்தர்களில் சீனியாரிட்டிபடி ப்ரமோஷன் செய்வதில்லை என்ற புகாருக்கு இடமளிக்கக் கூடாது. போலீஸ், ரிஜிஸ்ட்ரேஷன் டிபார்ட்மெண்ட் போன்ற சில இலாகாக்களில் போதுமான விகிதம் 'அப்பர் டிவிஷன் க்ளார்க்குகள்' இல்லையென்று கேள்விப்படுகிறேன். இதையெல்லாம் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* **Sri KR. RM. KARIAMANICKA AMBALAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நேற்றைய தினம் கவர்னர் பெருமான் அவர்களால் நிகழ்த்தப்பட்ட உரையிலே நாட்டு மக்கள் எதிர்பார்த்த அளவு எதுவும் காணப்படவில்லை என்ற காரணத்தால் நான் அதை வரவேற்க முடியாமைக்கு வருந்துகிறேன். பொதுவாக நாட்டிலே விலைவாசிகள் உயர்ந்துகொண்டே போகின்றன. விலைவாசியைக் குறைப்பதற்கு எந்த விதமான ஏற்பாடும் செய்ததாக இல்லை. விலைவாசிகளைக் குறைக்காதவரை நாட்டு மக்களின் கஷ்டம் அதிகரித்துக்கொண்டேபோகுமே தவிர நாட்டு மக்கள் நன்மை அடைய முடியாத நிலையிலே இருக்கிறார்கள். மக்களுக்காகத் திட்டங்கள் வேண்டுமேயொழிய திட்டங்களுக்காக மக்கள் இருப்பதாக இருந்தால் அது கஷ்டமாகத்தான் இருக்கிறது.

24th April 1962] [Sri KR. RM. Kariamanicka Ambalam]

மக்களை உத்தேசித்து விலைவாசிகளைக் குறைத்து மக்கள் பயனடையக்கூடிய நிலையை உருவாக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். ஆளும் கட்சியைச் சேர்ந்த கனம் அங்கத்தினர்கள் கவர்னர் உரைக்கு நன்றி செலுத்திக்கொண்டு வரும்போது எதிர்க் கட்சிக்காரர்களாகிய நாங்கள் குறைப்படுகிறோம் என்று சொல்லி, அவர்களும் குறைப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். நாங்கள் குறை கூறும்போது குறையாகத் தெரிகின்றதே தவிர நாங்களும் குறைதான் சொல்கிறோம் என்பதை யோசிக்காமல் பேசிக்கொண்டு வருகிறார்கள். சர்க்கார் உத்தியோகஸ்தர்களைப் பற்றி கவர்னர் பெருமான் உரையில் தேர்தல் நேரத்தில் நல்ல முறையில் நடந்து கொண்டதாகக் கூறியிருக்கிறார்கள். எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் கூட அதைக் குறிப்பிட்டார்கள். அவர்கள் பகுதிகளில் தேர்தலில் எவ்விதக் கலவரமும் இல்லாமல் அதிகாரிகள் நடந்து கொண்டார்கள் என்று கூறினார்கள். ஆளும் கட்சியைச (காங்கிரஸ் கட்சியைச்) சேர்ந்தவர்களுக்கு ஆதரவு இருக்கிற இடங்களில் கலவரங்கள் ஏற்படாமல் இருந்திருக்கலாம். எங்களைப் போன்ற எதிர்க்கட்சிக்காரர்களுக்கு ஆதரவு இருக்கிற இடங்களில் கலவரங்கள் இருந்துகொண்டுதான் இருந்தன.

என்னுடைய தொகுதியிலே சில அதிகாரிகள் ஆறு வருஷங்களாக இருக்கிறார்கள். அவர்களைப்பற்றி சட்டமன்றத்திலே இரண்டு முறை எடுத்துக் கூறியும் கூட அவர்கள் இன்னும் மாற்றப்படாமல் இருக்கிறார்கள். அவர்கள் எதிர்க்கட்சிக்காரர்களாகிய எங்களுக்கு இன்னும் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இப்போது எதிர்கட்சிகளைச் சார்ந்தவர்கள் மீது பல கேஸ்கள் போடப்பட்டிருக்கின்றன. அங்கெல்லாம் அமைதியான முறையில் தேர்தல் நடந்தது என்று கூறுவது பொருத்தமானதல்ல. அங்குள்ள அதிகாரிகள் பாரபட்சமான முறையில் நடந்து கொண்டார்கள் என்பதை ருசுப்படுத்த முடியும். இதெல்லாம் கவர்னர் உரையிலே சொல்லப்படவில்லை.

மின்சாரம் நல்ல முறையிலே பயன்படுத்தப்பட்டு விஸ்தரிக்கப்பட்டு வருகிறது என்று கூறியிருக்கிறார்கள். ஆனால் இன்னும் எத்தனையோ கிராமங்களுக்கு மின்சாரம் கிடைக்காமல் விவசாயத்தை நல்ல முறையில் நடத்த முடியாத நிலைமை இருந்து வருகிறது. குறிப்பாக, பஞ்சாயத்து யூனியன் இருக்கும் இடங்களில் கூட மின்சாரம் கொண்டுவரப்படாமல் இருக்கிறது. மின்சாரம் இல்லாத நிலையிலே இன்றைக்குப் பல கிராமங்கள் காட்சி அளிக்கிறது. பஞ்சாயத்து யூனியன் இருக்குமிடங்களில் ரோடு வசதி இல்லாமல் இருக்கிறது. எங்கள் மாவட்டத்தில் திருவாடானை போன்ற பிற்பட்ட தாலுகாக்களில் இந்த நிலைமை இருந்து வருகிறது.

தேர்தல் காலங்களில் சில இடங்களில் புதிய பஸ்களை விட்டார்கள். தேர்தல் முடிந்தவுடன் அந்தப் பகுதிகளில் பஸ்கள் நின்றுவிட்டன. மீண்டும் அந்தப் பகுதிகளில் பஸ்களை ஓட்ட எந்தவித ஏற்பாடும் செய்யப்படவில்லை. ஓட்டு வாங்கும் முறை

[Sri KR. RM. Kariamanicka Ambalam] [24th April 1962

யிலே அவர்கள் பஸ்களை விட்டார்களே தவிர, ஜனங்களுக்குப் பயன்படக்கூடிய முறையிலே விடவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது.

ரயில்வே போக்குவரத்தை விஸ்தரிப்பது பற்றி மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்க்கப்பட்டிருக்கிறது. எங்களுடைய திருவாடானை தாலுகாவில் ஒரு பகுதியில் கூட ரயில் பாதைகள் கிடையாது. அதற்கு எந்தவிதமான ஏற்பாடும் இன்னும் செய்யப் படவில்லை. அவைகளுக்கெல்லாம் ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ராமநாதபுரம் ஜில்லாவில் தண்ணீர்ப் பஞ்சத்தால் இந்த வருஷம் கூடப் பல கிராமங்கள் பஞ்ச நிலைமையில் இருக்கின்றன. காவேரியில் இருந்து கால்வாய் மூலம் தண்ணீர் கொண்டு வர ஏற்பாடு செய்தால் எங்கள் மாவட்டம் பயன்பெற முடியும். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலே கூட இது பற்றி எதுவும் சேர்க்கப்படவில்லை. தஞ்சை ஜில்லாவில் காவேரி ஆற்றின் நீர் வெள்ளம் வரும்போது அங்கு சில கிராமங்களை அடித்துக்கொண்டு போவதைப் பார்க்கிறோம். அந்தக் கிராமங்களைச் செப்பனிட ஏகப்பட்ட பணத்தை செலவு செய்கிறார்கள். அந்தத் தண்ணீரை எங்கள் ஜில்லாவுக்குத் திருப்பி விடுவதன் மூலம் நாங்களும் பயன் பெற முடியும், அவர்களுக்கும் சேதமில்லாதிருக்கும், இதனைச் செய்து தர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயப் பெருங்குடி மக்கள் நிறைந்த இந்த நாட்டிலே விவசாயக் கருவிகளின் விலை ஏறிக் கொண்டே போகிறது. விவசாயிகள் நவீனக் கருவிகளை வாங்க முடியாத நிலையில் இருக்கிறார்கள். இந்தக் கருவிகள் மலிவான விலையில் கிடைக்க ஏற்பாடு செய்து தர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

பஞ்சாயத்துக்கு அதிக அதிகாரம் கொடுத்திருப்பதாக உரையிலே கூறியிருக்கிறார்கள். ஆனால் இப்போது பஞ்சாயத்துக்கு நல்ல முறையில் அதிகாரம் இருக்கிறது என்று சொல்வதற்கில்லை. முன்பு ஜில்லா போர்டிலே இருந்த அதிகாரம் கூட இன்றைக்குப் பஞ்சாயத்து யூனியன் சேர்மன்களுக்கு இல்லாமல் குறைக்கப்பட்டிருக்கிறது. அதிகாரம் பூராவும் அதிகாரிகளிடத்தில் இருக்கின்றனவே தவிர, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களிடத்திலே இல்லை என்பதைக் கூறிக் கொள்ள விரும்புகிறேன். முன்பு ஜில்லா போர்டு பிரசிடெண்ட் அவருடைய நோக்கத்திற்குச் செய்து வந்த வேலைகள் எல்லாம் இப்போது கமிஷனரிடமும் கலெக்டரிடமும் சேர்க்கப்பட்டிருக்கிறது. சாதாரணமாக ஒரு வாத்தியாரை மாற்ற வேண்டுமென்று நினைத்தால் கூட பஞ்சாயத்து யூனியன் தலைவரால் ஒன்றும் செய்ய முடியாது. உள்ளபடியே ராம ராஜ்யத்தை நிர்ணயித்து விட்டோம் என்று சொன்னால், பஞ்சாயத்து யூனியனில் இருக்கும் மக்கள் பிரதிநிதிகளிடத்திலே அதிகாரமெல்லாம் இருக்க வேண்டுமென்று கூற விரும்புகிறேன்.

24th April 1962] [Sri KR. RM. Kariamanicka Ambalam]

எங்கள் ராமநாதபுரம் ஜில்லா, குறிப்பாக கிழக்கு ராமநாத புரம் பகுதிகள் மிக மிகப் பிற்போக்காக இருப்பது எல்லாருக்கும் நன்ருகத் தெரியும். இப்போது ஏ, பி, சி, டி என்ற முறையிலே அபிவிருத்தி பிளாக்குகள் பிரிக்கப் பட்டிருக்கின்றன. குறிப்பாக, மிக மிக மோசமான நிலையிலே இருக்கக் கூடிய பகுதிகளை 'டி' ப்ளாக்காக ஆக்கிஞல்தான் அந்தப் பகுதி அபிவிருத்தி அடைய முடியும். ஆகவே, எங்கள் பகுதியினை அந்த முறையிலே பிரித்து அபிவிருத்தி வேலைகளை மேற்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தேர்தல் மிக நல்ல முறையிலே நடந்தது என்று கவர்னர் பெருமான் அவர்கள் சொன்னார்கள். அந்த அளவுக்கு நல்ல முறை யில் நடைபெறவில்லை என்பதற்கு ஒரு உதாரணம் கொடுக்க விரும்புகிறேன். என்னுடைய தொகுதியிலே எனது தேர்தல் ஆபீஸில் காங்கிரஸ் அபேட்சகர் பலாத்காரமாக உள்ளே நுழைந்து கொண்டார். அது பற்றி அதிகாரிகளை அணுகியும் இது வரை எந்த விதமான நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

துறைமுக அபிவிருத்தி பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. பழங்காலந்தொட்டு தொண்டி துறைமுகமாக இருந்து இப்போது துறைமுகமாக இல்லாமல் இருக்கிறது. தொண்டி போன்ற பிற்பட்ட பகுதிகளைக் குறைந்த பட்சம் மீன் பிடி துறைமுகமாக வாவது செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன். 11-00 a.m.

**SRI G. VENKATARAMAN:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நேற்றையதினம் கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றி யிருக்கிற அரியதொரு பேருரைக்கு நன்றி தெரிவிக்கும் பெரும் பணியில் எனக்குப் பங்கு கிடைத்ததற்காக எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். கவர்னர் பெருமான் அவர்கள், இந்த நாடு பொருளாதாரத் துறையில் முன்னேறிவருகிற அழகான பாங்கை எடுத்துக் கூறியிருக்கிருர்கள். இந்த நாடு முன்னேற வேண்டுமென்று அரசியல் சட்டம் நிறைவேற்றப்பட்ட பிறகு, இந்த நாடு முன்னேற திட்டமிட்ட பொருளாதார வழிதான் சிறந்ததொரு வழி என்று ஏற்றுக்கொண்டிருக்கிறோம். திட்ட மிட்ட பொருளாதாரம் என்று கூறும்போது இந்த நாடு பல்வேறு துறைகளில் முன்னேறுவதற்கு வேண்டிய திட்டங்களை உருவாக்கி அந்தத் திட்டங்கள் மூலம் பல்வேறு அரசியல் அமைப்புகள் இயங்குவது என்ற அடிப்படையில் திட்டமிட்ட பொருளா தாரத்தை நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறோம். "ப்ளாண்ட் எக் கானமி" என்று சொல்கிருர்கள். திட்டமிட்டு முன்னேற முற் படும்போது, நாடு விவசாயத் துறையில் முன்னேறவேண்டும். தொழில்துறையில் முன்னேறவேண்டும், மின்துறையில் முன்னேற வேண்டும், கல்வித்துறையில் முன்னேறவேண்டும் என்ற பல்வேறு சிறந்த திட்டங்களைத்தான் திட்டமிட்ட பொருளாதார வழி என்று ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆக, திட்டமிட்ட பொருளா தாரத்தை ஏற்றுக் கொண்டிருக்கிற நேரத்தில்கூட பல குற்றச்

[Sri G. Venkataraman] [24th April 1962

சாட்டுகள், திட்டமிட்ட பொருளாதாரம் ஜனநாயக அமைப்பில் இயங்காது என்று கூறினர்கள். **'Planning and democracy are contradiction in terms'** என்கிறர்கள். ஆனல், ஜனநாயக அமைப்பில்கூட திட்டமிட்டு முன்னேற முடியும் என்று நிரூபித்துக் காட்டியிருக்கிறோம். இரண்டு மாபெரும் ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றி இன்று மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதல் வாயிலில் அர்ந்துகொண்டிருக்கிறோம். திட்டமிட்டு பல துறைகளில் முன்னேறியிருக்கிறோம் என்பதில் எந்தவிதத்திலும் ஐயம் கொள்வதற்கில்லை. திட்ட வேலைகளில் மக்களுக்கு இருக்கிற மதிப்பு உயர்ந்திருக்கிற காரணத்தினல்தான் இரண்டு முறையல்ல, மூன்ரும் முறையாக அந்த மாபெரும் பொறுப்பை காங்கிரஸ் எற்றுக்கொண்டிருக்கிறது. திட்டமிட்டு முன்னேறும் வழியில், தமிழகம் பாதையில் சென்றுகொண்டிருக்கிறது என்பதை கவர்னர் பெருமான் அவர்கள் அவர்களது உரையில் குறிப்பிட்ட அளவிற்கு அதிகமாகச் செலவழித்திருக்கிறோம். இதற்கு முன் இரண்டு திட்ட காலங்களில் ஒதுக்கப்பட்ட தொகையை குறிப்பிட்ட திட்டங்களுக்கு அதிகமாகவே செலவழித்திருக்கிறோம் என்ற பெருமை தமிழகத்தைச் சாருகிறது. ஆக, பல்வேறு திட்டங்களை நன்கு நிறைவேற்றியிருக்கிறோம் என்று கவர்னர் பெருமான் அவர்கள் துவக்கத்திலேயே குறிப்பிட்டிருப்பது மிகமிக வரவேற்கத்தக்கது. அடுத்து, திட்டமிட்டு பணியாற்றும் பொறுப்பை, அந்த அதிகாரம் மக்களிடம் ஒப்புவிக்கப்பட வேண்டுமென்பது லட்சியமாக ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. இன்று பஞ்சாயத்து ராஜ் அமைக்கப் பட்டு அதை கிராம ராஜ்யமாகக் கருதப்பட்ட பிறகு, அதுதான் ராம் ராஜ்யம் என்று சொல்லும்போது பல்வேறு அதிகாரங்கள் பல்வேறு துறைகளில் அளிக்கப்பட்டிருக்கிறது. கிராமப்புறங் களில் உள்ள குறைகள் என்ன? கிராமங்களில் பள்ளிக்கூடங்கள், ஆஸ்பத்திரிகள், விவசாய அதிகாரிகளின் அலுவலகங்கள் இவை களை எற்படுத்த வேண்டுமென்று பஞ்சாயத்து ராஜ்ய அடிப்படை யில் ஐந்தாண்டுகளுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை ஒதுக்கி அதைப் பல்வேறு துறைகளில் வட்டார வளர்ச்சி அதிகாரிகளைக் கொண்டு, கமிஷனர்களைக் கொண்டு, பஞ்சாயத்து தலைவர்கள் செயலாற்ற வேண்டுமென்பது மட்டுமல்ல. பஞ்சாயத்து யூனியன்கள் பல பல பொறுப்புக்களை எற்க வேண்டிய நிலையிலிருக்கின்றன. நில உச்ச வரம்பிற்குப் பிறகு, மிச்ச மிருக்கும் நிலத்தை நிலமற்ற விவசாயிகளின் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளிக்கவேண்டுமென்று பஞ்சாயத்து யூனியன் களிடம் அவைகளை ஒப்புவிக்கும் அளவிற்குப் பஞ்சாயத்து யூனியன்களின் அதிகாரத்தை அதிகப்படுத்திக் கொண்டு வருகிறோம். ஆக பஞ்சாயத்து ராஜ்யம் அமைந்த பிறகு கிராம மக்கள் ஒளி பெற்றிருப்பதைக் காண்கிறோம். கிராம விவசாயிகள் இன்று உப்பின் தரத்தை அதிகமாகத் தெரிந்து கொண்டிருக் கிருர்கள். அவசியத்திற்கு அதிகமாகவே தெரிந்து கொண்டிருக் கிருர்கள். பரம்பரை பரம்பரையாக பழகிவந்த பழக்கத்தைவிட்டு இன்று விவசாயக் கருவிகளைப் பயன்படுத்தி புதுமுறைகளைப் பின்

24th April 1962]. [Sri G. Venkataraman]

பற்றி இன்று விவசாயம் செய்தால்தான் உற்பத்தியை அதிகரிக்க முடியும் என்ற அளவு விவசாயி அறிவு பெற்றிருக் கிருன். அரசாங்கம் புது முறைகளில் சாகுபடி செய்யுங்கள் என்று கூறும்போது, நல்ல ரசாயன உரத்தைப் பயன்படுத்துங்கள் என்று சொல்லும்போது—இரசாயன உரம் இன்று பற்றுக் குறையாகயிருக்கிறது என்ற காரணத்திஞல் அதிகப்படியான இரசாயன உரத் தொழிற்சாலைகளை அமைக்க முன்வந்திருக் கிருர்கள், அரசாங்கத்தினர். ஆக, கிராமங்களிலுள்ள விவசாயிகள் புது முறைகளைக் கையாளும்போது, பஞ்சாயத்துக்கள் ஏற்படுத் தப்பட்டு அதிகாரங்கள் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிற போது உண்மையிலேயே பஞ்சாயத்து ராஜ்யம் சிறந்ததொரு கிராம ராஜ்யமாக, அன்று காந்தி அடிகள் கனவு கண்ட ராம ராஜ்யமாகத் திகழ்கிறது என்பதில் ஐயம் கொள்ளவேண்டியதில்லை. நாம் செலவழிக்கவேண்டிய பல்வேறு திட்டங்களின் செலவுத் தொகை அதிகரித்துக் கொண்டே போகிறது, முதியோருக்குப் பென்ஷன் அளிக்கும் திட்டம், பகல் உணவுத் திட்டம், சிறுசேமிப்புத் திட்டம் இவைகளில் செலவுத் தொகை அதிகரித்துக்கொண்டிருக் கிறது. ஆகவே வரவுத் துறையில் பல்வேறு முறைகளை நிதி யமைச்சர் அவர்கள் கையாண்டு சமாளிக்கவேண்டியிருக்கும் என்று கூறியிருக்கிருர்கள். ஆக, இன்று நாட்டிலே இரண்டு திட்டங்களை ஏற்றுக் கொண்டிருக்கிறோம். ஒன்று, சமத்துவ சமுதாயத்தை ஏற்றுத்தான் ஆகவேண்டும், அதை உருவாக்க வேண்டும். பிக்ஸட் எக்கானமி மூலம்தான் கலப்புப் பொருளா தாரம் மூலம்தான் அதை அடைய முடியும். பின்னர், தொழில் முன்னேற்றம். வேலைவாய்ப்புக்கள் தேடிக் கொடுக்கவேண்டும். உழைக்கும் மனிதனின் கரங்களுக்கு வேலை கொடுத்து, வேலைக்குத் தகுந்த ஊதியம் கொடுத்து, ஊதியத்திற்குத் தக்க நல்லதொரு வாழ்வும் அளிக்கப்பட வேண்டும். மான் பவர், மனித சக்தியை நன்கு பயன்படுத்தும் வகையில் திட்டமிட்டுப் பணியாற்றி வருகிறோம். தொழில்துறையில், எனக்கு முன்பு பேசிய அங்கத் தினர் குறிப்பிட்டதுபோல், தொழில்துறை அமைச்சர் அவர்களின் முயற்சி காரணமாக இன்று பல்வேறு தொழில் திட்டங்கள் நல்ல முறையில் நடைபெற்று வருவதைக் காண்கிறோம். குறிப்பாகச் சேலம் மாவட்டத்திலிருந்து வந்திருக்கிற பிரதிநிதி என்ற முறையில், சுவையான மாம்பழத்தைத் தவிர வேறு எதையும் கண்டதில்லை, நாங்கள். ஆனால் இன்று சேலம் இரும்பு என்ற சொல் எங்கள் காதில் மாம்பழத்தைவிட இனிப்பாக ஒலிக்கிறது. நெய்வேலியில் கிடைக்கும் பழுப்பு நிலக்கரியைக்கொண்டு ஜெர் மனியில் நடைபெற்று வரும் ஆராய்ச்சிக்கு ஏற்பாடு, பைலட் ப்ராஜக்ட்-க்குப் பிறகு அது சேலத்தில் உருவாகப் போகிறது என்ற நம்பிக்கை எங்கள் உள்ளத்தில் எழுவது பற்றி நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம். அடுத்து, பல்வேறு தொழிற்சாலைகள் தனியார் துறையில் இயங்கக்கூடிய அளவிலும், பெரிய தொழிற் சாலைகள் பொதுத் துறையிலும் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. தனியார் துறையும், பொதுத் துறையும் ஒன்றோடொன்று இணைந்து இயங் கிக் கொண்டிருக்கின்ற பாங்கினைப் பார்க்கும்போது மின்சார உற்

[Sri G. Venkataraman] [24th April 1962

பத்தியின் அவசியம் நமக்குத் தெளிவாகப் புலப்படுகிறது. கிராமங்களில் சக்கரம் ஓட வேண்டுமென்று சொல்கிறார்கள். கிராமத்தில் மின்சக்தி மூலம் சக்கரம் சுழன்றால், எங்கெங்கு சுழல்கின்றனவோ அங்கு ஒளி ஏற்றப்படும். சிறு சிறு கைத்தொழில்கள், குடிசைக் கைத்தொழில்கள் மின்சாரம் மூலம் இணைக்கப்படும்போது ஒவ்வொரு குடும்பத்தின் வருமானமும் அதிகரிக்கும். அப்படி ஒவ்வொரு குடும்பத்திலும் வருமானம் அதிகரிக்கும்போது அங்குள்ளவர்களின் வாழ்வும் மலரும். இந்தத் துறையை, மின் துறையை, எதிர்க்கட்சியினர்கூட இப்படி வரவேற்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டேன். அடுத்து அவர்கள் கூறினார்கள், இடுகாட்டிற்குச் செல்லும் பிணம் இடறி விழும் நிலையில் இருக்கிறது, என்று. இப்படிச் சொல்வது கதையின் அமைப்பிற்குப் பயன்படுமே தவிர நாட்டின் அமைப்பிற்கு இதனால் பலன் ஏற்படுமா? இடுகாட்டிற்குச் செல்லும்போது வாய்ப்பில் இடறி பிணம் விழுகிறது என்று சொன்னால் அது கதை அமைப்பிற்குத்தான் பயன்படும். கிராமங்களில் சக்கரம் சுழல், மின் ஒளி எரிய, தொழில் பெருக, கிராம மக்கள் வாழ்வு மலர மின்சார சக்தியை அதிகரிக்க வேண்டும். இன்றையதினம் நாம் அட்டாமிக் எனர்ஜி மூலம் முன்னேற வழியிருக்கிறது. இன்று ஆட்சியாளர், பல்வேறு தொழில் திட்டங்களை உருவாக்கி, பெரும் பொறுப்புக்களை ஏற்றுக் கொண்டு அவைகளை செயலாக்கிக் கொண்டிருக்கும்போது பல சிக்கல்களையும் சமாளிக்கவேண்டியிருக்கிறது. இன்று கைத்தறி நெசவாளர்கள் நூல் அல்லது நாற்பட்டு போன்ற பொருள்களைப் பயன்படுத்தி துணி உற்பத்தி செய்து மார்க்கட்டில் விற்க வேண்டியிருக்கிறது. விற்பனை செய்கிற நேரத்தில் விற்பனை அதிகரித்தால்தான் அவர்கள் வாழ்வு மலரும் என்ற அடிப்படையில் ஆட்சியாளர் கைத்தறி நெசவாளர்களுக்காகப் பல்வேறு திட்டங்களை உருவாக்கி, அவர்களுக்குக் குறைந்த விலையில் சாதனங்களை வாங்கிக் கொடுப்பது மட்டும் அல்ல—அவர்களுக்கு வீடுகள் கட்ட ஒத்தாசை செய்வது என்பது மட்டுமல்ல—கூட்டுறவு சங்கங்கள் மூலம் விற்பனையாகும் துணிகளுக்கு ரிபேட் அளிப்பது என்பது மட்டுமல்ல—பல்வேறு சலுகைகள் மூலம் கைத்தறித் துணியின் விற்பனையை அதிகரித்து வந்திருக்கிறார்கள். அயல் நாடுகளில் காட்சி நிலையங்கள் ஏற்படுத்தி, ஷோ ரூம்கள் ஏற்படுத்தி இவைகள் மூலம் விற்பனையை அதிகரிக்க உதவி செய்திருக்கிறார்கள், ஆட்சியாளர்கள். ஆனால் அதே நேரத்தில் ஒன்றை மட்டும் இந்தச் சபையில் சொல்ல விரும்புகிறேன். கூட்டுறவுத்துறையில் சேராத நெசவுத் தொழிலாளர்களுக்கும் பல்வேறு வகையான சலுகைகளும் கிடைப்பதற்கு வழிவகை செய்யவேண்டும். இன்றைக்கு பல பொருட்களின் விலைகள் எல்லாம் ஏறிக்கொண்டுதான் இருக்கிறது. இம்மாதிரிப்பட்ட "இன்ஃபிளேஷனரி பீரியட்"-ல் விலைவாசிகள் உயருவதைப்பற்றி நாம் ஆச்சரியப்படுவதற்கொன்றுமில்லை. நாட்டில் ஒரு பொருளாதார மாற்றம் அல்லது பொருளாதாரப் புரட்சி ஏற்படுகின்ற பொழுது, கண்டிப்பாக விலை உயரத்தான் செய்யும். அதுவும் திட்டங்களின் அடிப்படையில் செயல்படும்பொழுது, நாட்டில் மக்களுடைய காங்களில், திட்டங்

24th April 1962] [Sri G. Venkataraman]

களுக்காகச் செலவழிக்கப்படும் பல கோடிக்கணக்கான ரூபாய் போய் சேருகின்றது. இதன் காரணமாக அவர்களின் வாங்கும் சக்தி உயருகிறது. இதற்கு விலைவாசி ஓரளவில் அடிகோலுகிறது. வாங்குகின்ற சக்தி அதிகமாகிற அளவுக்குப் பொருள்களும் பெருகிக் கொண்டேயிருக்கிறது. ஆகவே இன்றைக்கு உற்பத்தித் துறையில் பல்வேறு திட்டங்களின் மூலம் நாட்டில் மக்களிடையே வாங்கும் சக்தி பெருகியிருக்கிறது என்பதை நாம் உறுதியாகக் கூற முடியும். நாட்டில் விவசாயத்திற்கு வேண்டிய கருவிகள், ரசாயனத் துறையிலுள்ள பொருட்கள், கைத்தறிப் பொருட்கள் இவைகள் எல்லாம் அதிகமாகப் பெருகியிருக்கின்றன. இதன் காரணமாக மக்களிடத்திலே வாங்கும் சக்தி பெருகியிருக்கின்றது. இதற்குக் காரணமாக இருப்பது, பஞ்சாயத்துத் திட்டங்களின் மூலமாகவும், பல்வேறுப்பட்ட அதிகாரங்கள் பஞ்சாயத்துக்களின் கையில் வந்திருப்பதாலும், பல அணைக்கட்டுத் திட்டங்களின் மூலமாகவும், நாட்டில் பொதுவான வளம் பெருகி நாட்டு மக்களின் கையில் பணம் பெருகி வாங்கும்சக்தி அதிகமாகியிருக்கிறது என்பதை நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது. மக்களின் கையில் வருகிற பணம் பணக்காரர்களின் கையில் மட்டும்போய் சேர்ந்து விட்டால், வாங்கும் சக்தி பெருகிவிடாது. அது சாதாரண மக்களிடத்தில் வந்து அதன் மூலம் மார்க்கெட்டில் போய்ப் பல பொருட்களை வாங்கும்போதுதான் வாங்கும் சக்தி அதிகமாகின்றது. நாட்டிலுள்ள உழைப்பாளிகளிடத்தில், பாட்டாளி மக்களிடத்தில் பணம் கையில் வரும்போது, அவர்கள் கடைக்குப் போய் தங்களுக்குத் தேவைப்படுகிற பல பொருட்களை, தாங்களே நாடிச் சென்று வாங்குகிறார்கள். இம்மாதிரி பல பொருட்கள் தேவைப்படும்பொழுது அவைகள் பற்றாக்குறையாக இருந்தால், அவற்றினுடைய விலைகள் உயருகின்றன. ஆகவே பற்றாக் குறையைப் போக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் தான் பல திட்டங்களின் அடிப்படையில் நாம் செயலாற்றி வருகிறோம்.

அடுத்தபடியாக, பஞ்சாயத்து யூனியனுக்கு அதிகமான அளவில் அதிகாரங்கள் இல்லை என்று குறிப்பிட்டதைப் பார்த்து நான் மிகவும் வருந்துகிறேன். இன்றைக்கு பெரும் பெரும் அதிகாரங்கள் பஞ்சாயத்து யூனியன் தலைவர்களுக்கு அளிக்கப் பட்டிருக்கிறது. அதிகாரத்தைப் பரவலாக மாற்றி அமைக்க வேண்டும் என்ற அடிப்படையில் பல திட்டங்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏதாவது ஒரு வேலை பஞ்சாயத்தின் கீழ் நடத்தவேண்டும் என்றால், அந்த வேலையின் செலவுக்கான தொகையில் பத்தில் ஒரு பங்கு தொகை வசூல் செய்து கொடுத் தால், பாக்கி ஒன்பது பங்கு தொகையை அரசாங்கம் கடனாகக் கொடுத்துத் திட்டத்தை நடத்துவதற்கு வேண்டிய வழிவகைகளை செய்திருக்கின்றது. இன்டஸ்டிரியல் கோவாப்ரேடிவ் திட்டத்தின் மூலம் பல குடிசைத் தொழில்களையும் அங்கீகரித்து, சமுதாயத் திற்கு வேண்டிய வேலைகளைச் செய்வதற்கு வழிவகை செய்வதற் காகத்தான் திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன என்பதைத் தான் கவர்னர் பெருமான் அவர்கள் தனது உரையில் குறிப்பிட் டிருக்கிறார்கள். மேலும் முக்கியமாக நாம் பேசுகின்ற புஞ்சை

[Sri G. Venkataraman] [24th April 1962

திட்டங்கள் எல்லாம் முன்னேறவேண்டும் என்றால், மக்கள் இதற்குப் போதுமான ஒத்துழைப்புத் தரவேண்டும், மக்கள் மட்டு மல்ல, அதிகாரவர்க்கத்தினருடைய ஒத்துழைப்பும் தேவையாக இருக்கிறது. தொழில் பெருகவேண்டும் என்று சொல்லும்போது, நாம் உற்பத்தி செய்கின்ற பல்வேறு பண்டங்களையும் நாம் விற்பனை செய்யவேண்டிய நிலையிலிருக்கிறோம். இவைகளை விற்பனை செய் கின்ற நேரத்தில் நாம் பலவிதமான முறைகளை அனுசரிக்க வேண்டியிருக்கிறது. இதற்கு வேண்டிய "ஸி" பாரங்களைப் பெறு வதற்கு முயற்சிக்கும்போது, சிறிய தவறுகள் இருந்தாலும்கூட, அவைகளை எல்லாம் பொருட்படுத்தக் கூடாது என்று பல உத்தரவு கள் இருந்தும்கூட, சிறிய தவறுகளுக்காக எல்லாம் பல வியாபா ரப் பெருமக்கள் பல இடைஞ்சல்களுக்கும், பல இடையூறுகளுக் கும் ஆளாகவேண்டியவர்களாக இருக்கிறார்கள். அதோடு பல டெக்னிக்கல் குறைபாடுகளைக் காட்டி மறுத்துவிடுவதின் காரணமா கக் காலதாமதம் ஏற்படுகின்றது. இவைகளை எல்லாம் போக்கு வதற்கும் கவனம் எடுத்துக் கொள்ளவேண்டும் என்று வலியுறுத்த விரும்புகிறேன். நாம் போடுகின்ற பல சட்டங்கள், திட்டங்கள் இவைகள் எல்லாம் நிறைவேறவேண்டும் என்றால், பொருளாதார ரீதியாக, சமுதாய ரீதியாக, நல்லமுறையில் நிறைவேற்றுவதற்கு முயற்சி எடுத்துக்கொண்டால்தான், வரவேற்கத்தக்கதாக அமை யும். ஜனநாயக அமைப்பில் எதிர்க்கட்சிகள் பல குற்றம் குறை களை எடுத்துக் காட்டவேண்டியதுதான். ஆனால் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு, அரசியல் கண்ணோட்டத்தோடு, பிற கட்சிகளின் மீது வேண்டுமென்றே குறைகளைச் சொல்லவேண்டும் என்ற எண்ணத்தில் பலவிதமான குறைகளையும் சொல்லிக் கொண்டிருப்பது சரியல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். கவர்னர் பெருமான் அவர்களது உரையில், விவசாயத் துறையில் முன்னேற்றம் ஏற்பட்டிருப்பதைப் பற்றியும், மின்துறையில் முன் னேற்றம் ஏற்பட்டிருப்பதைப் பற்றியும், பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்பட்டிருப்பதைப்பற்றியும், பஞ்சாயத்துக்களின் மூலம் பல் வேறு திட்டங்கள் வெற்றிகரமாக நடந்தேறிவருவதைப்பற்றியும் குறிப்பிட்டிருப்பதை வரவேற்று, அதற்கு நன்றி தெரிவித்து என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri M. V. KARIVENGADAM**: கனம் துணைத் தலைவர் அவர்களே, கவர்னர்பெருமான் அவர்களது உரையை ஆளும் கட்சியிலுள்ள அங்கத்தினர்கள் பலர் வரவேற்று பேசினார்கள். எனக்கு முன்பு பேசிய எதிர்க்கட்சி அங்கத்தினர் திரு. கருணாநிதி அவர்கள் கூறியது போன்று இந்த உரையில் காணுகின்ற குறைகளை எடுத்துச் சொல்ல நாங்கள் கடமைப்பட்டிருக்கிறோம். "இடிப்பாரை இல்லாத ஏமாரா மன்னன்—கெடுப்பார் இலானும் கெடும்," என்ற வள்ளுவரின் பொன்மொழிக்கு ஏற்ப இந்த ஆளும் கட்சியினர் ஏமாறாதவர்கள், கெடுப்பவர்கள் இல்லாதவர் கள் என்றிருந்தாலும் கூட, இடிப்பார் இல்லாத காரணத்தினால் கெடும் என்கிற ரீதியில் கவர்னர் பெருமான் அவர்கள் உரையில் சொல்லப்படாத ஒருசில விஷயங்களை நான் எடுத்துச் சொல்ல

24th April 1962] [Sri M. V. Karivengadam]

விரும்புகிறேன். கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையில் அரிஜனங்களுடைய முன்னேற்றத்தைப் பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. அதே போன்று தமிழ்நாட்டில் பருவ மழை காரணமாகப் பாதிக்கப்பட்ட பிரதேசங்களில் எடுக்கப்படவேண்டிய நடவடிக்கைகள் இவை இவை என்று எதையும் குறிப்பிடவில்லை. அடுத்தாற்போல் நெசவுத் தொழிலைப் பற்றியோ நெசவுத் தொழிலாளர்களைப் பற்றியோ எதுவும் குறிப்பிடப்படவில்லை. "செய்யும் தொழிலெல்லாம் சீர்தூக்கிப் பார்க்கின் நெய்யும் தொழிலுக்கு நிகரில்லை கண்டீர்" என்ற வாக்குப்படி, சீரும் சிறப்புமாக இருந்த நெசவுத் தொழில் இன்று நசிந்து வருகிறது. இதை ஆளும் கட்சி அங்கத்தினர்களும் ஒத்துக் கொள்வார்கள் என்று நம்புகிறேன். அத்தகைய தொழிலுக்கு இன்று என்ன பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது? அந்தத் தொழில் முன்னேற எந்தெந்த விதத்தில் நடவடிக்கைகள் எடுக்கப்பட இருக்கின்றன என்பதைக் கவர்னர் பெருமான் அவர்களது உரையில் எதுவும் குறிப்பிடப்படவில்லை.

அடுத்தாற்போல், விலைவாசிகள் எல்லாம் விஷம் போல் உயர்ந்திருக்கிறது. இதை ஆளும் கட்சியினரும் ஓரளவுக்கு ஒப்புக் கொண்டாலும் கூட, அதைக் கட்டுப்படுத்துவதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட இருக்கின்றன என்பதைப் பற்றி கவர்னர் அவர்களது உரையில் ஒன்றும் குறிப்பிடப்படவில்லை. சேலத்திலுள்ள இரும்புக் கனியைப்பற்றியுள்ள செய்தி, இங்குள்ள கனம் அங்கத்தினர் அவர்கள் கூறியது போன்று, மாம்பழத்தை விட அதிக ருசியுள்ளதாக இருக்கிறது. இதைப்பற்றி கவர்னர் அவர்களது உரையில் பார்க்கும்போது, அண்மையில் இது ஏற்படுத்தப்படும் என்று தெரியவில்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட கால முடிவிலாவது இது ஏற்படுத்தப்படுமா என்பதைப் பார்த்தால் அதுவும் கவர்னர் பெருமான் அவர்களது உரையில் குறிப்பிடப்படவில்லை. ஆனால் இதிலிருக்கிற வாசகங்களைப் பார்க்கும்போது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள்ளாவது ஏற்படுத்தப்படுமா என்பது சந்தேகமாகவே இருக்கிறது. அதோடு மட்டுமல்ல, இந்த மா மன்றத்தின் முன்னாள் நிதி அமைச்சராக இருந்தவரும், இப்போதைய மத்திய அரசாங்க கனரகத் தொழில் அமைச்சராக இருக்கின்ற திரு. சுப்பிரமணியம் அவர்கள் பத்திரிகை நிருபர்களிடம் பேசுகின்ற நேரத்தில் சீக்கிரமாகவே சேலத்தில் இரும்புத் தொழிற்சாலை ஏற்படுத்தப்படும் என்கின்ற முறையில் பேசியிருக்கின்றார்கள். ஆனால் கவர்னர் பெருமான் அவர்களது உரையைப் பார்க்கின்ற நேரத்தில் இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவுக்குள் இதற்கான ஆரம்ப வேலைகள் துவக்கப்படலாம் என்கின்ற முறையில்தான் வாசகங்கள் அமைந்திருக்கின்றன. அப்படி அமைந்திருக்கிற காரணத்தினால், சேலத்து மாங்கனியை ருசிப்பது போல எனக்கு முன் பேசிய அங்கத்தினர் வரவேற்றிருந்தாலும் கூட, உடனடியாகச் சேலத்தில் உருக்காலை ஆரம்பிக்கப்படுமா என்று தெரிவிக்கப்படவில்லை. கவர்னர் உரையிலே சேலத்து இரும்பு பரிசோதனைக்காக ஜெர்மனி,

[Sri M. V. Karivengadam], [24th April 1962

நார்வே ஆகிய நாடுகளுக்கும், ஜாம்ஷெட்பூருக்கும் அனுப்பப்பட்டுள்ளன. அப்படி அனுப்பப்பட்டதிலிருந்து, அவர்கள் ஆராய்ச்சி செய்ததிலிருந்து ஆராய்ச்சியின் முடிவுகள்—பலன்கள்—வரவேற்கத்தக்கதாக இருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அப்படி குறிப்பிட்டிருக்கும் நேரத்திலே சேலத்திலே இரும்புத் தொழிற்சாலை ஏற்படுத்துவதிலே எந்தெந்த தேதியிலே எந்தெந்த வேலை துவங்கப்படும் என்று கவர்னர் அவர்கள் குறிப்பிட்டிருக்க வேண்டும். அப்படிக் குறிப்பிடத் தவறிவிட்டார் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகின்றேன்.

அடுத்தாற்போல, ஏற்கனவே மத்திய அரசு, இன்றைய செய்தித் தாளில் பார்த்தால், துணி வரி உயர்வால், தீப்பெட்டி வரி உயர்வால் சுமார் 71 கோடி ரூபாய்க்குப் புதுவரிகளை விதித்திருக்கிறது. கவர்னர் உரையிலே ஏறக்குறைய நடைமுறை ஆண்டுக்கு 55 கோடி என்பது 60 கோடி வரை செலவு ஆகலாம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அப்படிச் சொல்லியிருப்பது உண்மையிலேயே புது வரிகள் போடப்படுவதற்கு மணி ஓசை அடிப்பது போல இருக்கிறது. ஜூன் மாதத்தில் பொருளாதார மந்திரி அவர்கள் நிதி நிலை அறிக்கையைச் சமர்ப்பிக்கும் முன் கவர்னர் உரையைப் படித்துப் பார்க்கும்போது, புது வரிகள் போட இருக்கின்றது என்று கவர்னர் உரை அறிவிக்கிறது. வரிகள் இல்லாமல் ஆட்சி நடத்த முடியாது. எதிர்க் கட்சியிலுள்ள நாங்கள் இதை நிச்சயம் அறிவோம். அப்படி போடப்படுகிற வரிகள் ஏழை எளியவர்களைப் பாதிக்காது, பாமரர்களைப் பாதிக்காது, பாட்டாளி மக்களைப் பாதிக்காது இருக்கவேண்டுமே தவிர, பணக்காரர்களைப் பாதிக்கும் வரிகளாக இருக்கவேண்டும். அப்படிப் பார்க்கும் நேரத்தில் ஏற்கனவே மத்திய அரசு போட்டிருக்கும் வரிகள் அனைத்தும் ஏழை எளியவர்களைப் பாதிக்கும் வரிகளாக இருக்கும் காரணத்தினால், மாநில அரசு ஏழை எளியவர்களைப் பாதிக்கும் அளவில் போடக் கூடாது என்று நிதிநிலை அறிக்கையைத் தயாரிப்பதற்கு முன்னதாகவே கேட்டுக் கொள்ளுகிறேன். ஆக, இன்றைக்கு வரிகள் போடக் கூடாது; போட்டாலும் போடும் வரிகள் ஏழை எளியவர்களை பாதிக்கக் கூடாது, மேலும் போடக் கூடிய வரிகள் நேர்முக வரிகளாகவும், பணக்காரர்கள், முதலாளிகள் ஆகியவர்களைப் பாதிக்கும் வரிகளாக இருக்க வேண்டுமே தவிர ஏழை மக்களைக் கொஞ்சமும் பாதிக்கும் வதியாக இருக்கக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, விவசாயத் துறையில் துரிதமாக முன்னேறி விட்டோம் என்று சொல்லுகிறார்கள். அப்படித் துரிதமாக முன்னேறியிருந்தால், நம்முடைய உற்பத்தி நிச்சயமாகப் பெருகியிருந்தால், உண்மையிலேயே இப்போது விலைவாசி தாராளமாகக் குறைந்திருக்க வேண்டும். இன்றைக்கு விலைவாசியும் குறையவில்லையென்றால், உற்பத்தியும் பெருகிற்று என்று சொன்னால் பெருகிய உற்பத்தியை யாரோ அடக்கி ஒடுக்கி வைத்திருக்கிறார்கள் கிடங்குகளில் என்று பொருள்படுகிறது. அப்படிப் பார்க்கும் நேரத்தில் உற்பத்தி பெருகியிருக்கிறது என்பதை ஒத்துக்

24th April 1962] [Sri M. V. Karivengadam]

கொண்டால், உண்மையிலேயே விலைவாசி குறையாததற்குக் காரணம் ஒரு சிலர் ஏராளமாக உற்பத்தி செய்யப்பட்ட விவசாயப் பொருள்களைப் பதுக்கி வைத்திருக்கிறார்கள் என்பதை ஒத்துக் கொண்டாக வேண்டும். அப்படி ஒத்துக்கொண்டால் உண்மையிலேயே அத்தகைய பொருள்களைப் பதுக்கி வைத்திருப்பவர்கள் யார் யார் என்று கண்டுபிடித்து, நிர்வாக யந்திரத்தில் உள்ளவர்கள் அதைக் கண்டுபிடித்து நல்ல முறையில் விவசாயப் பொருள்கள் மக்களுக்கு விநியோகம் ஆகவேண்டிய செயல்களில் ஈடுபட வேண்டும். இந்த அரசு அதற்கான வேலைகளைச் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தாற்போல ஏற்கெனவே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு 291 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறது என்றாலும் கூட, ஏற்கெனவே இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் நாம் வஞ்சிக்கப்பட்டிருக்கிறோம் என்பதை இந்த மாமன்றத்தில் எங்கள் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் ஆதார பூர்வமாகப் புள்ளி விவரத்தோடு எடுத்துக் கூறிய நேரத்தில் இங்கே நிதி அமைச்சராக இருந்த கனம் திரு. சுப்பிரமணியம் அவர்கள் 10 ஆண்டு காலத்திற்குத் திராவிட நாட்டுப் பிரிவினையை ஒத்திவையுங்கள், கேட்கவேண்டியவைகளைக் கேட்டு பெறவேண்டியவைகளை பெறு விட்டால் நான்கூட பிரிவினையை ஆதரிக்கிறேன் என்ற முறையில் இந்த மாமன்றத்தில் குறிப்பிட்டிருக்கிறார்கள். இப்படி அவர்கள் குறிப்பிட்டதிலிருந்து சூசகமாக வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்பதை ஒத்துக்கொண்டார்கள் என்று சொல்லலாம். அப்படிச் சொல்லும் நேரத்தில், முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் நாம் வஞ்சிக்கப்பட்டோம் என்று ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களே, நடு நிலையில் உள்ளவர்கள் ஒத்துக்கொள்கிறார்கள். மத்திய அரசின் பங்காக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு நாம் வகுத்துள்ள திட்டத்திற்கு ஆகும் செலவு பூராவையும், அதாவது 291 கோடியையும் மத்திய அரசாங்கமே தரும் முறையில் வலியுறுத்தினால், 291 கோடி ரூபாயையும் அந்த முறையில் பெற்றால், புது வரிகளை மாநில அரசாங்கம் போடும் அவசியம் இருக்காது, ஏழை எளியவர்கள் பாதிக்கப்பட மாட்டார்கள் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தாற்போல, இந்த அமைச்சரவையைப் பொறுத்த வரையில் அமைச்சரவையினுடைய வேலைத் திட்டங்கள் என்ன, கொள்கைகள் என்ன, என்பதைப் பற்றி கவர்னர் பெருமான் அவர்கள், நிதி அமைச்சர் உரையிலே எதிர் பார்க்கலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். இந்த அமைச்சரவையின் கொள்கைகள், என்ன, வேலைத்திட்டங்கள் என்ன என்பதை அறிவதற்கு முன்னால் இந்த அமைச்சரவையை கவர்னர் பெருமான் பாராட்டியிருக்கிறார். துணிச்சலான அமைச்சரவை என்று கூறியிருக்கிறார்கள். அது மாத்திரமல்லாமல் அனுபவமும், இளமையின் துடிப்பும் உள்ள அமைச்சரவை என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். அவர்கள் பாராட்டுத் தெரிவித்ததைக் கண்டிக்கிறேன் என்று பொருள் அல்ல. அமைச்சரவை என்னென்ன கொள்கைகளை ஏற்படுத்திக்

கொண்டிருக்கிறது, என்னென்ன வேலைத் திட்டங்களை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது, அவைகளை எந்த முறையிலே நடைமுறையிலே செயல்படுத்துகிறார்கள் என்பதைப் பார்த்து பின்னால் வேண்டுமானால் பாராட்டினால் பொருந்துமே தவிர செயல்படுவதற்கு முன்னால், கொள்கைகளை விளக்குவதற்கு முன்னால், திட்டங்களைப் போடுவதற்கு முன்னால் பாராட்டுவது உண்மையிலேயே நல்லதல்ல. முன் பகுதியிலே அமைச்சரவையைப் பாராட்டி, பின் பகுதியிலே கொள்கைகள் திட்டங்கள் ஆகியவைகள் பற்றி நிதி அமைச்சர் கூறுவார் என்று எதிர்பார்க்கலாம் என்று சொல்லியிருப்பது உண்மையிலேயே அத்தகைய பாராட்டுதலுக்கு இந்த அமைச்சரவை உரிய அமைச்சரவையாக இருந்தாலும் கூட, என்ன செய்கிறார்கள் என்பதைப் பொறுத்திருந்து பார்த்து பாராட்டியிருக்கலாம், இவ்வளவு அவசரமாகப் பாராட்டியிருக்கக் கூடாது, பாராட்டுதலால் ஒரு சிலர் நிச்சயமாக நல்ல முறையில் பணியாற்றுகிறவர்கள்கூட ஓரளவுக்குத் தங்களுடைய பணிகளைக் குறைத்துக்கொள்ளலாம், ஆகையால் பொறுத்திருந்து பார்த்து அமைச்சரவையைப் பாராட்டியிருக்கலாம் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, கனம் அங்கத்தினர் ஒருவர் பேசும் நேரத்தில் எல்லா கிராமங்களிலும் ரோடுகள் போடப்பட்டுள்ளது, ரோடுகள் இல்லாத கிராமங்களே கிடையாது என்ற முறையில் பேசினார்கள். நான் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற பெண்ணாகரம் தொகுதியைப் பொறுத்த வரையில் 100-க்கு 75 கிராமங்களுக்கு ரோடு வசதி கிடையாது. அத்தகைய தொகுதி அது. அதுமட்டுமல்லாமல் அடுத்து உள்ள தர்மபுரித் தொகுதியில் 100 கிராமங்களுக்குக் கட்டை வண்டியில் செல்லக் கூட ரோடு வசதி கிடையாது. அத்தகைய கிராமங்கள் பல இருக்கின்றன என்று இந்த மாமன்றத்தில் வற்புறுத்திச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அதே நேரத்தில், நீர்ப்பாசனத் திட்டங்களைப் பற்றி கடந்த ஆண்டுகளுடைய விவாதங்களைப் பார்க்கும்போது பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் எல்லாம் முடிந்து விட்டன என்று பேசப்பட்டிருக்கிறது. பெண்ணாகரம் தொகுதியில் சின்னாறுத் திட்டத்தைப் பற்றி மக்கள் பல ஆண்டுகாலமாக வற்புறுத்தி வருகிறார்கள். சின்னாறுத் திட்டத்தை சிறு நீர்ப்பாசனத் திட்டமாக மாற்றிவிடக் கூடாது, பெரிய திட்டமாகப் போட்டு நிறைவேற்றவேண்டும். ஒரு சிலர் தங்கள் நிலம் பாதிக்கப்படுகிறது என்று புள்ளி விவரங்களை மறைத்துக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று உண்மையிலேயே மக்கள் பேசிக்கொள்கிறார்கள். இது ஆதாரமற்ற பேச்சு அல்ல. ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் நிச்சயமாக இதைப் பற்றி கவனிக்க வேண்டும். சேலம் மாவட்டத்தை எடுத்துக் கொண்டால் வாணியாற்றுத் திட்டம், தொப்பையாறுத் திட்டம், சின்னாறுத் திட்டம் ஆகிய பெரிய திட்டங்களெல்லாம் முடிந்துவிட்டன என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பெரிய நீர்த் தேக்கத் திட்டங்களையெல்லாம் நிறைவேற்றும் வகை

24th April 1962] [Sri M. V. Karivengadam]

யில் இந்த அரசு செயல்படவேண்டுமென்று கூறிக்கொண்டு, மேலும், புதிய வதிகள் போடாமல் இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri S. PONNUSAMY :** **கனம் உதவி சபாநாயகர் அவர்களே,** நேன்று இந்த மன்றத்தில் நடந்த கனம் கவர்னர் பெருமான் உரையில் நம்முடைய தேசத்தின் முன்னேற்றம், குறிப்பாக நம் தமிழ்நாடு எல்லாத் துறைகளிலேயும் வேகமாக முன்னேறிக் கொண்டு வருகிறது என்பதை எடுத்துக் காட்டாகக் கண்டிருக் கிறார்கள். அதை நான் வரவேற்று நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன். குறிப்பாக, தூத்துக்குடி துறைமுகத்தை எடுத்துக்கொண்டால், துறைமுக வேலைகள் ஆரம்பிக்கப்பட்டு, குறிப்பாக நமது தமிழ்நாட்டின் அமைச்சர்கள், உத்தியோகஸ்தர் கள் மூலமாக மிகத் துரிதமாக நடப்பதற்கு ஏற்பாடுகள் ஆரம்ப மாகி இருக்கிறது என்பதை நான் தெரிந்து கொள்ளும்போது மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். ஆகவே என்னுடைய மகிழ்ச்சியை மத்திய சர்க்காருக்கும், குறிப்பாக தமிழகத்தின் சர்க்காருக்கும் நான் சொல்லிக்கொள்வதோடு, அந்தத் திட்ட மானது இவ்வளவு சீக்கிரமாக வருவதற்கு மிகுந்த துணையாக இருந்து, ஆற்றலோடு காரியங்களைச் செய்த தமிழ் நாட்டின் கனம் முதல் மந்திரி அவர்களுக்கு எனது உளம்கனிந்த நன்றியை செலுத்திக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்தத் திட்டத்தின் மூலமாக அந்த நகரத்திலுள்ள பல பகுதிகளிலும், அதைச் சுற்றி யுள்ள மாவட்டங்களும் சிறப்படையப் போகின்றது என்பதையும் நாம் அறிவோம். அதே சந்தர்ப்பத்தில் தமிழ்நாட்டின் சர்க்கார் மிகுந்த முன் எச்சரிக்கையோடு நல்ல கருத்தோடு, நல்ல எண்ணத் தோடு இங்கே பல தொழில் அபிவிருத்திகளை நடத்துவதற்கு முன்வந்திருக்கிறார்கள் என்பதையும் நினைக்கும்போது நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். தொழில்கள் வளம் பெருகும் போது வேலை இல்லாத் திண்டாட்டம் நீங்குகிறது என்றுதான் அர்த்தம். குறிப்பாக, நமது கனம் கவர்னர் பெருமான் உரையிலே மீன் பிடிக்கும் தொழில் அதாவது (டீப் சீ பிஷ்ஷிங்) ஆழ்கடலில் மீன் பிடிக்கும் ஒரு திட்டத்தைப் பற்றியும் நமது சர்க்கார் ஜப்பானிய சர்க்காரோடு பேச்சுவார்த்தைகள் நடத்திக்கொண் டிருக்கிறார்கள் என்பதை அறிய நான் மிகவும் மகிழ்ச்சியடை கிறேன். ஆகவே இந்த உணவுப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக நமது சர்க்கார் எடுத்துக் கொள்ளும் முயற்சியிலே, இந்த மீன் பிடிக்கும் தொழிலில் அக்கறை காட்டுவது மிகமிக முக்கியம் வாய்ந்தது என்பதை நான் எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த உலகத்தை எடுத்துக் கொண்டால், பூமியின் பரப்பளவை விட ஜல பரப்பளவுதான் அதிகம் என்பதை நாம் ஒத்துக் கொள்ளச் செய்வோம். ஆகவே, பூமியில் கிடைக்கக்கூடிய பொருளைவிட விசேஷப் பொருள்கள் பூமியின் கீழும், சமுத்திரத் தின் அடியிலும் தான் அதிகமாக இருக்கிறது. ஆகவே, அந்தப் பொருள்களை எவ்வளவு அதிகமாக, வேகமாக, துரிதமாக எடுக் கிறோமோ, அதற்குத் தகுந்தபடி நம்முடைய பொருளாதாரம் பெருகும் என்பதிலே ஐயமில்லை. ஆகவே, மேல் நாட்டில் எந்த

[Sri S. Ponnusamy] [24th April 1962

தேசமாக இருந்தாலும்கூட, எல்லோரும் கடலில் இருக்கும் பொருளில் மிகவும் அக்கறை காட்டிக் கொண்டு வருகிறார்கள். ஆகவே, எங்களுடைய தூத்துக்குடி சம்பந்தப்பட்ட மட்டிலும் ஒரு காலத்தில் அதாவது பாண்டிய அரசாட்சி காலத்தில் உலகத்தி லேயே முதன் முதலாக இந்தத் துறைமுகத்திலேதான் முத்து எடுத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட விலை உயர்ந்த முத்துக்களை இத்தாலிய ராணிகூட வாங்கியிருக்கிறாள் என்று சரித்திரம் கூறுகிறது. ஆகவே, என்னுடைய ஆழ்ந்த கருத்து என்ன வென்றால் இதுபோன்ற இடங்களிலே சரியான நிபுணர்களை வைத்து, கடலில் என்னென்ன பொருள்கள் அதிகப்படியாக அகப்படுகிறது என்பதை நாம் கண்டுபிடித்து, அதற்கு வேண்டிய ஆயத்தங்கள் செய்தால், அதில் கிடைக்கும் பொருள்கள் அந்நிய நாட்டுக்கு ஏற்றுமதி ஆகும்போது, அந்நிய செலவாணி நமக்கு மிச்சப்படுகிறது. ஆகவே, நம்முடைய பொருளாதாரம் உயர் வடைகின்றது. குறிப்பாக, நம் நாட்டிலே ஏறக்குறைய 3,500 மைலுக்கு அதிகமாக கடல் ஓரங்கள் இருக்கின்றது. அந்த கட லோரங்களில் வசிக்கும் மக்கள் எல்லாம் குறிப்பாக மீன் பிடிக்கும் தொழிலிலே ஈடுபட்டிருப்பவர்கள் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே, இந்தத் திட்டத்தை விரிவான முறையிலே, அவர்களுடைய குறைகளைப் போக்கக்கூடிய முறை யிலே இந்தத் திட்டத்தை அமுல் நடத்துவதற்கு நமது சர்க்கார் வழிவகை செய்வர் என்ற பரிபூரண நம்பிக்கையோடு கேட்டுக் கொண்டு, இன்னும் அணுசக்தி நிலையம் நம் மாநிலத்திற்கு ஏற்படும் என்பதற்கு என்னுடைய சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டு, அப்படிப்பட்ட அணுசக்தி நிலையம் வந்தாகவேண்டும் என்ற முறையிலே அதற்கான கண்காணிப்பு செய்து, அப்படி ஒரு அணுசக்தி நிலையம் தமிழ்நாட்டில் ஏற்படுமானால், நமது மின் சாரக் குறைபாடு நீங்கும். அப்போது நாம் இன்னும் எல்லாத் துறையிலும், தொழில் துறையிலும் விவசாயத் துறையிலும் இன்னும் பொருளாதார வளர்ச்சி சம்பந்தமான எல்லாத் துறை யிலும் நாம் மேம்பாடு அடைய முடியும் என்பதை நான் சொல்லிக் கொண்டு, குறிப்பாகத் கல்வித் துறையிலும், தொழில் துறை யிலும் இன்னும் எல்லாத் துறைகளிலும் நம்முடைய தமிழ்நாடு முன்னேறிக் கொண்டு வருகிறது என்பதை நினைக்கும்போது நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

அதோடுகூட, சட்ட சம்பந்தமாக எனது மதிப்பிற்குரிய எதிர்க் கட்சி நண்பர்கள் நன்கு தெரிந்திருந்தும், நேற்று வராமல் இருந்துவிட்டு, இன்று சட்டத்தின்படி தங்கள் உரிமையைக் கேட்கிறார்கள் என்பதை நினைக்கும்போது என்னுடைய மனம் மிகவும் வருத்தமடைகிறது என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். ஆகவே, குறிப்பாக, இந்த நாட்டை முன்னேற்ற மடையச் செய்ய எந்தக் கட்சியாக இருந்தாலும்கூட, நாட்டின் ஏழ்மையைப் போக்க ஏகோபித்த முறையில் குறைகளை சொல்லும் பொழுது, சர்க்கார் செய்யக்கூடிய நன்மைகளைச் சொல்லிக் கொண்டு அதேசமயத்தில் சர்க்காரோடு உற்ற துணைவர்களாக

24th April 1962] [Sri S. Ponnusamy]

இருந்தால், அது நாடு வளர்ச்சியடையவும், மக்கள் வளர்ச்சியடையவும் துணையாக இருக்கும் என்பதை நான் சொல்லிக் கொண்டு, எனக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் பேசுவதற்கு வாய்ப்புக் கொடுத்தமைக்கு எனது மகிழ்ச்சியையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன். வணக்கம்.

* **Sri A. K. SUBBIAH :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நேற்றையத் தினம் கவர்னர் பெருமான் அவர்கள் நிகழ்த்திய உரையைக் கேட்ட பிறகும், அவர்களால் கொடுக்கப்பட்டிருக்கக் கூடிய குறிப்பைப் படித்த பிறகும், தமிழகத்திலே மக்கள் தேர்தல் முடிந்தவுடனே என்ன எதிர்பார்த்தார்களோ அப்படியில்லாமல், அந்த மக்களை ஏமாற்றக்கூடிய முறையிலே அவருடைய பிரசங்கம் அமைந்திருக்கிறது என்பதைத்தான் நான் பார்க்க முடிகிறது. இன்றையத் தினம் விலைவாசி உயர்வால் அன்றாடம் வாங்கி உபயோகிக்கக்கூடிய சர்வ சாதாரண மக்கள் பெரிய அளவுக்குப் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. இம்மாதிரியான உண்மையை கவர்னர் அவர்களுக்கு அமைச்சர் பொறுப்பிலே இருக்கக்கூடியவர்கள் நாட்டிலே விலைவாசி உயர்வால் சாதாரண மக்கள் எந்த அளவுக்கு பாதிக்கப்படுகிறார்கள் என்பதை சொல்வதற்குத் தவறி இருக்கிறார்கள் என்றுதான் நான் கருத வேண்டியிருக்கிறது. காரணம் என்னவென்று சொன்னால் அமைச்சர்கள் கூறுகிறார்கள் விலைவாசி உயர்வால் சாதாரண ஜனங்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிறது. விவசாயிகள் பெரிய அளவுக்கு ஆதாயம் அடைந்து கொண்டு வருகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. அவர்களுடைய கருத்துப் பிரகாரம் பார்த்தோமானால், விவசாயிகள் என்று சொல்லப்படுகிறவர்கள் உணவு தானியத்தைச் சேமித்து வைத்திருந்து அதிக லாபத்திற்கு விற்று ஆதாயம் அடையக்கூடியவர்களைத்தான் விவசாயிகள் என்று கருதுகிறார்கள் போலும். இன்றையத் தினம் வாங்கி உபயோகப்படுத்தக் கூடியவர்கள் உழவுத் தொழிலிலே ஈடுபட்டிருக்கக்கூடிய உழவர்கள் தங்களுடைய தானியங்களை யெல்லாம் உழவுத் தொழில் செய்வதற்காக, கடன் வாங்கி, அந்தக் கடனைத் திருப்பிக் கொடுப்பதற்கு அறுவடை முடிந்தவுடனே அந்தக் கடன்காரர்களுக்கு, லேவாதேவிக்காரர்களுக்கு கொடுக்கக்கூடிய நிலை ஏற்படுகிறது. அந்தச் சமயத்திலேதான் விவசாயிகளுடைய நில வரியை வசூல் செய்வதற்கு கிராம அதிகாரிகள் கிட்டியைக் காட்டி வசூல் செய்வதற்கு முயல்வார்கள். அந்த நிலையிலே தங்களுடைய விவசாய உற்பத்தி பண்டங்கள் அனைத்தையும் விற்க முற்படும் போது விலை பெரும் அளவுக்கு வீழ்ச்சி ஏற்பட்டிருக்கும். அவர்கள் விற்று முடிந்த பிறகு, மறுபடியும் விலை ஏறிவிடும். அவர்களுக்குத் தேவையான காலத்தில் தேவையான சமயத்தில் உணவுப் பொருள் வாங்கும் போதெல்லாம் விலைவாசி உயர்ந்து போய் விடும். குறைந்த விலையிலே வாங்கிப் பண்டங்களைச் சேமித்து வைக்கக்கூடிய முதலாளிகளாக இருக்கிற பெரிய வியாபாரிகள் ஆதாயம் சம்பாதிப்பதற்கு வேண்டி, அந்த வியாபாரிகளுக்கு எல்லாம் பாதுகாப்பு அளிப்பதற்கு வேண்டி, பல துறை

[Sri A. K. Subbiah] [24th April 1962

களிலே அரசாங்கம் அவர்களுக்கு கடன்கள் கொடுத்து உதவு கிருர்கள். இம்மாதிரி வர்த்தகச் சூதாடிகளின் ஆதாயத்தைப் பெருக்கும்படியான அளவுக்கு நிலைமை அமைந்திருக்கிறது என்பதை இந்தச் சபையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, நாட்டில் நடந்த தேர்தலைப்பற்றி சில விஷயங்களைக் குறிப்பிட ஆசைப்படுகிறேன். இந்த தேர்தலில் நாம் கவனித்துப் பார்த்தால் பெரிய அளவுக்கு ஜாதியின் பெயர் பயன் படுத்தப்பட்டிருக்கிறது. அமைச்சர்களே தங்கள் ஜாதியைச் சொல்லி, தங்கள் ஜாதியினர் எங்கெல்லாம் இருக்கிருர்களோ அங்கெல்லாம் சென்று, 'நான் ஆளும் கட்சியிலே இருக்கிறேன். அமைச்சராக இருக்கிறேன். ஆகவே நான் இருக்கக்கூடிய காங் கிரஸ் கட்சிக்கு நீங்கள் வாக்கு அளிக்கவேண்டும்' என்று கேட்டுக் கொண்டார்கள். உதாரணமாக, என்னுடைய தொகுதியில் திருத் துறைப் பூண்டிக்கு விஜயம் செய்த ஹரிஜன அமைச்சர் கக்கன் அவர்கள் அப்படித்தான் தன்னுடைய ஜாதியின் பெயரைச் சொல்லி காங்கிரஸ் கட்சிக்கு வாக்களிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

THE HON. SRI P. KAKKAN : உதவி சபாநாயகர் அவர்களே, திருத்துறைப்பூண்டித் தொகுதியிலே தேர்தல் பிரசாரம் செய்த போது, ஹரிஜன சமுதாயத்திற்குக் காங்கிரஸ் அரசு உதவி செய் திருக்கிறது, ஆகவே அதற்கு வோட்டுப் போடவேண்டும் என்று தான் சொன்னேனே தவிர, ஜாதியின் பெயரைச் சொல்லி வோட்டுப் போடவேண்டும் என்று கேட்கவில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

SRI A. K. SUBBIAH : தொழில் அமைச்சர் திருத்துறைப்பூண்டி நகரத்திற்கு வந்து வோட்டு சேகரித்தார்கள். அங்கு இருக்கக்கூடிய பிராமணர்கள் காங்கிரஸுக்கு வோட்டு அளிக்கக் கூடாது என்று தீர்மானித்திருந்தார்கள் ராஜகோபாலாச்சாரியார் அவர்களின் ஆணைக்கு உட்பட்டு. தொழில் அமைச்சர் அவர்கள் அங்கே விரைந்து வந்து, 'நான் பிராமண சமூகத்தைச் சேர்ந்தவன். நம்முடைய சமூகத்தை பாதுகாப்பது காங்கிரஸ் அரசாங்கம் தான், ஆகவே அதற்கு நீங்கள் வாக்கு அளிக்கவேண்டும்' என்று வீடு வீடாகச் சென்று பிரசாரம் செய்து வோட்டு சேகரம் செய் தார்கள். இம்மாதிரி தங்களுக்கு இருக்கக்கூடிய அதிகாரத்தை யெல்லாம் துஷ்பிரயோகம் செய்யக்கூடிய அளவிலே அமைச்சர் களே பிரசாரம் செய்திருக்கிருர்கள் என்று சொன்னால், அதிகாரி கள் செய்வதற்கு கேட்கவேண்டியதே கிடையாது. அதுபோலதான் வேதாரண்யம் தொகுதியில், எங்கெல்லாம் மாற்றுக் கட்சிகள் தங்க ளுடைய கொடிகளை ஏற்றியிருந்தார்களோ, அவைகளை இறக்கி விட்டு, தங்கள் கட்சிக் கொடியை ஏற்றினர்கள். உதாரணமாக, பல கிராமங்களில் திராவிட முன்னேற்றக் கழகத்தினருடைய கொடிகளையெல்லாம் அகற்றினர்கள். இம்மாதிரி அசம்பாவிதமான சம்பவங்களையெல்லாம் அதிகாரிகள் கவனத்திற்குக் கொண்டு சென்றும், அதிகாரிகள் நடவடிக்கை எடுப்பது கிடையாது.

இன்னொரு கிராமத்தில், கருப்பம்பலம் என்ற இடத்தில் காங்கிரஸ்காரர்களுக்கு வாக்கு இல்லை, காங்கிரஸை நேசிக்கவில்லை என்ற காரணத்தினால், அங்குள்ள விவசாயக் குடும்பங்கள் புகையிலை சாகுபடி செய்திருந்ததை இரவோடு இரவாக அழித்து நாசம் செய்துவிட்டார்கள். இம்மாதிரி பலவிதமான தகாத வேலைகளைச் செய்து இந்தத் தேர்தலில் பல நண்பர்கள் வெற்றி பெற்றிருக்கிறார்கள் என்பதையும் நான் இந்தச் சபையின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

தீவிர சாகுபடி திட்டத்தைப் பற்றி அமைச்சருடைய கவனத்திற்கு சில விஷயங்களைக் கொண்டு வர விரும்புகிறேன். தீவிர சாகுபடித் திட்டம் தஞ்சை ஜில்லா முழுவதற்கும் விஸ்தரிக்கப்படுவது மகிழ்ச்சிக்குரிய விஷயம் தான். ஆனால், அதிலே சில தேக்கங்கள், சிரமங்கள் இருக்கின்றன. காரணம் என்ன என்று சொன்னால், தீவிர சாகுபடித் திட்டத்தின்கீழ் நிலங்களை சாகுபடி செய்யக்கூடியவர்களுக்கு கடன் கொடுக்கப்படுகிறது, ரசாயன உரமும் கொடுக்கப்படுகிறது. ஆனால் அவர்களுக்கு காலாகாலத்தில் அந்தக் கடன்கள் கிடைப்பது கிடையாது. அதேமாதிரி காலாகாலத்தில் ரசாயன உரம் கிடைப்பது கிடையாது. காலாகாலத்தில் ரசாயன உரம் விநியோகிக்கப்படுவதில்லை. இன்னொரு கஷ்டம் என்னவென்று சொன்னால், அந்த நிலத்தைச் சாகுபடி செய்துகொண்டிருப்பவர்கள் பேரில் அந்த நிலம் பதிவு செய்யப்பட்டிருக்கவில்லை. அந்த நிலத்திற்குச் சொந்தக்காரர்கள் சென்னையிலோ அல்லது வேறு இதர நகரத்திலோ இருந்து கொண்டிருப்பார்கள். அவர்கள் சொந்த சாகுபடி செய்கிறார்கள் என்று அங்கு இருக்கக்கூடிய கிராம அதிகாரிகள் பதிவு செய்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே, அந்த நிலங்கள் அப்படிச் சாகுபடி செய்து கொண்டிருக்கும் உழவர்கள் பேரில் பதிவு செய்யப்பட்டிருக்காது. அதனால் அவர்கள் கடன் வாங்க முடியாத நிலைமை ஏற்படுகிறது. கிராம சேவக்குகள் பலதரம் முயற்சி செய்து, அதற்கு வேண்டிய புள்ளிவிவரங்கள் சேகரிப்பது மிகவும் கஷ்டமான நிலையில் இருந்துகொண்டிருக்கிறது. அதைப் போக்குவதற்கு தீவிரமான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சென்ற ஆண்டு பெரிய மழையின் காரணமாக, தஞ்சை, திருச்சி போன்ற ஜில்லாக்களில் பல கிராமங்களில் வெள்ளத்தினால் சேதம் விளைந்திருக்கிறது. அதனால் அந்தக் கிராமங்களில் நல்ல முறையில் விளைச்சல் இல்லாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதெல்லாம் எல்லோரும் அறிந்த விஷயம். அந்தக் கிராமங்களில் எல்லாம் இன்றையதினம் மக்கள் வரி கொடுக்க வேண்டிய நிலைமை இருக்கிறது. அங்கெல்லாம் நெல்லே விளையவில்லை, நிலம் மேடிட்டுப் போய் கிடக்கிறது. அந்தக் கிராமங்களில் வரியைக் குறைத்தும் வசூல் செய்யவேண்டும். வரி முழுவதையும் கட்டவேண்டும் என்று இப்பொழுது நிர்ப்பந்தம் செய்துகொண்டிருப்பதை தடை செய்யவேண்டும் மேலும் பஞ்சா

[Sri A. K. Subbiah] [24th April 1962

யத்து யூனியனில் ரூபாய்க்கு 25 நயாபைசா வரியை அதிகப்படுத்தி இருக்கிறார்கள். இதையும் சபையின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன்.

தரிசு புறம்போக்குத் திட்டத்தைப் பற்றி கவர்னர் அவர்களுடைய உரையில் குறிப்பிடப்படவில்லை. தரிசு புறம்போக்குத் திட்டத்தை எடுத்துக் கொள்வதினாலேயே விவசாயக் கூலிகளாக இருக்கக் கூடிய, ஏழை எளியவர்களிடத்திலே ஏற்பட்டிருக்கக்கூடிய வேலை யில்லாத் திண்டாட்டத்தைப் போக்க முடியும். லட்சக்கணக்கான விவசாயக் கூலிகள் இன்றையதினம் வேலையில்லாத நிலைமையில் இருந்துகொண்டிருக்கிறார்கள், வேலை தேடி அலையக்கூடிய நிலையில் இருக்கிறார்கள். மேலும் அவர்களுக்கு வேலை உத்திரவாதமும் கிடையாது. வேலை செய்வதற்கு போதுமான கூலியும் கிடையாது. கூலி உத்திரவாதமும் கிடையாது. அவர்கள் இம்மாதிரி நிலையிலே இருந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் தரிசு புறம் போக்கு நில விநியோக திட்டத்தை அரசாங்கம் கொண்டுவந்தால் தான், விவசாயத் தொழிலாளர்களுக்கு போதிய பாதுகாப்பு கிடைக்கும். அவர்களும் வாழ்க்கையிலே உயர்வதற்கு வேண்டிய ஏற்பாடு செய்ய முடியும். ஆகவேதான், நான் இதைப்பற்றி இங்கே குறிப்பிடுகிறேன். இம்மாதிரி இன்னும் சில குறைபாடுகள் இருக்கின்றன. குடியிருப்பு மனைக்கட்டு பாதுகாப்புச் சட்டம் கொண்டு வந்தார்கள். ஆனால், அதை அமுலாக்க போதுமான விதிகள் இயற்றப்படவில்லை. ஆகவே, மனைகளின் சொந்தக் காரர்கள் கோர்ட்டுக்குச் சென்று, குடியிருப்பு மனைகளிலிருந்து விவசாயிகளை வெளியேற்ற நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக் கிறார்கள். ஆயிரக்கணக்கானவர்கள் குடியிருப்பு மனைகளி லிருந்து வெளியேற்றப்படுகிறார்கள். இந்த நிலைமை சபையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இதைத் தடுப்பதற்கு உடனே விதிகளை இயற்றி, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் துரிதமாக நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று சர்க்காரை கேட்டுக்கொண்டு நான் என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* **SRIMATHI C. KOLANDAIAMMAL :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நேற்று கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரைக்கு நன்றி தெரிவிக்கும் முறையில் ஒரு சில கருத்துக்களை நானும் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்திலே தமிழ்நாட்டிலே ஏற்பட்டிருக்கக் கூடிய பெரிய சிறிய தொழிற்சாலைகளெல்லாம் வெற்றிகரமாக நடைபெறுவதற்கு மின்சாரம் மிக இன்றியமையாதது. அந்த மின்சாரத்தின் தீவிர உற்பத்தி பகுதிகளாக, குந்தா திட்ட இறுதி கட்ட வேலையும், மேட்டூர் சுரங்க திட்டவேலையும் துரிதமாக முன் னேற்றம் அடைந்து வருகின்றன என்பதைப்பற்றி கவர்னர் பெருமான் அவர்கள் மிக அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறார் கள். அதோடுகூட, இந்த ஆண்டிலே மின்சார வெட்டு ஏற்படாமல் இருப்பது சிறப்பாக கோவை ஜில்லாவைச் சேர்ந்து இருக்கக்கூடிய விவசாயப் பெருங்குடி மக்களுக்கும், தொழிலாளிகளுக்கும், சிறிய, பெரிய தொழிற்சாலைகளை இயக்கி வருபவர்களுக்கும் பெரிய

24th April 1962] [Srimathi C. Kolandaiammal]

மகிழ்ச்சிக்குரிய ஒரு செய்தியாகும். காரணம் என்னவென்ருல், மின்சார வெட்டு காலத்தில், குறைந்தது இரண்டு மாதம் ஒரு மாத காலத்திற்கு அவர்கள் பெரிய அவஸ்தைக்கு உள்ளாகியிருக் கிருர்கள். அதற்காக நான் அமைச்சர் அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

அடுத்தபடியாக, பரம்பிக்குளம்-ஆளியாறு பல்நோக்குத் திட்டம், பாசன ஏரி குளங்களைப் பழுது பார்த்துப் புதுப்பிப்பதற் கான சிறு பாசனத் திட்டம், மண் வளப் பாதுகாப்புத் திட்டம் இவைகளெல்லாம் நல்ல முறையில் வெற்றிகரமாக நிறைவேற்றப் பட்டு வருகின்றன என்பதைப்பற்றியும் அழகாக கவர்னர் அவர் கள் எடுத்துச் சொல்லியிருக்கிருர்கள். அதுமட்டுமல்லாமல், இந்த நாட்டிலே இந்த ஆண்டு முடிவதற்குள்ளாக கட்டாய ஆரம்பக் கல்வியானது ஏழை எளிய மக்கள் எல்லோருக்கும் கிடைக்கக்கூடிய சந்தர்ப்பத்தை நாம் அளித்திருக்கிருேம் என்பதை பெருமையோடு எடுத்துச் சொல்லியிருக்கிருர்கள். இதற்குக் காரணம் மத்திய உணவு திட்டம் என்று மிக அழகாக எடுத்துச்சொல்லி இருக்கிருர்கள். வேலை செய்ய முடியாத, 65 வயதிற்கு மேற்பட்ட முதியவர்களுக்கு, கிழவன் கிழவிகளுக்கு, பணம் கொடுக்கும் திட்டமானது ஒரு நல்ல திட்டம், வேலையற்ற ஏழைகளுக்கு, சக்தியற்றவர்களுக்கு கொடுக்கும் உதவித்திட்டம் என்று மிக்க அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிருர்கள். அதற் கெல்லாம் நம் அரசாங்கத்திற்கு நல்ல முறையிலே நன்றி தெரிவித்துக்கொண்டு, எனக்கு முன்னல் பேசிய எதிர்க்கட்சி அங்கத்தினர் சொல்லிய கருத்துக்களுக்குப் பதில் சொல்ல விரும்புகிறேன். எதிர்க் கட்சி நண்பர் கனம் அங்கத்தினர் ஆளும் கட்சியில், ஜாதியைக் குறிப்பிட்டு வோட்டுக் கேட்டார்கள் என்று குறைகூறினர்கள். அவர்களுக்கு, சபாநாயகர் மூலமாக நான் சொல்லிக்கொள்ள விரும்புவது, ஏதோ எதிர்க்கட்சி கொள்கை விளக்கத்தோடு, யாதந்த மனப்பான்மையோடு நடந்து கொண்டது போலவும், மற்றவர்கள் அப்படி நடக்கவில்லை போலும் பேசுவது மிகவும் தப்பிதமான செய்தி. என்னைப் பொறுத்த வரை எங்கள் மாவட்டம் பொறுத்த வரை, முன்பு தோற்றதற்கு காரணம் கௌண்டர் போடவில்லை என்று, இப்போது ஒரு கௌண்டருக்குப் பதிலாக, இரண்டு கௌண்டர்களைப் போட்டும், தோற்றுவிட்டார்கள். ஆகவே, எதிர்கட்சிக்காரர்கள் எல்லோரும் ஏதோ பெரிய கொள்கை விளக்கம் கொடுத்து வோட்டு வாங்குகிறவர்கள் போலவும், காங்கிரஸ்காரர்கள் மட்டும் பாவம் குறைகள் செய்பவர்கள் போலவும், குறிப்பிட்டு பேசுவது இந்த குறைகள் தகாது என்பதை இந்த நேரத்திலே கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

இதற்கு முன்பு பேசிய திராவிட முன்னேற்றக் கழக அங்கத் தினர் சொன்னர். "இடுகாட்டுக்குப் பிணத்தைத் தூக்கிச் செல்பவர்கள் இடறி விழுகின்ற நிலையில் இருக்கிறது" என்று மிக்க பரிதாபத்தோடு சொன்னர்கள். வருத்தப்பட்டார்கள் அந்தப் பிணத்தின் மீது. இந்தத் தமிழ் நாடு மின்சாரத் துறையில் தீவிர

[Srimathi C. Kolandaiammal] [24th April 1962

மாக முன்னேறி, இந்தியா முழுவதுக்கும் முன்னணியில் இருக்கிறது. எந்த மாகாணத்தோடு ஒப்பிட்டாலும், பெரிய கிராமங்களிலும், ஹரிஜனத் தொகுதிகளிலும், மற்ற இடங்களிலும் ஏராளமாகப் பரவியிருக்கிறது. இன்னும் ஓரளவு உற்பத்தியைப் பெருக்கினுல், மற்ற இடங்களுக்கும் மின்சார வசதி கொடுக்க வேண்டுமென்று ஆளும் கட்சிக்காரர்கள், திட்டங்களெல்லாம் போட்டிருக்கிறுர்கள். தமிழ் நாட்டுப் பண்பு பிணத்தை எடுத்துச் செல்லும் போது, பகலிலே கூட, தீவட்டி எடுத்துச் செல்வதுதான் வழக்கம். அப்படி யிருக்கும் போது, இரவில் பிணம் தூக்கிச் செல்பவர்கள் இடறி விழுவானேன்? எங்கள் பகுதியில் பெரிய மயானத்திற்கு மின்சார வசதியும் இருக்கிறது. ஆனுல், அதை இங்கே சட்டசபையில் சொன்னுல், எங்களுக்கு தனிச் சலுகை கொடுத்திருக்கிறுர்கள் அல்லது வேறு ஏதாவது சொல்வார்கள். இப்படிப் பேசிப் பேசித்தான் கடந்த ஐந்தாண்டுகளாக எவ்வளவோ காரியங்கள் கெட்டுவிட்டன. கடந்த ஐந்து வருஷங்களாக, வடக்கு வாழ்கிறது தெற்கு தேய்கிறது என்று பேசிப் பேசி, தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில், பெரிய தொழிற்சாலைகளுக்கும், சிறிய தொழிற்சாலைகளுக்கும் லைசென்ஸ்கள் வழங்கும் போது, கட்டுப்பாடுகள் ஏற்படக்காரணமாக இருக்கிறது. இவர்கள் வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்று சொல்ல, அமைச்சர்கள், பெரிய தொழில்கள் ஏற்படுவதையும், சிறிய தொழில்கள் வளர்வதையும் பற்றிச் சொல்ல, மற்ற மாகாணக்காரர்கள், இந்த தமிழ் நாட்டுக்கு மட்டும் ஏன் இத்தனை, அத்தனை என்று கூறுவதற்கு ஆரம்பிக்க, நமக்கு அவர்கள் டெல்லியில் "உங்களுக்கு ஜனத்தொகையளவில்தான் கொடுக்க முடியும்" என்று சொல்லும் நிலைமை ஏற்படுகிறது. இந்த விஷயத்தை எதிர் கட்சிக்காரர்கள் சிறு சிறு சலுகைகளையும் நாம் அடைய முடியாமல் இவர்கள் முட்டுக்கட்டைகளாக இருக்கிறுர்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தினர் "தெற்கு தேய்கிறது" என்று சொல்ல, அமைச்சர்கள் "இல்லை, இல்லை; நமக்கு அதிகப்படியாகக் கிடைத்திருக்கிறது" என்று சொல்ல, இதை நியூஸ் பேப்பர்களில் பார்த்துவிட்டு, மற்ற மாகாணத்தவர்கள், டெல்லியில் குறைகூற, நமக்குக் கிடைக்கும் பணமும் குறைந்து போகிறது. கிடைக்கக் கூடிய சலுகைகளை அமைதியாகப் பெற்றுக்கொண்டு இந்த நாட்டுக்குச் சேவை செய்தால், அது நல்ல சேவையாக இருக்கும்.

அடுத்தபடியாக, ஜப்பானிய முறையிலே நாட்டின் விவசாயத்தை ஓங்கச் செய்யவேண்டு மென்றுல், அதற்குப் பாராட்டுத் தெரிவித்தார்கள். ஆனுல், ஒரு விவசாயிக்கு 10 ஏக்கர் தான் நிலம் இருக்கவேண்டும் என்கிறுர்கள். அப்படிக் கொடுத்தால் ரூபாய்க்கு மூன்று படி அரிசி கொடுப்போம் என்கிறுர்கள். பத்து ஏக்கர் நிலத்தை வைத்துக் கொண்டு ட்ராக்டர் முதலிய இயந்திரக் கருவிகளால் விவசாயம் செய்ய முடியுமா என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஜப்பானிய முறை, சைனு முறை இவை பரவவேண்டும் என்று சொல்லிக்கொண்டு, அதே நேரத்தில் விவசாயி ஒருவருக்கு 10 ஏக்கர் போதும் என்றுல், பல ஆயிரம் ரூபாயைக் கொடுத்து ட்ராக்டர்களை வாங்கி 10 ஏக்கர் விவசாயி

24th April 1962] [Srimathi C. Kolandaiammal]

எப்படி விவசாயம் செய்ய முடியும் என்று சிந்திக்க வேண்டும். அவனுக்கு வட்டிக்கு கூடக் காட்டாதே. நில உடமைக்கு உச்ச வரம்பு கட்டும் மசோதா வந்த காலத்தில், திராவிட முன்னேற்றக் கழகத்தினர்கள் 15 ஏக்கர் போதும் என்று சொன்னவர்கள், இன்றைக்கு கவர்னர் உரையில் பேசும்போது, 10 ஏக்கர் போதும் என்று சொல்கிறார்கள். அப்படி யிருந்தால்தான் ரூபாயிக்கு 3 படி அரிசி போடமுடியும் என்கிறார்கள். அவர்கள் பேச்சிலே முன்னுக்குப் பின் முரணாக இருப்பதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். தீவிர உணவு உற்பத்தி எப்படி ஏற்படும் என்பதை யும் சிந்திக்க வேண்டும். நம் மாகாணம் விவசாயத்தில் முன்னனி யில் இருப்பது போலவே, மற்றத் துறைகளிலும் முன்னணியில் இருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. நெடுஞ்சாலை களில், சிறிய சாலைகளில், நம் தமிழ்நாடு முன்னோடியாக இருக் கிறது. அப்படியிருக்கும்போது, 100-க்கு 70, 90 கிராமங்களில் ரோடு வசதியே கிடையாது என்று சொல்லுவது எப்படிச் சரியாகும்? பேசும் பொழுது ஜாக்கிரதையாகப் பேசுவது நல்லது. ரோடு வசதிகள் போட்டுக்கொள்ள ஏராளமான பணம் கொடுக்கிறார்கள். பஞ்சாயத்து யூனியன்களை ஏ டைப், பி டைப், ஸி டைப் என்று பிரித்து, தலைக்கு 30, 40 பைசா விதம் வினியோகிக்கிறார்கள். இவ்வளவு பணத்தில் இவ்வளவு மைல்களுக்கு ரோடுகள் போடலாம் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அப்படி யிருக்கும் போது எப்படி 100-க்கு 70, 90 கிராமங்கள் ரோடுகள் இல்லாமல் இருக்கமுடியும்? கணக்கு இல்லையா? 10, 20 கிராமங்கள் என்றால் ஒருக்கால் சரியாக இருக்கும். குத்து மதிப்பாகக் கணக்குச் சொல்வது தகாதது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, ஆளும் கட்சிக்காரர்கள் தனியார் துறைக்கு அதிகச் சலுகை கொடுப்பதாகவும், பொதுத் துறையில் வளர வேண்டிய அளவுக்கு வளரவில்லை என்றும் எதிர்க்கட்சி அங்கத் தினர்கள் குறிப்பிட்டார்கள். இவர்கள் தனி மனிதன் சுதந்தரம் பாதிக்கப்படக்கூடாது என்று சொல்லித்தான் வோட்டு பெற்று இங்கே வந்திருக்கிறார்கள். தனி மனிதன் தொழில் துறையில் பெருகவேண்டும் என்றே இங்கே வந்திருக்கிறார்கள். இன்றைக்கு காங்கிரஸ் சர்க்கார், தனியார் துறையிலும், பொதுத்துறையிலும் தொழில்களை ஏற்படுத்துகிறார்கள். எல்லாத் தொழில்களையும் பொதுத் துறைக்கே விட்டு விடு என்றால், அது முடியாத காரியம். இது ஜனநாயக நாடு என்பதை யாரும் உணரவேண்டும். கட்டுப் பாடு விதிக்க முடியுமா என்று யோசிக்க வேண்டும்.

எதிர்க்கட்சி அங்கத்தினர் கவர்னர் உரையை, "இது பிணி தீரா மருந்து" என்று குறிப்பிட்டார்கள். கவர்னர் உரை பொதுவானது தான் பொறுப்பேற்றுக்கொண்டிருக்கும் அமைச்சர்கள் பாலிஸி பற்றி எல்லாம் விளக்குவார்கள் என்று சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். அதிகாரிகள் பொறுப்பற்ற தன்மையில் நடந்துக் கொண்டதாகக் குறைகூறினார்கள். அதற்குப் பலகாரணங்கள் இருக்கலாம். சர்க்கார் காரணமல்ல. இரண்டு மூன்று நாட் களுக்கு முன்பு பத்திரிகையில் படித்தோம், காஞ்சித் தொகுதி காங்கிரஸ் அங்கத்தினர் வீட்டில் தீ வைத்தார்கள் என்று.

[Srimathi C. Kolandaiammal] [24th April 1962

அவர்கள் வீட்டில் மின்சாரக் கனெக்ஷன் அதிகம். அதனுல் தீ பற்றியிருக்கலாம். ஆகவே இதையெல்லாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஆளும் கட்சியை குற்றம் சாட்டவேண்டும் என்றே நினைத்தால், அந்த அடிப்படையில் எதை வேண்டுமானுலும் சொல்லலாம்.

இந்த மாநிலத்தில் அணுசக்தி மூலம் மின்சார உற்பத்தி செய்ய ஒரு நிலையம் நிறுவ தீவிர பரிசீலனை செய்துக் கொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தகுந்த இடத்தை பொறுக்க பரிசீலனை நடப்பதாகத் தெரிகிறது. அப்படியென்ருல், அந்த நிலையத்தை கோவை ஜில்லாவில் ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். காரணம், அங்கே ஏராளமான தொழில்கள், பெரிய தொழில்கள், சிறிய தொழில்கள் இருப்பது மட்டுமல்ல, விவசாயத்திலும் நாங்கள் முன்னணியில் நிற்கிறோம். ஆகவே, மின்சார, அணுசக்தி நிலையத்தை அங்கே வைப்பதால், அந்த வட்டாரம் மட்டுமல்ல, மற்ற சுற்றுப்புற வட்டாரங்களும் நன்மையடையக் கூடிய சூழ்நிலை ஏற்படும் என்ற காரணத்தினுல், அந்த நிலையத்தை கோவை ஜில்லாவில் ஏற்படுத்த வேண்டும் என்று வற்புறுத்தி கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

அதற்கடுத்த படியாக, மேல் பவானி அணைக்கட்டுத் திட்டம் நிறைவேற்றப்பட வேண்டும். அந்த அணைக்கட்டு முடிந்தால், கோவை ஜில்லாவில் வறட்சியாக உள்ள பல்லடம், அவனுசி, தாரா புரம் முதலிய பகுதிகளுக்கு பாசன வசதி கிடைக்கும். உணவு உற்பத்தி பெருகும். அதிக உணவு உற்பத்தியால் பஞ்சம் ஓரளவு நீங்கும்.

பள்ளிக்கு போகும் மாணவனை "நீ நன்ருகப் படிக்க வேண்டும், நல்ல முன்னேற்றம் அடைய வேண்டும்" என்று பாராட்டு வதனுலேயே, அவன் உற்சாகம் அடைந்து நல்லபடியாகப் படிப்பான். அதே போல, நாம் நம் சர்க்காரைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். 24 மணி நேரமும் இந்த நாட்டின் நன்மைக்காகப் பாடுபடும் முயற்சியில் பொறுப்பேற்றிருக்கும் அமைச்சர்களைப் பாராட்டாமல் இருக்க முடியாது. அதற்கு பாராட்டுதலைத் தெரிவித்துக்கொண்டு நம்முடைய கவர்னர் அவர்கள் உரையில் நம்முடைய நாட்டில் எவ்வளவோ திட்டங்களை உருவாக்கவேண்டும் என்று கூறியிருக்கிருர். அதிலும் சுருக்க மாக பல திட்டங்களைப்பற்றி குறிப்பிட்டிருக்கிருர். அதிலும் சிறப்பாக ஏழை மாணவர்களுக்கு கல்வி வசதி திட்டமும், அதிலும் முக்கியமாக மாணவர்களுக்கு மத்திய உணவு திட்டமும், வயது வந்த முதியோர்களுக்கு பென்ஷன் கொடுக்கக்கூடிய ஒரு பெரிய திட்டத்தைப்பற்றியும் குறிப்பிட்டிருக்கிருர். கோடை காலங்களில் மின்சார வெட்டு இல்லாமல் இருப்பதற்காக வேண்டிய திட்டத்தை அமுலுக்கு கொண்டு வருவதாக உள்ள திட்டத்தைப் பற்றியும் குறிப்பிட்டிருக்கிருர். அவற்றையெல்லாம் நல்ல முறை யில் அமுல் நடத்த வேண்டும் என்று இந்த அமைச்சரவையைக் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

12-00 noon

24th April 1962]

* SRI V. KRISHNAMOORTHY : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, எனக்கு முன்னால் பேசிய கனம் அங்கத்தினர் அனைவரும் குறிப்பாகச் சர்க்கார் கட்சியிலிருந்து முதன் முதலாக இந்த தீர்மானத்தை வலியுறுத்திப் பேசிய கனம் அம்மையார் அவர்கள் கவர்னர் பெருமான் அறிக்கையில் இருக்கக்கூடிய நல்ல கருத்துக்களை எடுத்துக் காட்டினார்கள். சர்க்கார் செய்யத் தவறிய காரியங்களையும் அவர்கள் எடுத்துக் காட்டினார். அதற்கு முதன் முதலாக அவருக்கு என்னுடைய கட்சியின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதை தெரிவித்துக் கொள்ள கடமையும் பட்டிருக்கிறேன். நவரத்னச் சுருக்கமாக கவர்னருடைய உரையானது சர்க்காருடைய அறிக்கை என்றே சொன்னார்கள். சாதாரமாக சீமான் வீட்டில் குழந்தை பிறந்தால் அங்கே இருக்கக்கூடிய தாதியர்கள் எல்லாம் அந்தக் குழந்தை அரூபியாக இருந்தாலும்கூட அந்த அழகற்ற குழந்தையைப் பார்த்து அங்கே இருக்கக்கூடிய தாதியர்கள் எல்லாம் என்ன சொல்வர்கள் என்றால் “ஆகா, குழந்தை எவ்வளவு அழகாக இருக்கிறது பார், ஆகா குழந்தை எப்படி மன்மதக் குஞ்ஜாக இருக்கிறது பார்” என்றெல்லாம் சொல்வார்கள். (ஆரவாரம்) அதைப்போலத்தான் இருக்கிறது கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரையைக் கண்டு பேசுவது, கனம் அமைச்சர் அவர்கள் தயாரித்த உரையைப் பார்த்து விட்டு அந்த அறிக்கையிலுள்ள குறைகளை எல்லாம் எடுத்துச் சொல்லாமல் அதிலுள்ள குறைபாடுகளையெல்லாம் எடுத்துச் சொல்லாமல் அந்த அறிக்கை எப்படி நன்றாக இருக்கிறது எவ்வளவு நேர்மையாக இருக்கிறது என்றெல்லாம் நம்முடைய நண்பர்கள் பேசினார்கள். பிப்ரவரி மாதத்தில் நான் கேள்விப்பட்டேன் இந்த நாட்டில் நவக்கிரகங்கள் எல்லாம் ஒன்று சேரப்போகின்றன, அப்படி நவக்கிரகங்கள் ஒன்று சேருகிற காரணத்தால் நாட்டிலுள்ள மக்களுக்கெல்லாம் துன்பம் நேரிட இருக்கிறது என்றும் சிலருக்கு நன்மைகள் ஏற்படும் என்றும் நினைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் உண்மையில் என்ன நடந்தது? நவக்கிரகங்களும் ஒன்று சேர்ந்தது. நாட்டில் எந்த விதமான மாறுதலும் ஏற்படவில்லை. எந்த விதமான கெடுதியும் ஏற்படவில்லை. ஆனால் பொதுத் தேர்தல் முடிந்தவுடன் நம்முடைய தமிழ் நாட்டில் அமைச்சர் அவையும் ஒன்பது மந்திரிகள் வந்திருக்கிறார்கள். அவர்களும் இந்த நவக்கிரகங்களைப் போல் இருக்கிறார்கள். அவர்கள் வந்தவுடன் இந்த நாட்டு மக்களுக்கு என்ன திட்டத்தை அளிக்கப்போகிறார்கள். எந்தந்த விதத்தில் மக்களுடைய வரிச்சுமையைக் குறைக்கப் போகிறார்கள், எந்தந்த விதமான நன்மைகளைச் செய்யப் போகிறார்கள். எந்தெந்த விதத்தில் விலைவாசிகளைக் குறைக்கப் போகிறார்கள் என்று மக்கள் மிகுந்த ஆவலுடனும் மிகுந்த சாதுர்யத்துடனும் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். நவக்கிரகங்கள் சேர்ந்து நாட்டிற்கு எந்த விதமான காரியங்களையும் செய்யாமல் இருந்ததோ அதைப்போலவே இந்த அமைச்சர்களும் மக்களுக்கு எதையும் செய்வதாக இல்லை. அதைப்போன்றுதான் கவர்னர் அவர்களுடைய உரையிலும் எந்த விதமான

[Sri V. Krishnamoorthy] . [24th April 1962

நன்மைகளையும் காணவில்லை. கவர்னர் பெருமானுடைய உரையில் நாட்டிலுள்ள ஏழை விவசாயிகளுக்கு வேலை இல்லாத திண்டாட்டத்தைப் போக்கவும், உணவு பிரச்னையைத் தீர்க்கவும், விலைவாசியைக் குறைக்கவும், உணவு இல்லாதவர்களுக்கு உணவு அளிக்கவும் எந்த விதமான திட்டமும் இல்லை என்பதை மிக வருத்தத்துடன் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கனம் அனந்த நாயகி அம்மையார் அவர்கள் சொன்னார், அவர் ஒரு பெரிய வழக்கறிஞர், நன்றாக வாதாடக்கூடிய ஆற்றல் படைத்தவர் அவர். அவர் குறிப்பிட்டார் நாங்கள் அதாவது திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் இந்தச் சபையில் கவர்னர் ஆற்றிய உரையில் நாங்கள் கலந்து கொள்ளவில்லை என்றும், வட நாட்டினர் ஆற்றிய உரையில் கலந்து கொள்ளவில்லை என்ற காரணத்தையும் எடுத்துக்காட்டினார். அவர் நல்ல வழக்கறிஞர், வக்கீல் தொழிலை நடத்தக் கூடியவர். அதில் அவருக்கு நல்ல அனுபவம் உண்டு. இருந்தாலும் அவர் மேற்கொண்டிருக்கக்கூடிய கருத்து தவறானது நான் என்பது என்னுடைய அபிப்பிராயம். எங்களுடைய கருத்தை அவர் நன்றாக புரிந்துகொண்டு பேச வில்லை. நாங்கள் கவர்னர் ஆற்றிய உரையில் கலந்து கொள்ளாத தற்குக் காரணம் அவர் வட நாட்டைச் சேர்ந்தவர் என்ற காரணத்திற்காக அல்ல. அவர் வட நாட்டவர் என்றோ பிஷ்ணுராம் மேதியினிடம் எங்களுக்கு வெறுப்பு என்ற காரணத்தாலோ அல்ல. எங்களுடைய கருத்தெல்லாம் கவர்னர் என்ற பதவியே வேண்டாம் என்பதுதான். அந்த ஒரு காரணத்தைத் தவிர வேறு காரணத்தால் அல்ல. அவர் வட நாட்டைச் சேர்ந்தவர் என்ற காரணத்தால் அல்ல. கவர்னர் பதவி என்பது ஒரு சாதாரண பதவி என்றும் அது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பதவி அல்லவென்பதும் குடியரசு தலைவரால் நியமனம் செய்யப் பட்ட ஒரு பதவிக்கு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத் தினர்கள் தலைவணங்கி இருப்பதா என்பதற்காகத்தான் நாங்கள் அந்த உரையில் கலந்து கொள்ளவில்லை. அதுதான் காரணமே யொழிய அவர் வட நாட்டார் என்ற காரணத்தினால் அல்ல. நாளைக்கோ அல்லது மறுதினமோ நம்முடைய கனம் அங்கத்தினர் கனம் அனந்தநாயகி அம்மையார் அவர்கள் கூட கவர்னராக வந்தாலும், அதுவும் குடியரசுத் தலைவரால் நியமனம் செய்யப்பட்டு கவர்னராக வந்தாலும் நாங்கள் அதில் கலந்து கொள்ள மாட்டோம். ஏனென்றால் எங்களுடைய கொள்கையின்படி குடியரசுத் தலைவரால் நியமனம் செய்யப்பட்ட கவர்னர் பதவி வேண்டாம் என்பதுதான். அப்படி நியமனம் செய்யப்பட்ட பதவியை நாங்கள் மதிக்கவில்லை. கவர்னர் பதவிகூட நாட்டு மக்களால் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். நாட்டு மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவதாக இருந்தால்தான் அவருக்கு நாங்கள் மதிப்புக் கொடுப்போம். அப்படி மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட கவர்னராக இருந்தால் நிச்சயமாக நாங்கள் மதிப்புக் கொடுப்போம். அவர் எந்த நாட்டினராக இருந்தாலும் சரி அவருக்கு மதிப்புக் கொடுப்போம். அப்படிப்பட்ட கவர்னர் ஆற்றக்கூடிய உரையில் நாங்கள் நிச்சயமாக கலந்துகொள் வோம். இந்த கவர்னர் குடியரசு தலைவரால் நியமனம் செய்யப்

24th April 1962] [Sri V. Krishnamoorthy]

படுகிறார் என்ற காரணத்தால்தான் நாங்கள் அதில் கலந்து கொள்ளவில்லை. ஆனால் வட நாட்டார் என்ற காரணத்தால் அல்ல என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதற்கு யார் வேண்டுமானாலும் வரலாம். ஆனால் பிஷ்னுராம் மேதியிடம் எங்களுக்கு எந்த விதமான வெறுப்பும் இல்லை. அவர் நல்ல திறமைசாலிதான். அவர்மீது எந்த விதமான குறையும் இல்லை. ஓரிஸ்ஸா முதன் மந்திரியாக இருந்து நல்ல பணியாற்றியிருக்கிறார். நமது குடியரசு தலைவர் விரும்பினால் யாரை வேண்டுமானாலும் நியமிக்கலாம். அப்படி நியமிக்கப்படுகிறவருடைய உரையில் தமிழ் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிற பிரதிநிதிகள் கலந்து கொள்வது சரியல்ல என்ற காரணத்தால்தான் நாங்கள் கலந்து கொள்ளவில்லை. இது ஜனநாயகத்திற்கு சரியல்ல என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். வட நாட்டார் என்ற முறையில் நாங்கள் கலந்து கொள்ளாமல் இல்லை. இந்த நியமன முறையை நாங்கள் அனுமதிக்கவில்லை என்பதை கனம் அங்கத்தினருக்கு நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இந்த கவர்னர் உரையைப்பற்றியெல்லாம் பல அங்கத்தினர்கள் எடுத்துச்சொன்னார்கள். பல வாதங்களை எடுத்துச்சொன்னார்கள். அவற்றில் சமீபத்தில் நடந்த பொதுத் தேர்தல் நல்ல சுமுகமான முறையில் நல்ல முறையில் நடந்தது என்றும் சொன்னார்கள். செய்வது ஒன்று சொல்வது ஒன்றாக இருக்கிறது. சென்ற மந்திரி சபையில் இருந்த கனம் சுப்ரமணியம் அவர்கள் சொன்னது போல் அதாவது பொதுத் தேர்தல் முடிந்து அங்கத்தினர்கள் வரும்போது முதன் முதலாக கணக்குக் கொடுப்பதில் பொய் சொல்லிவிட்டு தான் வருகிறார்கள் என்று குறிப்பிட்டிருக்கிறார். இதை அவர் முதன் முதலாகவே சொல்லியிருக்கிறார். (ஒரு கனம் அங்கத்தினர் : பொய் என்ற வார்த்தை சட்டசபை முறைக்கு உகந்ததா ?)

**MR. DEPUTY SPEAKER :** அங்கத்தினர் பொய் என்ற வார்த்தையை உபயோகப்படுத்தியது பார்லிமெண்டரி முறைக்கு ஒவ்வாதது என்று நினைக்கிறேன். அது ஒவ்வாதது என்று ஏற்கெனவே இங்கு தீர்ப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே கனம் அங்கத்தினர் அந்த வார்த்தையை வாபஸ் பெற்றுக்கொள்ள வேண்டும்.

**SRI M. KARUNANITHI :** இந்தச் சபையில் ஏற்கெனவே 1957-ம் ஆண்டில் அப்பொழுதிருந்த கனம் நிதி அமைச்சர் சுப்ரமணியம் அவர்கள் கவர்னர் உரைக்கு பதில் அளிக்கும் முறையில் அங்கத்தினர்கள் பொய்க்கணக்குக் கொடுத்துவிட்டு வருகிறார்கள் என்று சொல்லியது அது சட்டசபையின் நடவடிக்கையில் அச்சடிக்கப்பட்டிருக்கிறது என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** சட்டசபை நடவடிக்கையில் அச்சடிக்கப்பட்டிருக்கிறதோ இல்லையோ அது எனக்குத் தெரியாது. ஒரு ஒழுங்குப் பிரச்சனை எழுந்து அதற்குத் தீர்ப்புக் கொடுத்திருக்கிறார்கள். அப்பொழுது கொடுத்த தீர்ப்பை வேண்டுமானால் இப்பொழுதுள்ள சபாநாயகர் மாற்றலாம்.

[Sri M. Bhaktavatsalam] [24th April 1962

எல்லோராலும் ஒப்புக்கொண்டிருப்பது "பொய்" என்ற வார்த்தை சட்டசபைக்கு ஒவ்வாதது என்று. அந்த வார்த்தையை உபயோகப்படுத்தாமல் அதே கருத்துள்ள வேறு வார்த்தையை வேண்டுமானாலும் உபயோகப்படுத்தலாம் என்று நான் நினைக்கிறேன்.

**MR. DEPUTY SPEAKER :** "பொய்" என்பதை சந்தர்ப்பத்திற்கு தக்கவாறு அர்த்தம் செய்துகொள்ளலாம். அந்த வார்த்தை சட்டசபையில் சொல்லக்கூடாது என்று ஏற்கனவே தீர்ப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு வேறு எந்த வார்த்தையாவது உபயோகப்படுத்திக்கொள்ளலாம். ஆனால் "பொய்" என்று சொல்வது முறையல்ல. அதனால் கனம் அங்கத்தினர் அந்த வார்த்தையைத் திரும்பப் பெற வேண்டும்.

**SRI V. KRISHNAMOORTHY :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, உண்மைக்குப் புறம்பானது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஏற்கெனவே இருந்த கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த வார்த்தையை உபயோகப்படுத்தி இருக்கிறார். கணக்குகளைக் கொடுக்கும்போது 9,000-க்கு மேல் செலவு செய்துவிட்டு 9,000-க்கு குறைவாக செலவழித்தோம் என்று பொய்க் கணக்கு கொடுக்கிறார்கள் முதன் முதலாக சட்டசபைக்கு வரும்போது என்று சொல்லி இருக்கிறார். அந்தக் காரணத்திற்காகத் தான் என்னுடைய கருத்தைச் சொன்னேனே தவிர, வேறு காரணத்திற்காக அல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**MR. DEPUTY SPEAKER :** அந்த வார்த்தையைத் திரும்பப் பெற்று, சட்டசபையிலே உபயோகிக்கக் கூடிய வேறு வார்த்தையை உபயோகிக்கலாம்.

**SRI V. KRISHNAMOORTHY :** உதவி சபாநாயகர் அவர்களே, 'பொய்' என்ற வார்த்தையை நம்முடைய கனம் நிதி அமைச்சர் அவர்கள் ஏற்கனவே சொன்ன காரணத்தினால், அதைச் சொன்னேன். அவர் சொன்னது தவறாக இருந்தால் நானும் தவறு என்று ஒத்துக்கொள்கிறேன்.

நடைபெற்ற தேர்தல் ஒழுங்காக நடைபெற்றிருக்கிறது என்று கவர்னர் உரையிலே கூறினார்கள். நான் கனம் அமைச்சர்களையும், கனம் அங்கத்தினர்களையும் கேட்கிறேன், எந்த அளவிற்கு இந்த நாட்டிலே ஒழுங்காக தேர்தல் நடைபெற்றது என்று. 'ஒன்பதாயிரம் ரூபாய்க்குக் குறைவாகத்தான் செலவு செய்தோம். அதிலேதான் நாங்கள் இங்கே வந்திருக்கிறோம்' என்று இங்கே இருக்கிற அமைச்சர்கள், இங்கே ஆளும் கட்சியிலே இருக்கின்ற பெரும்பாலானவர்கள் நாட்டு மக்களிடத்திலே சொல்ல முடியுமா? மனதிலே கைவைத்து, 'ஒன்பதாயிரம் ரூபாய்க்குக் குறைவாகத்தான் நாங்கள் செலவு செய்தோம் அதிலேதான் நாங்கள் இங்கே வந்திருக்கிறோம்' என்று சொல்ல முடியுமா என்று கேட்கிறேன். வோட்டர்களுக்குப் பணம் கொடுத்து வோட்டு வாங்கியிருக்கிறார்கள். சர்க்கார் அதிகாரிகள், தங்களுடைய திறமைகளை யெல்லாம்

காட்டி ஆளும் கட்சிக்கு நல்ல முறையிலே வோட்டுக்களை வாங்கித் தந்திருக்கிறார்கள். இங்கிருக்கும் மந்திரிகள் லட்சக் கணக்காக ரூபாய்களைச் செலவு செய்ததாக நான் கேள்விப் பட்டேன். அது உண்மையோ என்னவோ எனக்குத் தெரியாது; அந்தந்த மந்திரிகளுக்கே நன்றாகத் தெரியும். உண்மைக்குப் புறம்பாக, 'ஒன்பதாயிரம் ரூபாய்க்குக் குறைவாக செலவு செய்து தான் நாங்கள் தேர்தலில் நின்று வெற்றி பெற்றோம் என்று நம்முடைய அமைச்சர்கள் எப்படி இங்கே கூறுகின்றார்களோ அதே போல நாட்டு மக்களிடத்திலும் எடுத்துச் சொல்லவேண்டும் என்று நான் இங்கே என்னுடைய கருத்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இரண்டாவதாக, நிதிக் கமிஷன் மூலமாக நம்முடைய மாநிலத்திற்கு இரண்டரை கோடி ரூபாய் வருமானம் கிடைத்திருக்கிறது என்று கவர்னர் உரையில் சொல்லியிருக்கிறதைப் பார்க்கும்போது இந்தச் சபையை அவமதித்து விட்டார்கள் என்றே நான் சர்க்காரைக் குறை கூறுவேன். மூன்றாவது நிதிக் கமிஷனிடமிருந்து கிடைத்திருக்கும் ரிபோர்ட்டை பத்திரிகை வாயிலாக இருபது தினங்களுக்கு முன்பு நான் படிக்க நேர்ந்திருந்தாலும், அதை இந்தச் சபைமுன்பு இதுவரை வைத்தபாடில்லை. அந்தக் கமிஷனுக்கு நாம் கொடுத்த கோரிக்கைகள் என்ன, நமக்குக் கிடைத்த சாதனைகள் என்ன என்பதை இங்கே இருக்கிற மந்திரிசபை நமக்கு இன்னமும் தெரிவிக்கவில்லை. நம்முடைய மாநிலத்திற்கு நாம் எவ்வளவு கேட்டோம் எவ்வளவு வருமானம் வந்திருக்கிறது, எவ்வளவு கிடைக்கவில்லை என்பதை இதுவரையிலும் நமக்குச் சொல்லாமல், இந்தக் கவர்னர் உரையில், ஏதோ சின்னக் குழந்தைகளுக்கு மிட்டாய் கொடுப்பது போல், 'இந்த மாநிலத்திற்கு இரண்டரை கோடி ரூபாய் வருமானம் வந்திருக்கிறது' என்று சொல்கிறார்கள். குழந்தைக்கு எப்படி மிட்டாய் கொடுத்துவிட்டு, அதன் கழுத்திலே இருக்கும் சங்கிலியை கழற்றிச் செல்கிறார்களோ வெளியிடத்தில், அதைப்போல் மத்திய சர்க்காரால் நியமிக்கப்பட்ட மூன்றாவது நிதிக் கமிஷன், தமிழகத்தின் வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளவில்லை என்பதை நான் மிக மிக வருத்தத்தோடு சொல்லிக் கொள்கின்றேன். அதைப்பற்றி கவர்னர் உரையிலே எந்தவிதமான ஆதாரங்களும் கிடையாது.

நிதிக் கமிஷன் இந்த மாநிலத்திற்கு இரண்டரை கோடி ரூபாய் கொடுத்திருக்கிறது என்று சொல்கிறார்கள். ஆனால், இந்த மாநில சர்க்கார் மூன்றாவது நிதிக் கமிஷனுக்கு எந்த அளவுக்கு வேண்டுகோள் விடுத்திருந்தார்கள்? மத்திய அரசாங்க உத்தியோகஸ்தர்கள், மாநில அரசாங்க உத்தியோகஸ்தர்கள் இவர்களுடைய சம்பள விகிதங்களிலே நிறைய வேறுபாடு இருக்கிறது என்று சொன்னார்கள். 'The wide disparity in the emoluments of Government servants' என்று சொல்லப்பட்டது. இங்கே இருக்கிற குறைபாடுகளைத் தீர்த்து வைக்கவேண்டியது நம்முடைய மத்திய

[Sri V. Krishnamoorthy] [24th April 1962

சர்க்காரினுல் நியமிக்கப்பட்ட கமிஷனுடைய பொறுப்பாகும் என்று சொன்னுர்கள். ஆனல், இதுவரையிலும் அந்தக் குறைபாடுகள் தீர்க்கப்பட்டனவா என்பதைப்பற்றி புள்ளிவிவரங்கள் கவர்னர் உரையிலே காணப்படவில்லே.

(Mr. Speaker in the Chair.)

நம் மாநிலத்தில் வேலே செய்கின்ற ஆசிரியர்களுக்குக் கொடுக்கின்ற சம்பளம் மத்திய சர்க்காரிலே இருக்கிற ப்யூன்களுக்குக் கொடுக்கின்ற சம்பளத்தை விட மிக மிகக் குறைவானது என்று சொன்னுர்கள். இந்த ஏற்றத்தாழ்வு களேயப்படவில்லே என்று சொன்னுர்கள். அப்படிக் களேயப்படுவதற்கு நமக்கு ஆண்டு ஒன்றுக்கு நான்குகோடி ரூபாய் தேவை என்று சொன்னுர்கள். இதை மூன்ருவது நிதிக் கமிஷன் நமக்குக் கொடுத்திருக்கிருர்களா என்ருல், இதுவரை நமக்குப் போதுமான ஆதாரங்களோ அல்லது போதுமான செய்திகளோ கவர்னர் உரையில் தரப்படாமைக்கு நான் மிகவும் வருத்தம் தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்கே இருக்கின்ற கடைநிலே சிப்பந்திகளுக்கு சம்பள உயர்வு தருவதற்காக மத்திய சர்க்கார் 'கிராண்ட்' தருவதாகச் சொல்லி, அதன்படி ஆணே பிறந்தது. அதை நம்பி இந்த மாநில சர்க்கார் சம்பளத்தை உயர்த்தினுர்கள். ஓராண்டு கொடுத்தார்கள். இரண்டாவது ஆண்டு அந்த 'கிராண்ட்' கொடுக்கப்படவில்லே. ஆண்டொன்றுக்கு இரண்டு கோடி 72 லட்சம் ரூபாய் வரவேண்டுமென்று கூறினுர்கள். இதுவரையிலும் அந்தப் பணம் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதா என்பதைப் பற்றி எந்தவிதமான பேச்சும் இல்லே. 'அடிஷனல் டாக்ஸேஷன்' என்று நிதிக் கமிஷன் தயாரித்திருக்கிற அறிக்கையிலே சொன்னுர்கள். இந்த மாநிலத்திலே இருக்கும் வரிச்சுமை மிக மிக அதிகம். மற்ற மாநிலங்களேவிட இங்கு அதிகமான அளவில் வரிப் பளு இருக்கிறது. 'இனிமேல் வரி போடமாட்டோம், எங்களுக்கு ரெவின்யூ வகையில் துண்டு விழுகிற தொகையை இந்த மாநிலத்திற்கு மான்யமாகத் தர வேண்டும்' என்று சொன்னுர்கள். கொடுத்தார்களா? என்று நான் கேட்கின்றேன். (மணி அடிக்கப்பட்டது) அதுபற்றி கவர்னர் உரையில் ஒன்றும் காணப்படவில்லே. அதைப் போலத்தான் எக்ஸைஸ் ட்யூட்டியைப் பொறுத்தும் . . .

MR. SPEAKER : The Hon. Member cannot go on speaking. He should finish his speech soon.

SRI V. KRISHNA MOORTHY : வரிகளிலிருந்து நிறைய பங்கு வேண்டுமென்று சொன்னுர்கள். ஆனல், பங்கு கொடுக்கப்பட்டதாகத் தெரியவில்லே. இருந்தபோதிலும், நம்முடைய அங்கத்தினர்கள், முதல் அமைச்சர் அவர்களேச் சுட்டிக் காட்டுகின்றது போல், 'ஆகட்டும் பார்க்கலாம்' என்று சொல்கிருர்கள். செட்டியார் பக்கத்திலே சொல்கிருர். வங்கத்திலே டாக்டர் பி. ஸி. ராய் சொல்வது போல் . . . . (மணி அடிக்கப்பட்டது.)

24th April 1962] •

**MR. SPEAKER :** இப்பொழுது கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஆர். சுப்ரமண்யம் அவர்கள் பேசலாம்.

***SRI R. SUBRAMANIAM :** கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்கள் ஆற்றிய உரையின் மீது கனம் அம்மையார் அவர்கள் கொண்டுவந்திருக்கும் நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை ஆதரித்து ஒருசில வார்த்தைகள் கூற விரும்புகிறேன்.

கவர்னர் பெருமான் உரையில், கடந்த பொதுத் தேர்தலின் போது ஜனங்கள் எவ்வளவு அமைதியாகவும் நல்ல முறையிலும் நடந்துகொண்டார்கள் என்பதைப் பாராட்டியும், உத்தியோகஸ்தர்கள் எவ்வளவு பாரபட்சமின்றி நல்லவிதமாக நடந்துகொண்டார்கள் என்பதைக் குறித்துப் பாராட்டியும் அவர்கள் திருப்தி தெரிவித்திருக்கின்றார்கள். அவர்கள் உண்மையிலேயே பாராட்டப்படவேண்டியவர்கள். உத்தியோகஸ்தர்கள் எல்லோரும், ஒரு தலைப்பட்சமாக இல்லாமல், நடுநிலையாக இருந்து அவர்கள் காரியங்களை நல்ல முறையில் செய்திருக்கின்றார்கள். ஆனால், தஞ்சாவூர் தொகுதியிலிருந்து வந்த எனது நண்பர் திரு. கருணாநிதி அவர்கள் பேசும்போது, தேர்தலில் சில குறைகளை எடுத்துச் சொன்னார்கள். அதுமட்டுமல்லாமல் தனிப்பட்டவர்களைப் பற்றி ஒரு ஜாப்தாவையே அவர்கள் கொடுத்தார்கள். மற்ற இடங்களில் நடந்தவைகளைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. தஞ்சாவூரைப் பற்றி அவர்கள் சொல்லும்போது நல்லிச்சேரியில் இரண்டு பேர்களை அரஸ்டு செய்ததாகவும், அதை ஒரு பட்சபாதமான செயலாகவும் அவர்கள் குறிப்பிட்டார்கள். உண்மையிலே நான் சொல்கிறேன். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்று சொல்வார்கள். அதன்படி நல்லிச்சேரியில் நடந்த விபரத்தை நான் உங்களுக்குச் சொன்னால் மற்றவைகளைப் பற்றி அவர்கள் சொன்னது எந்த அளவில் இருக்குமென்று நீங்களே தெரிந்து கொள்ளலாம். நல்லிச்சேரியில் நடந்தது என்ன? நண்பர் ராமமூர்த்தி அவர்கள் காங்கிரஸ் கட்சிக்கு ஆதரவு தேடுவதற்காக அந்த ஊருக்குச் சென்றபோது அவரை நன்றாக அடித்துக் கட்டியும் வைத்துவிட்டார்கள். இந்தச் செய்தியை அறிந்து அவரை மீட்டு வரச் சென்றபோது அந்தச் சம்பவத்திற்குக் காரணமான இரண்டுபேரை அரஸ்டு செய்து வந்தார்கள் என்றால் இது நியாயமற்ற செயலா என்று கேட்க விரும்புகிறேன். இந்த ஒரு விஷயத்தில் இருந்தே நீங்கள் அவர் கூறிய மற்ற குறைகளும் எப்படி இருக்குமென்று ஊகித்துக்கொள்ளலாம்.

அடுத்தபடியாக முதல் திட்ட காலத்தில் நாம் பெற்ற அநுபவத்தின் பலனை இரண்டாவது திட்ட காலத்தில் நாம் 34 கோடி ரூபாய் அதிகமாகச் செலவு செய்து நமது திட்டங்களை வெற்றிகரமாக முடித்து இருக்கிறோம். அதன்படி பார்த்தால் இந்த மூன்றாவது திட்டத்தில் நாம் கிட்டத்தட்ட 75 கோடியோ, நூறு கோடியோ அதிகமாகச் செலவு செய்ய அநுபவம் இருப்பதனால் நமக்கு வசதி எற்படும், ஆகையாலே இவ்வளவு அதிகமான தொகையை நாம் எப்படியாவது கண்டுபிடித்தாகவேண்டும். பைனான்ஸ்

[Sri R. Subramaniam] [24th April 1962

கமிஷனைப் பொறுத்த வரையில் வருஷம் ஒன்றுக்கு 2½ கோடி ரூபாய் அதிகமாகக் கிடைப்பதை வைத்துக்கொண்டு நாம் திட்டச் செலவைச் சரிக்கட்ட முடியாது. எனவே அதிக வரிகள் போட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. இல்லையென்றால் நாம் மத்திய சர்க்காரிடம் இருந்து அதிகமான பணம் பெறவேண்டியிருக்கிறது. இந்த இரண்டு வழிகளை விட்டால் வேறு ஏதாவது ஒன்றைத்தான் கண்டுபிடித்தாகவேண்டும். வரிகளை இல்லாமல் ராஜ்யத்தை நடத்த முடியாது. ஆனால் வரிகள் போடும்போது சாதாரணமாக நாம் போடக்கூடிய வரியைத் தாங்கக் கூடிய சக்தி படைத்தவர்களுக்கு வரி போடவேண்டும். கவர்னர் பெருமான் ஆற்றிய உரையில் அநேகமாக பட்ஜெட் சமர்ப்பிக்கப்படும்போது ஏதோ புது வரிகள் போடும்படி இருக்குமோ என்று தோன்றுகிறது. அம்மாதிரி வரி போடுவதாக இருந்தாலும் இந்த வரிகளைத் தாங்கக் கூடிய சக்தியுள்ளவர்களுக்கே போடும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன். ஏழை எளியவர்களை விலக்கிவிடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மத்திய சர்க்கார் நமக்கு 291 கோடி ரூபாயில் 190 கோடி ரூபாய் கொடுக்க முன்வந்திருக்கிறது. இந்தத் தொகையையும் நாம் அதிகமாகப் பெற முயற்சி செய்யவேண்டும். அவ்வாறு நாம் முயற்சி செய்யாவிட்டால் மூன்றாவது திட்டத்தில் அதிகமாகக் கூடிய செலவினங்களைச் சரிக்கட்டுவது முடியாத காரியமாக இருக்கும். ஆகவே நமக்குப் போதுமான நிதி வசதியைப் பெறுவதற்கு நமது சர்க்கார் முயற்சி செய்யவேண்டுமென்று தங்கள் மூலமாக நான் கேட்டுக்கொள்கிறேன். அத்துடன் நமது நிர்வாகத்தில் சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதற்கு என்ன என்ன சாத்தியக் கூறுகள் உண்டோ அவற்றையும் ஆராய்ந்து பார்க்கும்படியாக நான் கேட்டுக்கொள்கிறேன்.

அதற்கடுத்தபடியாக தீவிர சாகுபடித் திட்டத்தை தஞ்சை மாவட்டம் பூராவுக்கும் இந்த வருஷம் விஸ்தரிக்க உத்தேசித்திருக்கிறதை நான் மிகவும் வரவேற்கின்றேன். ஆனால் இரண்டாவது திட்ட ஆரம்பத்தில் நமக்கு 44 லட்சம் டன்னாக இருந்த உணவு உற்பத்தி முடிவில் 53 லட்சம் டன்னாக உயர்ந்தது என்றாலும் நாம் எதிர்பார்த்த அளவிற்கு உற்பத்தி அதிகரிக்கவில்லை. அதற்குக் காரணம் நமக்குப் போதுமான ரசாயன உரம் கிடைக்கவில்லை. இப்போது நெய்வேலியில் ஏற்படுத்தப்படும் உரத் தொழிற்சாலையின் மூலமாக இந்தக் கஷ்டத்தைப் போக்க முடியும் என்று நினைக்கிறேன். நெய்வேலியில் உற்பத்தி செய்யப்படும் அந்த உரம் நமக்குக் கிடைப்பதற்கு முன்னால் அதைப்பற்றி ஒருசில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். கிடைக்கக் கூடிய உரத்தைக் காலாகாலத்தில் விவசாயிகளுக்குக் கொடுப்பதற்கு நாம் முயற்சி செய்யவேண்டும். காலாகாலத்தில் இப்போது அவர்களுக்குக் கிடைக்க வில்லையென்பது ஒரு குறை. உண்மையில் நானே இதை நேரில் கண்டு அறிந்திருக்கிறேன். விவசாயிகளுக்கு எந்தச் சந்தர்ப்பத்தில் உரம் வேண்டுமோ அந்தச் சந்தர்ப்பத்தில்

24th April 1962] [Sri R. Subramaniam]

கேட்டால் கொடுக்க வேண்டும். ஏதோ கோட்டாவை எழுதிக் கொடுத்துவிடுகிறார்கள். அந்தக் கடையில் போய் வாங்கிக் கொள்ளுங்கள் என்கிறார்கள். அந்தக் கடையில் போய்க் கேட்டால் ஸ்டாக் இல்லை என்ற பேச்சு வருகிறது. இதை என்னுடைய சொந்த அநுபவத்தைக் கொண்டு சொல்கிறேனேயொழிய மிகைப் படுத்திக் கூறுவதாக யாரும் நினைக்கக்கூடாது. ஆகவே ரசாயன உரங்கள் சீக்கிரமே காலாகாலத்தில் விவசாயிகளுக்குக் கிடைக்கும்படியான ஏற்பாட்டைச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இம்மாதிரி நாம் செய்தால் நிச்சயமாக நாம் எதிர்பார்த்த லட்சிய அளவு உற்பத்தியைச் செய்வதில் எவ்வித மான கஷ்டமும் இருக்காது என்று நான் கூறிக்கொள்ள விரும்பு கிறேன்.

அடுத்தபடியாக மின் விசை உற்பத்தியைப் பற்றி ஒன்று சொல்ல ஆசைப்படுகிறேன். மின்விசை உற்பத்தித் திட்டப்படி நிறைவேற்றப்படுகிறது. நாம் போட்ட அளவிற்கே உற்பத்தி யும் ஆகிறது. முதல் திட்ட இறுதியில் 250 மெகா வாட்டாக இருந்தது இரண்டாவது திட்ட இறுதியில் 571 மெகா வாட்டாக ஆகிவிட்டது. எதிர்பார்த்த அளவிற்கு உயர்ந்து விட்டது. மூன்றாவது திட்ட இறுதிக்குள் எந்த அளவிற்கு உற்பத்தி செய்ய வேண்டுமென்று நிர்மானித்திருக்கிறோமோ இதையும் கண்டிப் பாகச் செய்துவிடுவோம். ஆனால் மின்சார விஸ்தரிப்பு சம்பந்த மாக எனக்கு ஒரு குறையுண்டு. ஆண்டு ஒன்றுக்கு 1,500 கிராமங் களுக்கு மின்சார விஸ்தரிப்பு அளிக்க நாம் திட்டமிட்டு நிறை வேற்றிக்கொண்டு வருகிறோம். ஆனால் எங்கள் தஞ்சை ஜில்லா வைப் பொறுத்த வரையில் சரியான அளவு மின் விளக்குகள் எல்லா கிராமங்களுக்கும் விஸ்தரிக்கப்படவில்லை. இதற்குக் காரணம் அங்குள்ள மின்சார விநியோக கம்பெனிகள்தான். இப் போது இரண்டு கம்பெனிகள் இருக்கின்றன. அவர்களுக்கு நாம் எவ்வளவு உதவி செய்தாலும் கூட அவர்கள் நாம் எதிர்பார்க்கிற அளவிற்கு விஸ்தரிப்புச் செய்ய முன்வரமாட்டேன் என்கிறார்கள். ஆகையால் அந்த இரண்டு கம்பெனிகளையும் சர்க்காரே எடுத்துக் கொள்ளவேண்டுமாய் நான் கேட்டுக் கொள்கிறேன். அப்படி எடுத்துக்கொள்ளாததன் காரணமாகத்தான் அந்த ஜில்லாவில் பல கிராமங்கள் மிகவும் பின்தங்கிய நிலையில் இருக்கின்றன. இதை நான் சொல்ல வேண்டியது இல்லை. இது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆகவே உடனடியாக அந்தக் கம்பெனிகளை அரசாங் கமே எடுத்துக்கொள்ள முன்வரவேண்டுமென்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக உருக்குத் தொழிற்சாலை பற்றி சொல்லியிருக் கிறார்கள். நமக்குக் கிடைக்கக் கூடிய நிலக்கரியையும், இரும்புக் கனியையும் நாம் அயல் தேசங்களுக்கும், ஜாம்ஷெட்பூருக்கும் அனுப்புகிறோம். கிழக்கு ஜெர்மனி, நார்வே ஆகிய இடங்களி லிருந்து ரிப்போர்ட் கிடைத்தவுடன் 5-வது உருக்குத் தொழிற் சாலை தமிழ் நாட்டில் ஏற்படும்படியாகச் செய்வதற்கு ஆவன செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

[Sri R. Subramaniam] [24th April 1962

அதற்கடுத்தபடியாக நாம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் தயார் செய்யக்கூடிய நேரத்தில் கிழக்குக் கடற்கரைச் சாலைக்கு முதன்மை ஸ்தானம் கொடுத்தோம். ஆனால் திட்டத்தில் அது மூன்றாவது, நான்காவதாகவே இருக்கிறது. அதற்கும் மத்திய சர்க்காரிடத்தில் இருந்து ஸாங்க்ஷன் கிடைத்திருக்கிறதா என்பதைப்பற்றித் தெரியவில்லை. கிழக்குக் கடற்கரை மிக முக்கியமான சாலை. அது இப்போது திட்டத்தில் எந்த நிலையில் கவனிக்கப்படும் என்று எனக்குத் தெரியவில்லை. ஆகவே சர்க்கார் அதை வற்புறுத்தி தேசிய பெருவழிச் சாலையாக எடுத்துக்கொள்ள முயற்சி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதற்கடுத்தபடியாக தேர்தலைப்பற்றி ஒவ்வொருவரும் குறை சொன்னார்கள். உண்மையில் அவர்கள் சொல்லக் கூடிய குறைகளை எல்லாம் பார்த்தால் ஆளும் கட்சியில் உள்ளவர்கள்தான் அவற்றைச் செய்திருக்கிறார்கள் என்று சொல்லும்படியாக இருந்தது. ஆனால் எல்லோரும் செய்திருக்கிறார்கள். முப்பதாயிரம் நாற்பதாயிரம் செலவழித்தார்கள், சாதிகளைப் பற்றிச் சொல்லி வோட்டுக்கேட்டார்கள் என்றால் அப்படிச் செய்தவர்கள் காங்கிரஸ்காரர்கள் மட்டும்தானா என்று பார்க்கவேண்டும். ஒரு குறைக்குப் பின் மற்றொரு குறையாக அவர்கள் அடுக்கிக்கொண்டே போகிறார்கள். உண்மையில் நான் சொல்கிறேன். தஞ்சாவூர் பற்றி நண்பர் கருணாநிதி சொன்னார்கள். அவர்களுக்குக் கடவுள் பேரில் நம்பிக்கை இருக்குமோ என்னமோ எனக்குத் தெரியாது. ஆனால் அவர் தம் மனச்சாட்சியைத் தொட்டுச் சொல்லட்டும், ' நான் 9 ஆயிரம் ரூபாய்க்குள் தான் செலவழித்தேன் " என்று. நான் ஒத்துக்கொள்கிறேன். திரு. ஸி. சுப்ரமணியம் அவர்கள் " நாமெல்லாம் 9 ஆயிரம் ரூபாய்க்குமேல் செலவழித்துவிட்டுத் தான் வருகிறோம் " என்று இந்தச் சபையில் சொன்னது எனக்கு ஞாபகம் இருக்கிறது. ஆகவே இப்படி ஒருவரையொருவர் குற்றம் சாட்டி இங்கே பேசுவதில் பயன் இல்லை. மக்களுடைய நன்மைக்காக, நாட்டின் நன்மைக்காக நல்ல திட்டங்களைச் சொல்லட்டும், ஆக்கபூர்வமான யோசனைகளைச் சொல்லட்டும், நான் கேட்டுக்கொள்கிறேன். நான் கூடப் பேசும்போது சில பல காரியங்கள் செய்யப்படவேண்டுமென்று கூறினேன். ஆளும் கட்சியில் இருப்பவன் என்பதற்காக எல்லாவற்றையும் ஆதரித்தே பேச வேண்டுமென்பதில்லை. ஆக்கபூர்வமாக அவர்கள் எடுத்துச் சொன்னால் நன்மையாக இருக்கும். அதைவிட்டு சிறிய சிறிய குறைகளை, அவர்களுக்கு சாதகமாக இருக்கக்கூடிய குறைகளை எடுத்துச் சொல்லிக்கொண்டே போனால் அது அவர்களுக்கும் நல்லதல்ல, நாட்டிற்கும் நல்லது அல்ல என்று சொல்லிக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* SRI C. CHIRANJEEVULU NAIDU : Mr. Speaker, Sir, while thanking the Governor for his address yesterday to the joint sitting of both the Houses, I would like to point out that His Excellency has not mentioned any relief measures for Tiruttani in the matter of extending certain Madras Acts and also in the matter

24th April 1962] [Sri C. Chiranjeevulu Naidu]

of land revenue. Taxes that are in vogue in the Andhra Pradesh are being collected from the ryots and at the same time under the Panchayats Unions Act, cess and surcharge are being collected. As per the Andhra Pradesh Acts taxes are collected in Tiruttani area under the Commercial Crops Act, Wet Assessment Act, Surcharge Act, A Class Resources Enhancement Act, Betterment Act, etc. Under these Acts a lot of revenue is being collected and at the same time cess and surcharge are being collected under the Panchayats Union Act. This is really a hardship to the agriculturists in the Tiruttani taluk. Therefore, I request the Government to immediately consider the desirability of extending all the Madras Acts and repealing the Andhra Pradesh Acts. 12-30 p.m.

In the matter of services, a lot of disparity is there. The services of non-gazetted officers and other personnel transferred from Andhra Pradesh have not been properly integrated and their emoluments also are not on a par with the scales of pay of the Madras Government. Most of the officers and other service personnel are really undergoing hardship in respect of their emoluments and their status. Also ignoring certain provisions of the Alterations of the Boundaries Act of 1959, the Government have issued orders evaluating certain services in respect of secondary grade teachers which has resulted in the reduction of their status to that of the higher grade teachers. Consequently fifty to sixty teachers have been affected and their scale of pay has been reduced to Rs. 60 whereas a secondary grade teacher is drawing Rs. 100 in the Madras State. The course in respect of secondary grade teachers was introduced in the composite Madras State as an emergency course. The applications of S.S.L.C. students who had secured more than 300 marks were entertained and were given training in the secondary grade. The entire syllabus was covered and they were taught all the lessions. But now I see from the proceedings of the Director of Public Instruction that the secondary grade certificates are being evaluated as higher grade. The Government cannot deal with these people in that way and reduce their status. So, I request the Government to reconsidar the matter.

In the matter of supply of electricity to our areas, I submit that the minimum guarantee of Rs. 50 and also the duration of time are causing us a lot of trouble because our area is a very backward area and there is no water resource and water is available for a few hours only in certain places. By demanding Rs. 50 and also fixing time we are forced to pay every year about Rs. 100 more than the rate for the power that we are actually consuming. So, I request the Government to declare our area as a backward area and see that certain relief measures are given to Tiruttani Taluk.

Regarding mid-day meals scheme, I would like to say that the scheme is good. I submit that the successful nature of the scheme is questioned in several areas. Prohibition is very good but the success of the Prohibition has to be evaluated. So also, the

[Sri C. Chiranjeevulu Naidu] [24th April 1962

mid-day meals scheme has to be thoroughly investigated and we must see how far the mid-day meals scheme is functioning in village parts.

So far as compulsory primary education is concerned, I request the Government to frame proper rules so that it may facilitate the Education Department and the management also to take proper measures to see that children are properly brought to the schools and given proper education.

Elections have been conducted peacefully and I congratulate the public servants for having given assistance to the general public to exercise their franchise. Regarding the aftermath of elections, I would request the Government to take notice of certain incidents which have occurred in the Tiruttani area. Certain people are trying to harass and also injure the feelings of the voters who had voted against the Congress. In one village, fines to the tune of Rs. 2,000 were collected and a complaint against a Police Sub-Inspector was also brought to the notice of the Government but so far no action has been taken. Such instances have occurred in about half a dozen villages in the name of the community and still harassment is there and fines are being collected. So I request the Government to go immediately into the matter and take proper and necessary action against those people who want to injure the feelings of those who voted against the Congress.

12 30 p.m. Thank you, Sir.

* SRI K. P. PALANISAMY : கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்கள் உரையைப் பாராட்டி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். 1962-ம் ஆண்டுப் பொதுத் தேர்தல் சுமுகமாக முடிந்திருக்கிறது என்று கவர்னர் பெருமான் பாராட்டியிருப்பதை வரவேற்கிறேன். இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதலாண்டிலேயே ஒதுக்கப்பட்ட தொகை 48 கோடி ரூபாயை விட 2 கோடி ரூபாய் அதிகமாகச் செலவழிக்கப்பட்டிருக்கிறது என்றும், இரண்டாவது ஆண்டுக் காலத்தில் 55 கோடிக்கும் மேல் 5 கோடி ரூபாய் அதிகமாகச் செலவாகும் என்றும் கவர்னர் உரையிலே காணப்படுகிறது. இதிலிருந்து, நமக்கு அனுமதிக்கப்பட்ட தொகையை விட அதிகம் தேவைப்படுகிறது என்பது தெரிகிறது. ஆகவே வரக்கூடிய இந்தக் காலத்திலே வரி போட வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. வரி போடாமல் திட்டத்தை நிறைவேற்றுவது என்பது முடியாது. வரி போட்டு மக்களுக்கு வேண்டிய திட்டத்தை நிறை வேற்றுவதில் தவறில்லை. சினிமாவுக்குப் போனால் அதிலே ஒரு பகுதி வரியாகக் கட்டுகிறார்கள். நமக்குத் தெரியாமலே அந்த வரி வசூலிக்கப்படுகிறது. இந்த மாதிரி வரிகளும், வருவாய் அதிகமாக உள்ளவர்களுக்குப் போடக்கூடிய முறையிலும் வரி போட வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், கிராமக் கைத்தொழில், விவசாயம், கல்வி இவைகளுக்கெல்லாம் அதிகப்படியான பணம் கொடுத்து நல்ல முறையில் அவைகளுக்கான திட்டங்கள்

24th April 1962] [Sri K. P. Palanisamy]

உருவாக்கப்படவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. கைத் தொழில் நம் நாட்டில் பெருகி வருகிறது, அதைப் பாராட்டு கிறேன். இந்த 12 ஆண்டுகளில் எல்லாக் கிராமங்களிலும் கன ரகத் தொழிற்சாலைகளும், காட்டேஜ் இன்டஸ்ட்ரீஸ் போன்றவை களும் பரவி வருகின்றன. அதற்கு வேண்டிய உதவிகளை மாகாண சர்க்காரும், மத்திய சர்க்காரும் செய்து வருகிறார்கள். இப் பொழுது 1,37,000 பம்ப் செட்டுகளும் கனக்ஷன் கொடுக்கப்பட்டு விவசாயம் செய்ய அவை பயன்பட்டு வருகின்றன. ஆனால் ஒரு சில குறைபாடுகள் இருப்பதையும் சொல்லித்தான் ஆக வேண்டும். ஹரிஜன மக்களில் ஒரு பகுதியினர் விவசாயத்தில் ஈடுபட்டிருப்ப வர்கள் இந்த பம்ப் செட்கள் வருவதற்கு முன்னர் "பறி" தைக் கும் தொழிலை செய்து வந்தார்கள். இந்த பம்ப் செட்கள் வந்த பிறகு அந்தத் தொழில் செய்து வந்தவர்களுக்கு இப்பொழுது வேலை வாய்ப்பு இல்லாமல் அவர்கள் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே 12 30 p.m இதைக் கவனித்து மாற்று வேலை தேடித்தருவது அரசாங்கத்தின் கடமையாகும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அவர் களுக்கு கிராமக் கைத்தொழில்களுக்கு கூட்டுறவு முறையில் அதிகப் பணம் கொடுத்து அவர்களுக்கு வேலை வாய்ப்பு தேடித் தரவேண்டு மென்று அரசாங்கத்தை கேட்டுக் கொள்கிறேன். நடைமுறையில் பல கஷ்டங்கள் இருந்தாலும் அவர்களுக்கு கூட்டுறவு முறையில் விவசாயப் பண்ணை, கைத் தொழில்கள் இவைகள் ஏற்படுத்திக் கொடுத்து அவர்களுக்கு வேண்டிய உதவிகள் அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். விவசாயத்தைப் பெருக்க அதிகப் பணம் கொடுக்கப் பட்டிருக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஹரிஜன சமு தாயத்தைச் சேர்ந்தவர்களுக்கு கிணறு வெட்ட 1,500 ரூபாய் மான்யமாக அளிக்கப்படுகிறது. மற்ற விவசாயிகளுக்கு 2,000 கொடுத்தால் கால் பங்கு சப்ஸிடியாக தரப்படுகிறது. கோவை யைப் பொறுத்தவரையில் அங்கு கிணறுகள் ஆழமாக வெட்ட வேண்டியிருப்பதால் கொடுக்கப்படுகிற தொகையைக் கொண்டு கிணறு வெட்ட முடியாமலிருக்கிறது. ஆகவே இதைக் கவனித்து அதிகத் தொகை கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு அதை சப்ஸிடியோடு சேர்த்துக் கொடுத்தால் கிணறுகள் வெட்டி நன்கு விவசாயத்தை பெருக்க முடியும் என்பதைத் தெரிவித்துக் கொள் கிறேன். கோவை மாவட்டம் தொழில் பிராந்தியத்தைச் சேர்ந்தது. கோவை சுற்றுப்புரத்தில் ஏழெட்டு பெரிய பஞ்சாயத்துக்கள் இருக்கின்றன. 30 000 ஜனத்தொகை வரைகூட இருக்கிறது. அங்கு குடிதண்ணீர் கஷ்டம் இருக்கிறது. சிறுவாணியிலிருந்து கிடைக்கும் தண்ணீரானது, 30 ஆண்டுகளுக்கு முன்னிருந்த ஜனத்தொகையை வைத்து ரிசர்வாயர் கட்டப்பட்டு கொடுக்கப்பட்டு வந்தது. இப்பொழுது அங்கு ஜனத்தொகை பெருகி 4 லட்சம் வரை பெருகியிருக்கிறது. ஆகவே ஜனத் தொகைக்கு ஏற்ற அளவில் தண்ணீர் இல்லாமல் மக்கள் தண்ணீ ருக்கு கஷ்டப்படுகிறார்கள். சிறுவாணி ரிசர்வாயரை ஆழப் படுத்தி, அகலப்படுத்திக் கொடுக்க பணம் கொடுத்து உதவி செய்யவேண்டுமென்று மகஜர் கொடுத்திருக்கிறோம். மத்திய

சர்க்காரிடமும் இதைச் சொல்ல வேண்டும். இந்தப் பிரச்னையைக் கவனிக்க வேண்டுமென்று மந்திரிகளிடமும் சொல்லியிருக்கிறோம். அதோடு அங்குள்ள முனிசிபாலிட்டியோடு அதன் அருகில் இருக்கிற பஞ்சாயத்துக்களை சேர்த்து அதை ஒரு கார்ப்பரேஷனாக்கவேண்டுமென்று மக்கள் விரும்புகிறார்கள். ஒரு சிலர் அப்படி வந்தால் அதிகப்படி வரி கொடுக்கவேண்டுமே என்று ஏதோ செய்து அது தடைப்பட்டு வருவதாகக் கூறுகிறார்கள். ஆகவே, இந்தப் பிரச்னையை ஆலோசித்து அதை ஒரு கார்ப்பரேஷனாக மாற்ற சர்க்கார் வேண்டிய உதவிகள் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். சிறுவாணிக்கு தண்ணீர் கொடுக்க கோவை சர்க்கார் தடங்கலாக இருப்பதாகத் தெரிகிறது. இதையும் சர்க்கார் பரிசிலனை செய்து அவர்கள் உத்தரவு பெற்று அதைச் சீக்கிரம் செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். பின்னர், பீளமேடு, சிங்கநல்லூர் போன்றயிடங்களில் தொழிலாளர்கள் அதிகமாக வாழ்கிறார்கள். அவர்களும் தண்ணீருக்காக கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். பீளமேட்டிலிருந்து 20 மைல் தூரத்தில் பவானியில் ஒரு அணை கட்டுகிறார்கள். மேட்டுப்பாளையத்திலிருந்து பெரியநாய்க்கன்பாளயத்திற்கு பெரிய பைப்கள் போட்டு தண்ணீர் கொண்டு போகிறார்கள். அந்த பைப்பின் டயமீட்டரை அதிகப்படுத்தி, அதிகப் பணம் செலவானாலும் சரி, செலவு செய்து கோவை நூல் பகுதிக்கு அந்தத் தண்ணீரை கொடுத்தால் நன்றாகயிருக்கும். அதற்கு வேண்டிய பண உதவி அளிக்க மக்கள் தயாராயிருக்கிறார்கள். பப்ளிக் காண்ட்ரிப்யூஷன் எவ்வளவு வேண்டுமானாலும் அவர்கள் கொடுக்கத் தயார். ஆகவே, இதற்கு வேண்டிய உதவிகள் செய்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, பள்ளிகள் ஜூனில் திறக்க இருக்கின்றன. நண்பர் சங்கரன் அவர்கள் சொன்னதுபோல் ஒரு நபருக்கு 1,500 ரூபாய் வருட வருமானம் இருந்தால் அவர்கள் பிள்ளைகள் சம்பளம் கட்டவேண்டுமென்றிருப்பதாகச் சொன்னார்கள். அது உண்மை. தொழிலாளர்கள், ஆண்களும், பெண்களும் 1,500 வரை சம்பாதிக்கிறார்கள். ஆகவே அவர்கள் குழந்தைகள் இலவசமாக படிக்க முடிவதில்லை. ஆகவே ஜூனுக்குள் இதை 2,000 ரூபாய் என்றாவது ஆக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடிக்கிறேன். வணக்கம்.

* **SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM**: சட்டமன்றத் தலைவர் அவர்களே, மதிப்பிற்குரிய கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரையை ஆமோதிக்கிறவகையில் நான் ஒரு சில வார்த்தைகள் கூற ஆசைப்படுகிறேன். எனது தகவல் இல்லாமலேயே எனது பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. தங்களது கட்டளையை மீறக்கூடாது என்ற முறையிலே நான் உடனே எழுந்து பேச உடன்பட்டேன். கவர்னர் பெருமான் அவர்களது உரையை வாசித்துப் பார்த்தால் நமது நாடு சுதந்திரம் பெற்ற பிறகு, மக்களாட்சி ஏற்பட்ட பிறகு திட்டங்கள்மூலம் நாம் எவ்வளவு தூரம் முன்னேற்றம் அடைந்திருக்கிறோம், எந்த வகையில்

24th April 1962] [Srimathi P. K. R. Lakshmikanthan]

முன்னேற்றம் அடைய முடியும் என்ற கொள்கைகளையெல்லாம் நல்லமுறையில நிரூபிக்கவும் நலவகையிலும இந்த உரை அமைந்திருக்கிறது. ஒரு சில எதிர்கட்சியினர் பேசும்போது உரையில் இருக்கிற கொள்கைகளைப்பற்றி பேசாமல் ஏதோ தங்கள் தொகுதியில் இது செய்யப்படவில்லை, அல்லது தேர்தலில் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் நல்ல முறையில் வேலை செய்ய வில்லையென்றெல்லாம் குறிப்பிட்டார்கள். உலகத்திலேயே, ஜன நாயக அடிப்படையில் தேர்தல் நடப்பது இந்தியாவில்தான் மிக மிக சிறப்பாகவும், அமைதியான முறையிலும் தேர்தல் நடைபெற்றிருக்கிறதென்பதை எல்லோரும ஒப்புக்கொள்ளுகிறார்கள். மூன்றாவது பொதுத் தேர்தல் மிக அமைதியான முறையில் நன்கு நடைபெற்றிருக்கிறது என்பதை எதிர்க்கட்சியினர், ஆளும் கட்சியினர் எல்லோரும் ஆமோதித்துப் பாராட்டவேண்டும். ஒவ்வொரு தேர்தலிலும் ஏற்படுகிற அனுபவத்தையொட்டி சர்க்கார் அதற்கேற்ற முறையில் ஆவன செய்தது குறித்து நானும் எனது சார்பில் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். 1957-ம் வருடத்தில்கூட ஆரம்பத்தில் கவர்னர் பெருமான் உரைமீது விவாதம் நடக்கும்போது எதிர்க்கட்சியிலிருந்து எல்லோரும் அப்படித்தான் பேசிக்கொண்டார்கள். இப்பொழுது அந்த முறையில பேசுவதுபற்றி நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். கவர்னர் பெருமான் அவர்கள் உரையில், தமிழ் நாட்டிலுள்ள தொழில்கள் பற்றியும், இனி ஏற்படயிருக்கிற தொழில்கள் பற்றியும், ஆராய்ச்சியில் இருக்கிற ஒவ்வொரு துறையைப் பற்றியும் நமக்கு எடுத்துரைத்து இனி வருங்காலத்தில் எப்படி எந்தளவு தொழில்துறை பெருகப்போகிறது என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். அவைகளை நன்கு சிந்தித்துப் பார்த்து எங்கு எங்கு என்னென்ன தொழில்கள் ஏற்படப்போகிறது, அதில நமது பொறுப்பு என்ன, அதற்கு நாம் எப்படி ஒத்தாசை செய்வது என்பதைப் பற்றியெல்லாம் சட்டமன்ற உறுப்பினர்களாக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற நாம் சிந்தித்துப் பார்த்து அதற்கு ஆவன செய்வதுதான் நமது கடமை என்று எடுத்துக்கூற விரும்புகிறேன்.

ஆகவே, நம்முடைய நாட்டிலே கொள்கையைப் பொறுத்த வரையில் தனியார் துறையும், சர்க்கார் துறையும் சேர்ந்துதான் இருக்கவேண்டும். இந்த இரண்டு துறைகளும் சேர்ந்து ஒத்து போகக்கூடிய அளவில்தான் நாம் கொள்கையை வகுத்திருக்கின்றோம். ஆகவே ஒருசிலர் தனியார் துறை மட்டும் இருந்தால் போதும் என்று சொல்லுவதோ அல்லது ஒருசிலர் எல்லாவற்றையும் சர்க்கார் துறையிலே இருக்கவேண்டும் என்று சொல்லுவதோ நம்முடைய நாட்டுக்கு நல்லதல்ல, அது நல்ல பண்பாடும் அல்ல. இரண்டும் சேர்ந்த ஒரு கொள்கைதான் நம்முடைய நாட்டுக்கு நல்லது என்பதை நாம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். எப்படியாவது நம்முடைய நாட்டில் தொழில் வளம் பெருகவேண்டும். ஏனென்று கேட்டால் பல ஆண்டுகள் அடிமையாக இருந்த நாடு நம்முடைய நாடு, எந்தவிதமான தொழில்களும் இல்லாமல்

[Srimathi P. K. R. Lakshmikanthan] [24th April 1962

இருந்த நாடு. இம்மாதிரியான ஒரு நாடு சீக்கிரமாகவே தொழில்களில் முன்னேற்றம் அடையவேண்டும், பல கனரகத் தொழில்கள் இந்த நாட்டில் ஏற்படவேண்டும் என்று நாம் எண்ணும்போது அதற்கு இரண்டு துறைகளிலும் தொழில்கள் வளர்ந்தாகவேண்டும். அந்த முறையில்தான் இரண்டு துறையிலும் தொழில்கள் பெருகிக்கொண்டு வருகின்றன. அதை நாம் பாராட்டவேண்டும். ஆகவே ஜனநாயக முறைப்படி பார்க்கும்போது, ஆளும் கட்சியினர் அரசாங்கத்தை எப்போதும் பாராட்டிக்கொண்டிருக்கிறார்கள், மந்திரிசபையினரை புகழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்று மதிப்பிற்குரிய சில எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். ஜனநாயக முறையைப் பார்க்கும்போது, ஆளும் கட்சி அங்கத்தினர்கள் எப்போதும் சர்க்கார் செய்கின்ற காரியங்களைப்பற்றித்தான் சொல்லிக்கொண்டிருப்பார்கள். எதிர்க்கட்சியிலுள்ளவர்கள்தான் குறைகளைப்பற்றி சொல்லவேண்டும். எல்லோருமே இருக்கின்ற குறைகளையேமட்டும் எடுத்துச் சொல்லிக்கொண்டிருந்தால், அதற்கு நேரம் போதாது. குறைகளை எடுத்துச்சொல்லக்கூடிய வேலை எதிர்க்கட்சியினருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆளும் கட்சி அங்கத்தினர்களுக்கும் குறைகள் தெரியும். நமக்கிருக்கின்ற குறைகளை தகுந்த இடத்தில் எடுத்துக் கூறி அவைகளை நிவர்த்திசெய்வதற்கு யோசனைகள் சொல்லிக்கொண்டுதான் இருக்கிறோம். அதற்காக அரசாங்கத்தை குறை கூறுவதால்மட்டும் எந்தவிதமான பிரயோசனமும் ஏற்பட்டுவிட முடியாது. எதிர்க்கட்சியினர் கூறுவதுபோன்று குறைகள் இல்லாத அரசாங்கம் எங்குமே இருக்க முடியாது. ஆகவே நம்முடைய லட்சியத்தின் பிரகாரம், இந்த நாட்டில் ஒரு சோஷியலிஸ சமுதாய அமைப்பை ஏற்படுத்துவதற்கான முயற்சியில் நாம் ஈடுபட்டிருக்கிறோம். அதற்கானவகையில் எல்லா வேலைகளையும் நாம் செய்து கொண்டிருக்கிறோம், நூற்றுக்கு நூறு வெற்றி பெறக்கூடியவகையில், பல முயற்சிகளில் நாம் ஈடுபட்டிருக்கிறோம். நாம் சுதந்திரம் பெற்று சில ஆண்டுகள்தான் ஆகிறது. இருபத்தைந்து ஆண்டு காலத்திற்குள் நாம் வெகுவாக முன்னேற முடியும் என்ற நம்பிக்கை நமக்கிருக்கிறது. சுதந்திரமடைந்த குறுகிய காலத்திற்குள் நாம் பெருமளவில் முன்னேறியிருக்கிறோம் என்று நாம் ஒவ்வொருவரும் தலைநிமிர்ந்து சொல்ல முடியும். இந்தச் சந்தர்ப்பத்தில் பலரும் பல குறைகளை எடுத்துச்சொல்லியிருக்கிறார்கள். இதைப்பற்றி எல்லாம் பட்ஜெட் விவாதத்தின்போது, சொல்லுவதாக இருந்தால் நல்ல பலனுள்ளதாக இருக்கும்.

கல்வியைப்பற்றி சொல்லும்போது, பல அங்கத்தினர்களும் கூறினார்கள், 1,200 ரூபாய் வருட வருமானம் வருகின்றவர்களுக்கு மட்டும்தான் இப்போது கல்விச் சலுகை கிடைக்கிறது என்று. அதாவது மூன்றாவது ஃபாரம் முதல் ஆறாவது ஃபாரம் வரையிலும் சலுகை கிடைக்கிறது. ஆயிரத்து இருநூறு ரூபாய் என்று வைத்துக் கொள்ளும்போது, சாதாரணமாக ஒரு பியூன் சம்பளம் கூட இந்த அளவுக்கு வருகிறது. ஆகவே இந்த தொகைக்குமேல் இருந்தால், சலுகை கிடையாது என்றிருக்கிறது. ஆகவே இந்த

24th April 1962] [Srimathi P. K. R. Lakshmikantham]

தொகையை 1,200 என்றிருப்பதிலிருந்து 2,000 என்று கூட்ட வேண்டும் என்று சொன்னதை நானும் திருப்பிச் சொல்கிறேன். அதை உடனடியாக மாற்றுவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்து வருகிற ஜூன் மாதத்திலிருந்து 2,000 ரூபாய் என்றிருந்தால் மிகவும் பலனுள்ளதாக இருக்கும் என்பதை இந்த மன்றத்தில் தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். அது மட்டுமல்ல, தொழிற்கல்வி படிக்கும் மாணவர்களுக்கு 60 சதவிகிதம் மார்க் இருந்தால்தான் சென்ட்ரல் கவர்ன்மெண்ட் ஸ்காலர்ஷிப் கிடைக்கும் என்றிருக்கிறது. இதன் காரணமாக பல மாணவர் களுக்கு இந்த ஸ்காலர்ஷிப் கிடைப்பதில்லை. ஆகவே அரசாங்கம் வேறு பல காரியங்களுக்கு கடன் வசதி செய்து கொடுப்பதுபோல், சென்ட்ரல் கவர்ன்மெண்ட் ஸ்காலர்ஷிப் கிடைக்காமலும், அரிஜன் வெல்பேர் ஸ்காலர்ஷிப் கிடைக்காமலும் இருக்கின்ற மாணவர் களுக்கு, அவர்கள் தொழிற்கல்விக்கு படிக்கவேண்டும் என்று விருப்பம் இருந்தால், அவர்களுக்கும் இந்த கடன் வசதி செய்து கொடுப்பதற்கு வழிவகை செய்து கொடுத்து, தொழிற்கல்வி படிக்கின்ற மாணவர்களுக்கு ஊக்கம் அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதற்கடுத்தபடியாக, விலைவாசி உயர்வைப்பற்றி நாம் சொல்லி யாகத்தான் வேண்டியிருக்கிறது. இன்றைக்கிருக்கின்ற சூழ் நிலையில் கிராமப்புறத்திற்கும், நகரப்புறத்திற்கும் வெவ்வேறான சூழ்நிலை இருந்துகொண்டிருக்கிறது. விலைவாசியை குறைத்தால் கிராமப்புறங்களிலுள்ளவர்களுக்கு விரோதமாக இருக்கும் என்று பலர் கூறுகின்றார்கள். ஆனால் அதே விலைவாசி உயர்வு நகரப் புறங்களிலுள்ளவர்களுக்கு மிகவும் வேதனை கொடுக்கக்கூடியதா யிருக்கிறது. இதை கனம் அமைச்சர் அவர்கள் உணர்ந்திருக் கிறார்கள். அவர்கள் ஓரிடத்தில் பேசும்பொழுது, இதிலுள்ள குறையை நீக்கவேண்டும் என்று சொன்னால், பொருள்களை உபயோகிப்பவர்கள் எல்லாம் கூட்டுறவு இயக்கத்தின்மூலம் தங்கள் பொருட்களை பெற்றுக்கொண்டால்தான் இந்த விலைவாசி உயர்வை தடுக்க முடியும், அது இல்லாதவரை இதைத் தடுப்பது என்பது இயலாத காரியம்தான் என்று கூறியிருக்கிறார்கள். அதே சமயத்தில் இதை எந்தவிதத்திலாவது தடுத்துத்தான் ஆக வேண்டும் என்று கூறியிருக்கிறார்கள். விலைவாசி உயர உயர தொழிலாளர்களின் சம்பளத்தை அதிகப்படுத்தவேண்டியிருக் கிறது. அதேபோன்று கெஜட் பதிவில்லாத அதிகாரிகளின் சம்ப ளத்தை அதிகப்படுத்தவேண்டியிருக்கிறது. அதே நேரத்தில் அரசாங்கத்தினுடைய செல்வாக்கும் கெட்டுக்கொண்டே போகிறது. இதைவிட நடுத்தரக்காரர்களின் நிலைமை இன்னும் மோசமாகிக்கொண்டே இருக்கிறது. சிலர் ஒரு வேளை உணவுக்குக் கூட வழியில்லாமல் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே எந்த முறையிலாவது இந்த விலைவாசி ஏற்றத்தை தடுக்க வேண்டும். அதற்கு ஓர் உபாயத்தை தேடிப்பிடித்தாகவேண்டும். மேலும், நயா பைசா மாற்றம் வரும்போது பொருட்களின் விலையை எல்லாம் உயர்த்தினார்கள். அதே போன்று இப்போது

[Srimathi P. K. R. Lakshmikantham] [24th April 1962

எடைகளை மெட்ரிக் முறையில் மாற்றவேண்டும் என்று வரும் போது விலைவாசிகள் எல்லாம் உயர்ந்துகொண்டேயிருக்கிறது. முன்பு ஒரு விசை அளவுக்கு இருந்த விலையை இப்போது முக்கால் விசை எடை அளவுள்ள ஒரு கிலோகிராம் அளவுக்கும் நிர்ணயித்துவிடுகிறார்கள். ஒரு விசை அளவுக்குள்ள விலைதான் ஒரு கிலோகிராம் அளவுக்கும் கொடுக்கவேண்டியிருக்கிறது. இப்படி விலைகள் உயர்ந்துகொண்டேபோகுமானால் திட்டச் செலவும் அதிகரித்துக்கொண்டுதான் போகும். அதற்கான வழி வகைகளையும் நாம் செய்தாகவேண்டும். சாதாரணமாக நகரத்தில் 100 ரூபாய் சம்பளம் வாங்கும் ஆட்கள் எல்லாம் எப்படி வாழ்க்கையை நடத்துவது, எப்படி காலத்தை சமாளித்துக் கொள்வது என்று கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அதே நோத்தில் சொல்லுகிறோம், வாங்கும் சக்தி அதிகமாக ஆகியிருக்கிறது என்று. உண்மையாக வாங்கும் சக்தி அதிகமாக ஆகியிருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. இருப்பினும்கூட சாதாரணமாக 100 ரூபாய்வரை வருமானமுடையவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். தொடர்ந்து விலைவாசி உயர்வு ஏற்படுமானால் மிகவும் கஷ்டத்திற்குக் கொண்டுபோய் விடும் என்பதை மிகப் பணிவாகவும் அன்போடும் எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

அதற்கு அடுத்தபடியாக, கைநெசவுத் தொழிலாளர்களுக்கு எத்தனையோ முறையில் நாம் நன்மைகள் செய்திருக்கிறோம். 1-00 p.m. கூட்டுறவு முறையில் சேர்ந்த நெசவுத் தொழிலாளர்களுக்கு பல நன்மைகள் செய்திருக்கிறோம். அதில் அவர்களுக்கு வீடு கட்டும் திட்டமும் ஏற்படுத்தியிருக்கிறோம். ஆனால் கூட்டுறவில் சேராத நெசவுத் தொழிலில் ஈடுபட்டவர்களுக்கு வீடு கட்டும் திட்டமோ வேறு எந்த விதமான திட்டமோ நாம் செய்யவில்லை. அதற்கு ஒரு மாதிரித் திட்டம்--பைலட் ஸ்கீம்—ஏற்படுத்தி, கூட்டுறவு முயையில் சேராத நெசவாளர்களுக்கு வீடு கட்டும் திட்டம் என்று ஏற்படுத்தி, அதைக்கொண்டு உற்பத்தி செய்கிறவர்கள் அவர்களுக்கு என்ன செய்யவேண்டும், நம் சர்க்கார் என்ன செய்ய வேண்டும், எவ்வளவு பணம் ஒத்தாசை செய்யவேண்டும் என்று திட்டத்தை வகுத்து அதன் பிரகாரம் அவர்களுக்கும் வீடுகள் கட்டிக்கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, மறுமுறையும் கவர்னர் பெருமான் உரையை மிக நிறைந்த மனதுடன் ஆமோதித்து, எனது பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொண்டு எனது பேச்சை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* **SRI S. J. RAMASWAMI :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இந்த மன்றத்தில் கவர்னர் பெருமான் அவர்களின் உரையிலுள்ள குறைகளைச் சுட்டிக்காட்டிப் பேசுகிற வாய்ப்பு எதிர்க் கட்சிகளாகிய எங்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. நாங்கள் குறைகளைச் சுட்டிக் காட்டுகிறோம் என்றால் ஆளும் கட்சி அங்கத்தினர்கள் கோபப்படுவதில் பயன் ஒன்றும் இல்லை என்று அவர்களுக்குக் கூறிக்கொள்ளுகிறேன்.

24th April 1962] [Sri S. J. Ramaswami]

முதலாவதாக ,கவர்னர் பெருந்தகையார் அவர்களுடைய உரையில் பொதுத் தேர்தலில் மக்கள் நடந்துகொண்ட முறையைப் பற்றி அவர்கள் பாராட்டுக்குரியவர்கள் என்ற முறையிலே தெரிவித்திருக்கிறார்கள். பாராட்டுக்குரியவர்கள் என்பதைவிட பழி வாங்கப்படுகிறார்கள் என்பதுதான் பொருந்தும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஏனென்றால், என்னுடைய தொகுதி அரக்கோணம் தொகுதி. அரக்கோணம் தொகுதியிலே இந்தத் தடவை நடந்த தேர்தலில் சில பேர்கள் பழிவாங்கப்பட்டார்கள். மேல்களத்தூர் என்ற கிராமத்தில். அந்த கிராமத்தில் 42 பேர்கள் தேர்தலுக்குப் பிறகு அடி வாங்கி அவர்கள் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். இதுவரையில் போலீஸ் அவர்களை அடித்தவர்கள்மீது எந்தவிதமான வழக்கும் தொடராமல் அடிபட்டவர்கள்பேரில் கேஸைப்போட்டு அவர்களை கோர்ட்டுக்கு இழுத்துக்கொண்டு வருகிறார்களே தவிர, அவர்களுக்குச் சரியான பாதுகாப்பு அளிக்கத் தவறிவிட்டார்கள் என்று நான் குற்றம் சாட்டுகிறேன். அந்த வகையிலேதான் அவர்களுடைய குற்றங்கள் அமைந்து கொண்டிருக்கின்றன. உண்மையாக நாங்கள் ஒவ்வொரு திட்டத்தையும் எடுத்துப் பேசும்போது எந்தெந்தக் குறைகள் இருக்கின்றன என்று சொல்லுகிறோமோ அந்தக் குறைகளைப் பார்க்காமல், கனம் அங்கத்தினர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்றால், தோழர் கருணாநிதி அவர்கள் பேசும்போது, இடுகாட்டுக்கு பிணத்தை எடுத்துக்கொண்டு வரப்பின்மீது போகும் போது—போக முடியாமல் பிணம் கீழே விழுந்து பிணத்தைத் தூக்கிக்கொண்டு போகின்றவர்கள் பிணத்தைக் கட்டிக் கொண்டு புரண்டார்கள் என்று குறிப்பிட்டார்கள். அப்படிப் பேசும்போது எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர்கள் மின்சார வசதி இல்லை என்று குறிப்பிடுகிறார்கள் என்று கொண்டார்களே தவிர வரப்பின்மீது நடக்கவேண்டியிருக்கிறது என்பதை விட்டு விட்டு, எங்களைத் தாக்கவேண்டும் என்ற ஒரே குறிக்கோளோடு குறை கூறினார்களே தவிர வேறு ஒன்றுமில்லை. ஒவ்வொரு வார்த்தைக்கும், ஒவ்வொரு எழுத்துக்கும் எங்களை எதிர்க்கவேண்டும் என்ற முறையில் பேசுகிறார்களே தவிர நாங்கள் எடுத்துச் சொல்லுவதில் என்ன தவறு இருக்கிறது என்று எடுத்துக் காட்டத் தவறிவிட்டார்கள். 1-00 p.m.

ஐந்தாண்டுத் திட்டம் என்று போட்டு இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் முடிந்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே நாம் இருக்கிறோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். கவர்னர் அவர்கள் உரையைப் படிக்கும்போது இன்னும் வரிகளைப் போடுவதற்கு ஒரு மறைமுகமான எச்சரிக்கை என்றுதான் நாங்கள் கருதுகிறோம். நிதி அமைச்சர் அவர்கள் மிகவும் அனுபவம் உடையவர்கள், மிக மிகப் பாராட்டுதலைப் பெற்றவர்கள், எங்களிடத்திலே விட இங்கே நிதி அமைச்சராக இருந்த கனம் சுப்பிரமணியம் அவர்கள்கூட அவர்களுடைய படத்தை கோவையில் திறந்து வைத்துப் பேசும்போது ஏதாவது சந்தேகம் ஏற்பட்டால் அமைச்சர் பக்த வத்சலம் அவர்களிடம் போய் நான்கூட நிவர்த்தி செய்து

[Sri S. J. Ramaswami] [24th April 1962

கொள்வேன் என்று கூடச் சொல்லியிருக்கிறார். அந்த வகையிலே அப்படி பாராட்டுதலைப் பெற்ற நிதி அமைச்சர் அவர்கள் இனி வரப் போகும் காலத்தில் நிச்சயமாக வரியை பொது மக்கள்மீது சுமத்த வேண்டாம் என்று சபாநாயகர் மூலமாகக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இதில் பார்த்தால் பாம்பிக்குளம்—ஆலியாறுத் திட்டம்பற்றி குறிப்பிட்டிருக்கிறார்கள். வட ஆற்காடு மாவட்டம் ஒரு வரண்ட மாவட்டம். பாலாறு என்று பெயர் இருக்கிறதே தவிர பாலைவனமாக இருக்கிறது. இதற்கு எந்த விதத்திலும் தண்ணீர் வருவதற்கு வசதி செய்யப்படவில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன். சஹாரா பாலைவனம் என்று ஏதோ எகிப்துக்குப் பக்கத்தில் இருக்கிறதாம். அம்மாதிரி வேலூரிலே இருக்கிறது, வட ஆற்காடு மாவட்டத்திலே இருக்கிறது என்று நிச்சயமாகக் கொள்ளலாம். அந்த அளவுக்கு நீரில்லாமல் வற்றி விவசாயி களுக்கு வசதி இல்லாமல் இருக்கிறது. அந்த ஆற்றிலே தண்ணீர் வருவதற்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்று கவர்னர் உரையில் குறிப்பிடப்படவில்லை என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கவர்னர் பெருமான் உரையில் இன்னும் பல விஷயங்களை விட்டு விட்டிருக்கிறார்கள். பாலாற்றிலே தண்ணீர் வர எந்த வழி செய்திருக்கிறார்கள் என்பதிலே சில நாட்களுக்கு முன் பத்திரி கைக் குறிப்பிலே பார்த்தோம். கோதாவரித் தண்ணீரை, கிருஷ்ணா தண்ணீரை பாலாற்றுக்குத் திருப்பி விடவேண்டு மென்று சர்க்கார் செய்த சிபாரிசுகளைப் பாராட்டினாலும் அதே நேரத்தில் இது வரையில் தண்ணீர் வராமல் வறண்டு இருக்கிறது. மேலும் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது என்று கவர்னர் பெருமான் உரையில் ஒரு வார்த்தைகூட இல்லை. பாலாற் றில் தண்ணீர் வந்தால்தான் வட ஆற்காடு மாவட்ட விவசாயிகள் ஓரளவுக்குப் பயன் அடைவார்கள்.

மின்சாரத்தைப் பற்றி குறிப்பிட்டிருக்கிறார் கவர்னர் பெருந் தகை தனது உரையில். மின்சாரத்தைப் பற்றி சொல்லவேண்டு மானால் இன்றைக்கு கன்ஸ்ட்ரக்ஷன் டிபார்ட்மெண்ட் இருக்கிறது. இந்த கன்ஸ்ட்ரக்ஷன் டிபார்ட்மெண்ட் வேலைகளை எடுத்துச் செய்துகொண்டு போகிறது. அந்த கன்ஸ்ட்ரக்ஷன் டிபார்ட் மெண்டைக் கலைத்துவிட்டு ஆட்குறைப்பு செய்து என்.எம்.ஆர்.-கள் வஞ்சிக்கப்பட்டிருக்கிறார்கள். பாட்டாளித் தொழிலாளிகள் வேலை யில்லாமல் திண்டாடுகிறார்கள். இந்த அளவுக்குப் போய்க் கொண்டிருந்தால் அவர்கள் பிரச்னை என்ன ஆவது என்று தெரிய வில்லை. இதைப்பற்றி கவர்னர் உரையிலே ஒரு வார்த்தைகூட இல்லை.

விவசாயத்திற்கு அடுத்தபடியாக நமது நாட்டிலே இருப்பது நெசவாளர் பிரச்னை. இந்த நெசவாளர் பிரச்னையில் அதிக கவனம் செலுத்தாதது வருந்தத் தக்கது என்று சபாநாயகர் மூலமாகத் தெரிவித்துக்கொள்கிறேன். நெசவாளர் பிரச்னையில் அவர்

24th April 1962] [Sri S. J. Ramaswami]

களுடைய வாழ்வு மலர்ந்ததா என்றால் ஒன்றும் இல்லை. விலைவாசி கூடிவிட்டதற்கு என்ன செய்திருக்கிறார்கள் என்று கூற வில்லை. அந்த அளவுக்கு கவர்னர் உரையில் ஒன்றும் இல்லை என்று கூறிக்கொள்கிறேன். விலைவாசிகளைக் கட்டுப்படுத்தி தொழிலாளர்களுக்கும், நெசவாளிகளுக்கும், விவசாயிகளுக்கும் எந்த வித நன்மையும் செய்யாது இந்த சர்க்கார் இருந்துகொண்டிருக் கிறார்கள் என்று பொருள் கொள்வார்களே தவிர வேறு அல்ல. குறைகளை நிவர்த்தி செய்து தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்பதுதான் எங்கள் திட்டம். காவேரி ஆற்றின் நீரைப் பயன்படுத்தி ஹொகனேக்கல்லில் ஒரு பெரிய மின்சார உற்பத்தி நிலையத்தை ஏற்படுத்தும் திட்டம் அரசாங்கத்தின் பரிசிலனையில் இருந்து வருகிறது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அத் திட்டம் பரிசிலனையில் இருக்கிறது என்ற அளவில் மட்டுமில்லாமல், அது உடனடியாக செயலில் கொண்டுவரப்பட்டு, அதை நிலைபெறச் செய்வதற்கு நமது அரசாங்கம் தீவிர கவனம் செலுத்தவேண்டு மென்று சொல்வதுதான் எங்களுடைய கோரிக்கையாகும்.

அடுத்து கவர்னர் உரையில், அணுசக்திக் கமிஷன் உயர்தரக் கமிட்டி ஒன்று, தமிழ் நாட்டின் அணுசக்தி மின்சார நிலையம் ஒன்றை அமைப்பதற்குத் தகுதியான இடத்தைத் தேடி வருகின்றது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதைப் பார்த்தால் இன்னும் அது செயல்முறையில் ஒன்றும் செய்திருப்பதாகத் தென்படவில்லை. செங்கல்பட்டு, தென் ஆற்காடு, அல்லது வட ஆற்காடு போன்ற இந்த மூன்று பின்தங்கிய மாவட்டங்களிலே ஏதாவது ஒரு மாவட்டத்தில் அமைத்தால் அல்லது தொடங்கினால் நல்லமுறையிலே அந்த மாவட்டங்கள் பயன்படலாம். அப்படி இல்லாமல் கோவை மாவட்டத்திலே தொடங்குவதில் எவ்விதப் பயனும் இல்லை. ஏற்கனவே அது தொழிலில் சிறந்து வளப்பத்திலே வளர்ந்திருக்கிறது. ஆகவே வறண்ட வட ஆற்காடு மாவட்டத்திலே தொடங்குவதே ஏற்றது என்று நான் கருதுகின்றேன். அதேபோல் நெசவாளர்கள் நல்வாழ்வு வாழ்வதற்கான திட்டம் எதுவும் கவர்னர் உரையிலே இல்லை. கைத்தறி, லுங்கிகளை வெளி நாடுகளுக்கு அதிகப்படியாக ஏற்றுமதி செய்தல். அதற்கு வேண்டிய சலுகைகள் செய்துகொடுத்தல் முதலியவை நிச்சயமாக கைத்தறி நெசவாளர்களுடைய பிரச்னையை ஓரளவுக்கு வெற்றி பெறச் செய்ய முடியுமென்று கருதுகின்றேன். அந்த அளவுக்கு சர்க்கார் செய்ய முன்வந்தால் எங்களுடைய ஒத்துழைப்பும் அதில் நல்ல முறையில் கிடைக்கும் என்று நான் கருதுகிறேன். எங்களைப்பற்றி அதிக குறைகளை எடுத்துக் கூறிய கனம் எதிர்க் கட்சி அங்கத்தினர்களுக்கு நாங்கள் ஏதாவது தவறாக நடந்திருந்தால் திருத்திக் கொள்கிறோம் என்று சொல்லிக் கொள்கிறேன். ஆனால் குறைகூற வேண்டுமென்ற எண்ணம் வைத்துக்கொண்டு, எங்களை மடக்கி மடக்கி பேசியவர்களும் இருக்கிறார்கள். இப்படி அவர்கள் பேசுவதிலே அர்த்தமே இல்லை என்பதைக் கூறிக் கொண்டு, என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

[24th April 1962

* **SRI K. S. NATARAJA GOUNDER :** கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் உரையின்மீது நன்றி செலுத்தி, ஆமோதித்து பேசும் வாய்ப்பு இந்த மன்றத்திலே கிடைத்ததற்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த சட்ட மன்றத்திலே எதிர்க்கட்சியாக இருக்கக்கூடியவர்கள் கவர்னர் அவர்களுடைய உரையின்போது இங்கே கலந்து கொள்ளாததைப் பற்றி நான் பெரிதும் வருத்தம் அடைகிறேன். அதற்கு காரணமும் சொன்னார்கள். ஜனநாயக நாட்டில், ஜனநாயக ரீதியாக தேர்ந்தெடுக்கப் படாமல், ஜனாதிபதியால், நியமனம் செய்யப்பட்டவரை நாங்கள் ஆதரிக்கவில்லை, ஆகவே நாங்கள் கலந்து கொள்ளவில்லை என்று சொன்னார்கள். ஆனால் ஜனநாயக ரீதியாக பார்லிமெண்ட் சம்பிரதாயத்தின்படி பார்த்தால், உண்மையிலேயே அவர்கள் ஜனாதிபதியால் நியமனம் செய்யப்பட்டாலும்கூட அங்கத்தினர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு, மக்களுடைய பிரதிநிதிகளால் ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப்பட்டு, அப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனாதிபதி பார்லிமெண்ட் சம்பிரதாயப்படி நியமனம் செய்யப் படுவதால், கவர்னர் அவர்களும்கூட ஜனநாயக ரீதியாக தேர்ந் தெடுக்கப்பட்டவரே ஆவார்கள். அப்படி இருந்தும், ஜனநாயக சம்பிரதாயத்தையும், ஜனநாயக முறைகளையும் அவர்கள் சரிவர புரிந்து கொள்ளாமல், ஏதோ ஜனநாயகம் என்று ஒரு காரணம் கூறி அவர்கள் கலந்து கொள்ளாததைப் பற்றி நான் வருந்து கிறேன்.

அதோடு இன்று கவர்னர் அவர்களுடைய உரையை ஆதரித்துப் பேசும் போது, எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் பலர் அதை எதிர்த் துப் பேசினார்கள். அரசாங்கத்தினுடைய கட்சியிலே இருப்பவர் கள் எதிர்ப்பது தவறு, அவர்கள் எப்போதும் ஆதரித்துக் கொண்டேதான் இருப்பார்கள் என்று சொன்னார்கள். ஆனால் எதிர்க் கட்சியிலே அங்கம் வகிக்கக் கூடியவர்கள் குறைகள் ஏதாவது இருந்தால், குறைகளை மட்டும் அவர்கள் அரசாங்கத்திற்கு எடுத்துக் காட்டலாமே ஒழிய, மன்றத்திலே சொல்லலாமே ஒழிய குறையாகவே எடுத்து பேசிக் கொண்டிருப்பது தான் தங்களுடைய கொள்கை, தங்களுடைய திட்டம் என்றிருந்தால், அதுவும் வருந்தத்தக்கதே. இன்று நல்ல முறையிலே மூன்றாவது பொதுத் தேர்தல் நடந்திருப்பது, இந்த மாபெரும் நிறுவனம் சிறந்த முறையிலே நடுநிலைமைக் கண்ணோட்டத்தோடு நல்லமுறையிலே ஜனநாயகத்திற்கு பாதுகாப்பு தந்து, நடுநிலைமையில் சேவை புரிந்து, வெற்றிகரமாக பணிகளை ஆற்றி இருப்பதை நாம் பாராட்ட வேண்டும். ஆனால் அதே சந்தர்ப்பத்திலே இந்த சபையின் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள், இவர்கள் எல்லாம் நடுநிலைமை தவறி விட்டார்கள், அதிகாரங்கள் எல்லாம் துஷ்பிரயோகம் செய்யப்பட்டது, ஜனநாயகத்திற்கு பாதுகாப்பு இல்லை, இன்னும் அமைச்சர்கள் எல்லாம் தலையீடு செய்தார்கள் என்று சொல்லியிருக்கிறார்கள். அவ்வாறு ஜனநாயகத்திலே நடுநிலைமையை கண்காணிக்காமல், அதிகாரிகள் நல்லமுறையிலே பணியாற்றாது இருந்திருந்தால், அமைச்சர்கள் தலையீடு இருந்தால், நண்பர்

24th April 1962] [Sri K. S. Nataraja Gounder]

கருணாநிதி அவர்கள் முதற்கொண்டு, அவருடன் அவரது 50 நண்பர்களும் இங்கு அமர்வதற்கு வாய்ப்புக் கிடைத்திருக்குமா, அப்போது அவர்கள் அமர வேண்டிய இடமே வேறாக இருந்திருக்கும் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ள விரும்புகிறேன்.

இன்று நாம் சோஷியலிச பாணியில் ஒரு புதிய சமுதாயத்தை, ஒரு நாகரிக சமுதாயத்தை நாம் உருவாக்கிக் கொண்டு இருக்கிறோம். அந்த சமுதாயத்தை உருவாக்குவதற்கான திட்டங்களை நாம் எவ்வளவு தூரம் வெற்றிகரமாக நடத்துகிறோமோ, அதைப் பொறுத்துத்தான் நாம் நல்ல சமுதாயத்தை அமைக்க முடியும். அதற்கு விஞ்ஞான அறிவும், தொழில் நுணுக்க அறிவும், நவீன எந்திர சாதனங்களையும், மின்சாரத்தைப் பயன்படுத்திக் கொள்ளும் அறிவும் நமக்கு இருந்தால் தான் முன்னுக்கு வரமுடியும். அந்த முறையிலே சிறந்த விவசாயத்திற்கு முன்னேற்றம் காண பல திட்டங்கள் தீட்டியிருக்கிறோம். பழமையை மாற்றியமைக்க முயற்சி செய்திருக்கிறோம். ஏனென்றால் மனிதன் பறவையைப் போல பறக்கக்கூடிய காலம் இது. அதேபோல் திமிங்கிலத்தைப் போல் கடலிலே நீண்டகாலம் நீந்தி வெகுநேரம் ஆழ்கடலிலே காற்றை அடக்கி இருக்கவும் செய்யக்கூடிய காலம் இது. ஆகவே, இந்த 20-ஆம் நூற்றாண்டிலே விவசாயத்திலே, தொழில் துறையிலே, கல்வித் துறையிலே புரட்சிகரமான மாறுதல்களைச் செய்வதற்கு இப்போது இந்த அரசாங்கம் பழமையை மாற்றியமைக்கின்றது. ஆகவே, இன்றைய தினம் விவசாயிகளை யெல்லாம் பழைய நிலையிலே இருந்து மீட்க வேண்டும். மீண்டும் மீண்டும் பழமைக்கே போகவிடக் கூடாது.

செத்த எருதின் மீது கலப்பைப் பூட்டி, செவிடன் ஏர் ஓட்ட குருடன் வழி காட்ட, மாதம் உழவு செய்யுமாம் காதவழி, என்பதையெல்லாம் மாற்றியமைப்பதற்காகத்தான் விஞ்ஞான ரீதியாக விவசாயத்தை இயந்திரங்களையெல்லாம் பயன்படுத்தி நல்ல பொறுக்கு விதைகளை உபயோகப்படுத்தி, விவசாயிகளுக்கு உரங்கள் விநியோகம் செய்து, மேலும் மின்சாரத்தை உபயோகப் படுத்தி, அதற்கு வேண்டிய பம்பு செட்டுகள் வைப்பதற்கு ஆகிய எல்லாவற்றிற்கும் கடன் உதவி வசதிகளை அரசாங்கம் தந்து, இன்று சிறந்த முறையிலே பணியாற்றி வருகின்றது. ஆனால் விவசாயத்திற்கு தண்ணீர் மிகவும் அவசியம்; இன்றியமையாதது. கனம் எதிர்க் கட்சி அங்கத்தினர் ஒருவர் பேசும்போது சொன்னார்கள். தங்கள் வட்டாரம் பாலைவனம் நிறைந்தது, எவ்விதப் பாசன வசதியும் கிடையாது என்று குறிப்பிட்டார்கள். அதேமாதிரி எங்களுடைய ஜில்லாவை எடுத்துக்கொண்டால், காங்கேயம், கொழுமங்குழி, வெள்ளக்கோயில் போன்ற பகுதிகளும் பாலைவனம் தான். ஆனால் அப்படி பாலைவனமாக உள்ள இடத்திலும் விவசாயம் செய்வதற்கு, கடல் தண்ணீரிலே விவசாயம் செய்வதற்கு, மலையின்மீது விவசாயம் செய்வதற்கு வேண்டிய அறிவையும், அதற்கான திறமையையும் கொடுப்பதற்காகத் தான் இன்றையதினம் அரசாங்கம் ஒரு பெரிய திட்டத்தை தீட்டி, அதற்கு வேண்டிய விஞ்ஞான அறிவு பெறுவதற்கு எல்லா இடங்களிலும்

[Sri K. S. Nataraja Gounder] [24th April 1962

ஆரம்பக் கல்வியை ஆரம்பித்திருப்பது பற்றி நான் பெரிதும் பாராட்டுகிறேன். ஆனால் தண்ணீர் கிடைப்பதற்கு இன்னும் பரம்பிக்குளம்—ஆலியாறு திட்டம் போன்றவைகளை ஆரம்பித் திருக்கிறார்கள். அது நிறைவேற்றப்படும்பொழுது, எங்கள் பகுதி யாகிய காங்கேயம், கொழுமங்குழி, வெள்ளக்கோயில் போன்ற இடங்களுக்கு தண்ணீர் அதிக ஏக்கர்கள் பாய்வதற்கு ஏற்பாடு செய்துதரவேண்டும். அதுதவிர பாதாள கிணறுகளைத் தோண்ட வேண்டியிருக்கும். அதனாலும் முழு பலன் கிடைக்காவிட்டால், செயற்கை மழை போன்றவற்றை அம்மாதிரி இடங்களில் பெய்ய வைப்பதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன். இப்போது பஞ்சாயத்துக்கும், பஞ்சாயத்து யூனியன்களுக்கும் சிறந்த மதிப்பு அரசாங்கத்தால் கொடுக்கப்பட்டு வருகிறது. இன்னும் அவைகளுக்கு அதிக அதி காரமும், நிதி வசதியையும் அரசாங்கம் தரவேண்டும். இன்று பஞ் சாயத்து யூனியன்களுக்கு விவசாய முன்னேற்றத்தை கொடுக்கக் கூடிய அரசாங்கம், அதே சந்தர்ப்பத்தில் சிறிய தொகையாகிய ரூ. 25,000 போன்ற அளவிலுள்ள சிறிய நீர்ப்பாசன திட்டங்களை நிறைவேற்றுவதற்கும், அதற்கான பொறுப்பையும் அரசாங்கம் பஞ்சாயத்து யூனியன்களுக்கு கொடுக்க வேண்டும். அதோடு உயர்தரக் கல்வியும், அதாவது ஹைஸ்கூல்களும் பஞ்சாயத்து யூனியன்களிடத்தில் கொடுக்கப்படவேண்டும். மருத்துவ மனை களும் பஞ்சாயத்து யூனியன்களிடம் ஒப்படைக்கவேண்டும். பஞ் சாயத்து யூனியன்களுக்கு இன்னும் அதிகமான அதிகாரத்தைக் கொடுத்தால் தான், 'அதிகாரம் சேவைக்காக' என்ற சிறந்த முறை யில் பஞ்சாயத்து யூனியன்கள் பணியாற்ற முடியும். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே அவைகளுடைய திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்ற முடியும் என்பதில் சந்தேகம் இல்லை என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அதோடு மின்சாரத் துறையிலே நம்முடைய தாய்த்தமிழகம் மிகவும் வேகமாக முன்னேறிக்கொண்டிருக்கிறது, பாரதத்தில் முன் னணியில் நிற்கிறது. விவசாயத்திற்கும் மின்சாரம் அதிகமாக கொடுக்கப்படுகிறது. ஆனால், அதே சமயத்தில் விவசாயிகளுக்கு ஹார்ஸ் பவர் ஒன்றுக்கு ரூ. 50 அதிக கட்டணம் விதிக்கப்படு வதைக் குறைத்து, இம்மாதிரி பஞ்சப் பிரதேசங்களாக இருக்கிற தாராபுரம் போன்ற தாலுக்காக்களிலாவது ஹார்ஸ் பவர் ஒன்று க்கு 15 ரூபாயாக ஆக்கவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அதோடுகூட நண்பர் கருணாநிதி அவர்கள் தன்னுடைய உரை யை முடிக்கும்பொழுது கவர்னர் பெருமானுடைய உரை பிணி தீர்க் கும் மருந்து அல்ல என்று சொன்னார்கள். உண்மையாகவே, நாம் சிந்தனை செய்துபார்ப்போமேயானால் தீராத பிணிகளையெல்லாம் தீர்க்கும் மருந்து கவர்னர் பெருமான் அவர்களுடைய உரை. ஆனால், அளவோடு, காலம் தவறாமல், பத்தியம் பிறழாமல் உண் டால் நிச்சயம் தீராத பிணிகளையெல்லாம் தீர்க்கும் மருந்து அது. தமிழகம் முன்னணியில் நின்று, நல்ல முன்னேற்றம் அடைந்து

24th April 1962] [Sri K. S. Nataraja Gounder]

விரைவிலே நம்முடைய திட்டங்களெல்லாம் நிறைவேற்றப்பட்டு நாம் க்ஷேமமாக நல் வாழ்வு வாழமுடியும் என்பதைச் சொல்லிக் கொண்டு, ஜனநாயகத்தையும், பார்லிமெண்டரி சம்பிரதாயத்தையும், ஆளும் கட்சியைக் காட்டிலும், எதிர்க்கட்சியினர்தான் அதிகம் போற்றி வளர்க்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இந்த உரையின்மீது பேச சந்தர்ப்பம் அளித்ததற்கு என் நன்றியை தெரிவித்துக் கொள்ளுகிறேன், வணக்கம்.

III. ANNOUNCEMENTS—*cont.*

BUSINESS OF THE HOUSE.

MR. SPEAKER : I have to announce to the House that at a meeting of the Business Advisory Committee held to-day, the following programme of business was decided for the present sitting of the Assembly :

| | |
|---|---|
| April 25th .. .. .. | Discussion on the Motion of Thanks to Governor's Address. |
| April 26th .. .. .. | |
| April 27th .. .. .. | |
| April 28th .. .. .. | Consideration and passing of the Madras Sugar Factories Control (Amendment) Bill, 1962. |
| May 4th .. .. .. .. | Official Bills. |
| May 5th .. .. .. .. | Discussion on the Madras State Electricity Board Budget for the year 1962–63. |
| May 7th .. .. .. .. | |

The House will meet at 10 a.m. on the 4th May 1962, and on all other days at 8-30 a.m. as usual.

The House will now adjourn and meet again at 9–30 a.m. to-morrow.

The House then adjourned.

VIII.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

**A. Statutory Rules and Orders.**

36. *Notification issued with G.O. Ms. No. 587, Revenue, dated 7th February 1962, regarding relaxation of rule 27 of the rules framed under clauses (q), (r) and (s) of sub-section (2) of section 100 of the Madras Hindu Religious and Charitable Endowments Act, 1951 (Madras Act XIX of 1951) and continued in force by virtue of clause (a) of sub-section (2) of section 118 of the Madras Hindu Religious and Charitable Endowments Act, 1959 (Madras Act 22 of 1959) in respect of transactions relating to the gift of one spare Lingam with Avudayar belonging to Sri Rameswaram Devasthanam, Rameswaram, Ramanathapuram district to Sri Viruthapureeswarar temple, Thiruppunavasal, Thanjavur district. [Laid on the Table of the House under section 116 (3) of the Madras Hindu Religious and Charitable Endowments Act, 1959 (Madras Act 22 of 1959).]*

[24th April 1962

37. *Notification issued with G.O. Ms. No. 3622, Home, dated 20th October 1962, revising the form prescribed for refund under the Madras Court Fees and Suits Valuation Act, 1955 and Civil Procedure Code, in G.O. Ms. No. 1603, Home, dated 31st May 1960 published at page 1157 of Part I of the* Fort St. George Gazette, *dated 29th June 1960. [Laid on the Table of the House under section 82 (2) of the Madras Court Fees and Suits Valuation Act, 1955 (Madras Act XIV of 1955).]*

38. *Notification issued with G.O. Ms. No. 379, Revenue, dated 29th January 1962 amending the Madras Agricultural Income-tax Rules, 1955, published with the Revenue Department notification, dated the 17th December 1955 at pages 649-665 of the Rules Supplements to Part I of the* Fort St. George Gazette, *dated the 21st December 1955 the same having been previously published. [Laid on the Table of the House under section 61 (3) of the Madras Agricultural Income-tax Act, 1955 (Madras Act V of 1955).]*

39. *Notification issued with G.O. No. 136, Public (General-M), dated 23rd January 1962 regarding the amplification of proviso to notification issued under section 4 of the Madras Official Language Act, 1956 relating to the introduction of Tamil as official language and the use of English for certain official purposes. [Laid on the Table of the House under section 6 of the Madras Official Language Act, 1956 (Madras Act XXXIX of 1956).]*

40. *Notification issued with G.O. Ms. No. 44, Revenue, dated 3rd January 1962, appointing the 1st February 1962 as the date on which the provisions of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act, 1948, other than sections 1, 2, 4, 5, 7, 8, 58-A, 62, 67 and 68 which have already come into force, shall come into force in the Andikadu inam estate of Koilpatti taluk in Tirunelveli district. [Laid on the Table of the House under section 67(4) of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act, 1948 (Madras Act XXVI of 1948).]*

41. *Notification issued with G.O. Ms. No. 5237, Revenue, dated 4th December 1961, exempting from sales tax and registration the sale by agriculturists of cotton seed obtained by them from out of cotton grown by them. [Laid on the Table of the House under section 53 (5) of the Madras General Sales Tax Act, 1959 (Madras Act I of 1959).]*

42. *Notification issued with G.O. Ms. No. 4448, Home, dated 19th December 1961 amending the Madras Spirituous Essences Rules, 1959, published with the Home Department Notification S.R.O. No. A-1798 of 1959, dated the 16th March 1959 at pages 188 to 218 of the Rules Supplement to Part I of the* Fort St. George Gazette, *dated the 25th March 1959 as subsequently amended. [Laid on the Table of the House under section 54 (3) of the Madras Prohibition Act, 1937 (Madras Act X of 1937).]*

24th April 1962]

43. *Notification issued with G.O. Ms. No. 368, Rural Development and Local Administration, dated 16th February 1962, amending the Rules relating to the "Restrictions and Control over execution of Kudimaramat by Panchayats—Levy of fees by Panchayats", published with Rural Development and Local Administration Notification S.R.O. No. A-489 of 1961, dated the 26th April 1961 (Notification No. 82), at pages 34 and 35 of Supplement to Part V of the Fort St. George Gazette, dated the 10th May 1961, the same having been previously published. [Laid on the Table of the House under section 179 (4) of the Madras Panchayats Act, 1958 (Madras Act XXXV of 1958).]*

44. *Notification issued with G.O. Ms. No. 4548, Home, dated 28th December 1961, regarding the collection of motor vehicles tax at reduced rates in respect of the Ambulance Van MDO 3165 belonging to the Mahatma Gandhi Memorial Tuberculosis Sanatorium, Sengipatti, Thanjavur district with effect and on from 20th May 1961. [Laid on the Table of the House under section 11(2) of the Madras Motor Vehicles Taxation Act, 1931 (Madras Act III of 1931).]*

45. *Notification issued with G.O. Ms. No. 7322, Industries, Labour and Co-operation (Industries), dated 30th December 1961 amending the Madras Small Scale and Cottage Industries Loans and Subsidy Rules, 1956, published with Industries, Labour and Co-operation Department Notification No. 34, dated 20th August 1956, at pages 439—453 of the Rules Supplement to Part I of the Fort St. George Gazette, dated the 29th August 1956, as subsequently amended. [Laid on the Table of the House under section 19 of the Madras State Aid to Industries Act, 1922 (Madras Act V of 1923).]*

46. *Notification issued with G.O. Ms. No. 397, Home, dated 25th January 1962, amending the Madras Motor Vehicles Rules, 1940, published with Home Department Notification No. 357, dated the 29th March 1940, at pages 1 to 40 of the Fort St. George Gazette, dated the 30th March 1940, as subsequently amended. [Laid on the Table of the House under section 133 (3) of the Motor Vehicles Act, 1939 (Central Act IV of 1939).]*

47. *Notification issued with G.O. Ms. No. 756, Home, dated 21st February 1962, amending the Madras Cinemas (Regulation) Rules, 1957, published with the Home Department Notification S.R.O. No. A-701 of 1957, dated the 19th January 1957, at pages 79 to 104 of the Rules Supplement to Part I of the Fort St. George Gazette, dated the 30th January 1957, as subsequently amended. [Laid on the Table of the House under section 10 (3) of the Madras Cinemas (Regulation) Act, 1955 (Madras Act IX of 1955).]*

[24th April 1962

**B. Reports, Notifications and other papers.**

14. *Notification issued with G.O. No. 565, Rural Development and Local Administration, dated 13th March 1962, issuing the "Madras Cottage Industries Construction and Establishment (Restrictions, Limitations and Conditions) Rules, 1960", the same having been previously published as required by sub-section* (1) *of section* 130 *of the Madras Public Health Act,* 1939 (*Madras Act III of* 1939).

15. *Notification issued with G.O. Ms. No. 566, Rural Development and Local Administration, dated 13th March* 1962, *in supersession of the Rural Development and Local Administration Department Notification II-2 No. 409 of 1960, dated the 26th October 1960 and published at page 212 of Part II—Section 2 of the* Fort St. George Gazette, *dated the 26th October 1960, specifying the Cottage Industries permissible in notified residential areas under proviso to clause (a) of section 92 of the Madras Public Health Act, 1939 (Madras Act III of 1939).*

16. *Assurance No.* 1529 *regarding answer to Legislative Assembly Starred Question No. 2244, asked by Sri A. R. Marimuthu on 12th December* 1961 *relating to the number of areas of land cultivated under eris and tanks repaired in Thanjavur district during* 1960–61.

17. *Government review on the working of the Madras Industrial Investment Corporation, Limited, Madras, for the year ended 30th June* 1961.

## APPENDIX

Sri R. V. Swaminathan and Sri V. Sankaran took the prescribed oath before the Hon. Speaker in his Chamber on 23rd April 1962.

## APPENDIX I.

[Vide answer to starred question No. 1 asked by Sri M. Kalayanasundaram at the Legislative Assembly meeting held on 24th April 1962, page 46, Supra.]

*Statement showing the details of the scheme for granting old age pension to aged destitutes.*

The Madras Old Age Pension Scheme takes effect from 1st April 1962. This scheme provides for the grant of pension to destitutes of 65 years of age and over and to destitutes of 60 years of age and over who are incapicitated to earn a living due to blindness, leprosy, insanity, paralysis or loss of limb. The pension payable to each destitute is Rs. 20 per mensem. Under the rules governing the scheme a destitute is defined as a person without any income or source of income who has no relatives of 20 years of age and over of the following categories :—

(i) Son;

(ii) Son's son; and

(iii) Husband/Wife.

Provided that—

(i) a person will be deemed to be a destitute if all the relatives falling within the categories specified above are themselves without any income or source of income, such a fact being proved to the satisfaction of the sanctioning authority; or continuously missing and the sanctioning authority has satisfied himself by such enquiry as he deems necessary that the relatives are so missing.

(ii) a person will be deemed to be a destitute if the wife has attained the age of 55 years.

Where both the wife and the husband are destitutes according to the definition, each of them will be eligible for a pension. Professional beggars and mendicants will not be considered to be destitutes but persons who are not actual beggars by profession but receive occasional assistance from people will be allowed pensions if they are otherwise eligible.

Verification of age will be done with reference to the Electoral rolls and the National Register of Citizens of the areas concerned and such other sources as are available so as to be reasonably satisfied about the averment of the applicant. In cases where there is doubt as to the age of the applicant, the enquiry officer may call for the opinion of the medical officer of the nearest Taluk Headquarters Hospital or Primary Health Centre and then arrive at his conclusion regarding age.

[24th April 1962

The pension may be stopped if it is found that it was sanctioned on mistaken grounds or false information or the conditions for the grant of pension no longer exist (e.g. by the pensioner resorting to habitual begging).

The amount of pension will be sent to the pensioner to his address through postal money order without deducting the money order commission. The Revenue Divisional Officer of the Division in which the destitute is residing is the authority competent to sanction the pension. The District Collectors wll be in overall charge of the scheme within their districts.

## APPENDIX II.

[Vide item VII on page 61]

### Address by the Governor of Madras.

*Hon'ble Members of the Legislature,*

It is my pleasant privilege to welcome you all to this joint session of the new Legislature. To the members who have been newly elected to this Legislature, I extend my special greetings.

2. I note with relief and satisfaction that the vast organisation improvised for the conduct of the general elections functioned with smooth efficiency. Much credit is due to the general public, who exercised their franchise with composure and judgment without being excited by the dust and din of the political controversies aroused around them. An expression of our warm appreciation is also due to the different ranks of public servants who discharged their onerous duties with commendable patience and impartiality.

3. I am happy that the new Ministry has entered on its duties with speed and assurance. The compact Cabinet is indeed a happy blend of administrative experience and youthful energy and let us all join together to wish this teamgood-speed and good luck in its arduous mission.

4. The proper implementation of Five-Year Plan is undoubtedly the major pre-occupation of the Government. We have just completed the first year of the Third Plan. As against an original Budget provision of Rs. 48 crores for the year just ended, the actual performance would amount to a little over Rs. 50 crores. A provision of Rs. 55 crores has been made for the current year, but on the present tempo of works, the actual outlay may be nearer Rs. 60 crores. We may therefore confidently hope that the targets set in the Third Plan, would all be reached and even exceeded as we did in the Second Plan, provided we strain to raise the necessary additional resources. The Central assistance on our Plan of Rs. 291 crores, has been fixed at Rs. 190 crores and therefore we can implement a larger Plan only to the extent we can find fresh resources. The recent award of the Finance Commission has improved our revenue position appreciably by about

Rs. 2-1/2 crores per annum. But our commitments on ameliorative services such as educational fee concessions, free mid-day meal scheme, old age pensions, etc., are also growing. The new Finance Minister may be expected to deal with these questions in detail when he presents the regular Budget for the year in June.

5. Financial resources are indeed important, but that is not the only factor in the successful implementation of a Plan. Money can go down the drain if we do not build up matching administrative competence. The vast sums ear-marked in the Plan for schemes of agricultural development, village industries, rural sanitation or elementary education, can yield a full return only if we enthuse the vast rural population, on the Plan and secure their intelligent co-operation. That is the real significance of the panchayat reform which we have recently introduced all over the State. The responsibility for formulating a Plan of rural development and implementing the same, is being shifted from official agencies to representatives of the people in the villages. Every Panchayat Union has since formulated for itself a Five-Year Plan of development for the Block in its charge and an unprecedentedly large works-programme, is now being implemented by these bodies. Within the village, each Panchayat is being encouraged to formulate its own programme of agricultural production. The enthusiasm shown by the Panchayat Unions and Panchayats and particularly their willingness to accept responsibility for raising local resources for implementing their programmes do give us a measure of hope for the future.

6. The various schemes for the development of agriculture, such as the multi-purpose Parambikulam-Aliyar Project, the Minor Erigation Programme of repairs and renovation of irrigation tanks, son conservation schemes and village afforestation programmes are all making satisfactory progress. The Package plan already introduced in the Thanjavur district is being extended to cover the remaining areas of that district. We had increased food production by about 9 lakhs taking the total production to about 53 lakhs of tons during the Second Plan. A target of 16 lakhs tons of additional production has been set for the Third plan and intensive efforts are now being made to reach this target by providing irrigation facilities, Chemical fertilisers improved seeds and other measures of intensive cultivation. A new scheme for the setting up of a Deep-sea fishing unit with Japanese collaboration is now under the active consideration of the Government.

7. The development of electric power continues to engage the special attention of the Government. All the generation schemes initiated during the Second Plan have been completed, raising the installed capacity of the Grid to 571 M.Ws. Rapid progress is being made in the final stage of the Kundah scheme and the Mettur Tunnel scheme included in the Third Plan. The first generator

of the Neyveli Thermal Plant of 50 M.Ws. is expected to go into commission presently and this would bring in the necessary relief to the over-strained Grid during the present lean period. The rural electrification programme continues to make rapid progress with a target of about 1,500 villages per annum and at the present pace the bulk of the country-side can be expected to be covered during this Plan period. About 137,000 agricultural pump-sets are now being operated with electric power, making a substantial contribution to the Grow More Food effort. In the meanwhile proposals are under the consideration of the Government for a new large generating station on the Cauvery at Hogenakal with the co-operation of the Mysore Government. A High Power Committee of the Atomic Energy Commission is also looking round for a suitable site in this State for the location of an Atomic Power Plant.

8. Aided by cheap power from our electric Grid and various other facilities provided by the Government the private sector is making appreciable progress in setting up industries in the State. The new paper factory is expected to go into production this year. Work has commenced on the Madras Aluminium Company at Mettur. Negotiations are now in progress with industrialists for the setting up of a large Alloy Steel Plant, Fertiliser Plant and three Sugar factories. Turning to the public sector, the different components of the integrated Neyveli Project are all progressing satisfactorily. The Lignite seem has been successfully exposed and kept in readiness for utilisation as the industrial plants go into commission. The capacity of the power station is being increased from 250 to 400 M.Ws. as a part of the Third Plan. Samples of the lignite and the Salem iron ore have been despatched to Germany, Norway and also Jamshedpur for conducting the necessary pilot experiments for preparing a scheme-report for the commercial exploitation of the Salem iron ores. The results so far have been encouraging and we may hope that a beginning can be made on the new steel unit during this Plan period. Work has commenced on the Heavy Boiler Plant at Tiruchirappalli, the Photo-film factory at Ootacumund and the Surgical Instrument Plant at Guindy. The Ministry of Defence has already started the construction of a large factory for heavy defence vehicles at Avadi and we may hope that the manufacture of some other major Defence equipments will also be located around that place.

9. On the side of communications the scheme for the development of Tuticorin as a major port has been sanctioned by the Government of India and preliminary works have commenced. This Government have appointed a High Power Committee with a Special Officer to keep liaison with the authorities of the Government of India and also to plan and regulate the industrial growth of Tuticorin. The expansion programme of the Madras Harbour is nearing completion and the new berths for handling the growing traffic may be commissiond shortly. Work has just commenced on the New Railway lines of Salem-Bangalore and Virudhunagar-Manamadurai. The doubling of the congested sectors of the main

